# வாலி வழக்கில் தீர்ப்பு



பி.சி.சீதாபதி

'குறளடிமை'



அபிராமி பப்ளிகேஷன்ஸ்

# வாலி வழக்கில் தீர்ப்பு



பி. சி. சீதாபதி

(குறளடிமை)

அபிராமி பப்ளிகேஷன்ஸ்

307, லிங்கி செட்டி தெரு,

சென்னை-600 001.

# முன்னுரை

கம்பன் காவியத்தில் 'வாலி வழக்கு' ஒரு சிக்கலான நிகழ்ச்சியாகப் பொய்த் தோற்றம் அளிக்கின்றது. 'வாலி வதை நியாயமானதே' என்பார் இராம பக்தியால் கண் களி மயக்கம் கொண்டவர்களாய்த் தங்கள் முடிவுக்கேற்ப வாதங்களை முன் வைக்க வருகின்றார்கள். உன்னிப்பார்த் தால் அஃது அவர் தம் மனச்சான்றுக்கே விரோதமானது என உணர்வர். அதனாலேயே, அஃது ஒரு சிக்கலான நிகழ்ச் சியாகப் படுகின்றதேயன்றி, இராமன்பால் விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் ஆய்வார்க்கு அஃது அறத்தின்பாற்பட்டது ஆகாது என்பது தெற்றெனெ விளங்கும். இதனைப் படிப் படியாக விளக்கி அந்த விளக்கங்களினால் நாம் நம், வாழ்வில் வாழ்வாங்கு வாழ்தற்கு அடிப்படையான, ஆதார சமநிலை நியாயங்களை உணர்ந்திடச் செய்ய வேண்டும் என்று முயல்வதே இந்நூலின் நோக்கம்.

''இராமகாதை இந்த நாட்டில் பயின்று வரத் தொடங்கிய நாள் முதலாக மிகப் பெரிய கேள்விக்குறியாக இருப்பது வாலிவதை அல்லது வாலி மோட்சம் எனப்படும் பகுதியே. வாதிடும் அறிஞர்கள் கேள்விக் கணைகளால், ஆராய்ச்சிக் கூர் வாளால், துளைத்தும் அறிந்தும் முடிவு காணாதஒருசிக்கலாகஇப்பகுதிதிகழ்கிறது. காப்பிய ஒருமைப் பாடு என்று ஒன்று உண்டு. நிகழ்ச்சியின் முன்பின் தொடர்ச் சிகளை இணைத்துப் பார்த்தால்தான் அதுபுரியும்.'' என்பார் அமரர் பி.ஸ்ரீ. ஆசாரியா, 'கம்பன் கலைக்கோயிலுக்கு ஒரு கை விளக்கு' என்னும் நூலுள், 'வீரன் வில்லறம் துறந் தானா?' என்ற தலைப்பிலான பகுதியில். (43)

காரைக்குடி கம்பன் கழகத்தின், 1982ம் ஆண்டு மலரில் பெருமதிப்பிற்குரிய வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜகந் நாதன் அவர்கள் 'வாலிவதை' என்ற தலைப்பில் எழுதியுள்ள கட்டுரையைப் படித்தேன். அவர், 'வாலிவதை நியாய மானதே' என்பதற்கு ஆதாரமாகக் கொண்ட கருத்துக்

களில் மனம் செலுத்தினேன். அவைகளெல்லாம் 'வாலி வதை நியாயமற்றதே' என உறுதிப்படுத்துவதற்கேற்ற அடிப்படைகளாகவே உள்ளன என என் உள்ளுணர்வு உரைத்தது. எனவே, என் கருத்துக்கு இயைய கட்டுரையொன்று எழுத எண்ணினேன்.

அதே மலரில், புலவர் மணி சித்தாந்த வித்தகர் திரு. முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்களின் கட்டுரையொன்றும், 'இது பொருந்துமா?' என்ற தலைப்பில் கண்டேன். அதனில் திரு. கி. வா. ஜ. அவர்களின் ஒரு கருத்திற்கு மாறுபட்ட கருத்தை எடுத்துரைத்துப் பிற பெரியோர்களின் சிந்தனையைத் தூண்டிவிட்டிருக்கக் கண்டேன். அதாவது "இராமன் வாலியைக் கொன்றது 'போர்' முறையிலானதா? இல்லையா?" என்பதே.

எனவே திரு. செட்டியார் அவர்கள் எழுதியுள்ள 'வாலி வதம் சரியா?' என்ற நூலையும், 'வாலி வழக்கு' என்ற தலைப்பில் முத்தமிழ்ப் பெருஞ் சொற் கொண்டல் புரிசை திரு. சு. முருகேச முதலியார் அவர்கள் எழுதியுள்ள நூலையும், 'கம்பர் தரும் ராமாயணம்' என்ற தலைப்பில் குற்றால முனிவர்—ரசிகமணி—திரு டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் பதிப்பித்த நூலுள் அவர் தந்துள்ள விளக்கங்கள், குறிப்புரைகள் ஆபவற்றையும், மூதறிஞர் இராஜாஜீயவர்கள், 'சக்கரவர்த்தித் திருமகன்' என்ற தலைப்பில் வெளியிட்ட இராமாயண நூலையும், டாக்டர் திரு எஸ். இராமகிருஷ்ணன் அவர்களின் 'சிறியன சிந்தியாதான்' என்ற நூலையும், மாண்புமிகு முன்னாள் தலைமை நீதிபதி திரு. மு.மு. இஸ்மாயீல் அவர்களின் 'கம்பன் கண்ட இராமன்' என்ற நூலுள் 'வாலி வதையும், தீக்குளிப்பும்' என்ற கட்டுரைப் பகுதியையும், திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் 'கட்டுரைக் கனிகள்' என்ற நூலுள் 'வாலி வத நியாயம்' என்ற கட்டுரைப் பகுதியையும், 1978ம் ஆண்டில் வெளியிடப் பெற்ற திருமதி. ச. சிவகாமி. எம். ஏ. (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்த ஆய்வாளர்) அவர்களின் 'கம்பன் ஆய்வடங்கல்' என்ற தொகுப்பு நூலை

யும், திரு. பழ. பழநியப்பன் அவர்கள் எழுதியுள்ள, 'கம்பன் விசுவரூபம்' என்னும் நூலையும், வை. மு. கோ. அவர்களின் இராமாயணப் பதிப்பையும், ரைட்ஹானரபிள் V. சீனிவாச சாஸ்திரிகளின் இராமாயண ஆங்கில உரைகள் அடங்கிய நூலையும், பெ. இராமானுஜன் அவர்கள் எழுதியுள்ள 'பொய்யுரையாத புண்ணியன்' என்னும் நூலையும், பற்பல கம்பன் கழகங்களில் வெளி வந்துள்ள கட்டுரைகளையும் என் ஆய்விற்கான துணை நூல்களாய் ஏற்றேன். ஆய்வு பெருகி விரிந்து ஆழ்ந்து சென்று, கட்டுரை நிலைமாறி இந்நூலாகி மலர்ந்துள்ளது.

மேற் குறிப்பிட்ட பெரியவர்களின் கருத்துக்களையும் ஒரு சார்பாய் ஏலாது, ஏற்புடையன ஏற்றும், ஏலாதன நீத்தும்—ஏன் ஒரோ வழி மறுத்தும்—என் கருத்துக்களை வலியுறுத்தி, என் மனச் சான்றுக்கு மாறுபடாத நோக்குரையால் வெளியிட்டிருப்பதாலேயே இந்நூற்கு 'வாலி வழக்கில் தீர்ப்பு' எனத் தலைப்பிடத் துணிந்தேன்!

''எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

என்ற செந்நாப் போதாரின் அறக்கட்டளைகளின் அடிப்படையில் ஆய்வினை மேற்கொண்டுள்ளேன்.

தமிழ் கூறும் நல்லுலகம், கம்பன் காவியப் பேருலகம் இத்தீர்ப்பிற்கு எதிரிடையாக எழுதுவது இயலாதென்றே துணிகின்றேன்! மாறுபடுவோர் மனம் விட்டு வெளிப்படுத்தலாம்.

(குறிப்பு ; கம்பன் பாடல்களின் பக்கலில் குறிப்பிடப் பட்டுள்ள எண்கள், சென்னை கம்பன் கழக 'கம்பராமாயண பதிப்பின்' பக்கத்தையும் பாடலின் எண்ணிக்கையும் காட்டி நிற்கின்றன. பிற ஆசிரியர்களின் பெயர்களுக்கு அடுத்து அடைப்புக் குறிகளில் வரும் எண்கள், அவரவர் நூல்களில் அந்தந்த மேற்கோள்கள் வந்துள்ள பக்கங்களின் எண்ணிக்

கைகளையும் 'க. ஆ' என்பது 'கம்பன் ஆய்வடங்கல்' என்பதனையும் குறிக்கும்.)

இந்நூலை ஆர்வத்துடன் வெளியிட முன்வந்த சென்னை 'அபிராமி பப்ளிகேஷன்ஸ்' உரிமையாளர் திரு. கா. பனையப்பன் அவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கம் செலுத்துகின்றேன்.

இந்நூற் கையேட்டைச் செப்பனிட்டுத் தந்துதவிய பேரன்பர் திரு. நா. சந்திரசேகரன் (ஆசிரியர், சிந்தாதிரிப்பேட்டை மேல் நிலைப் பள்ளி, சென்னை-2) அவர்களுக்கு நன்றியும் பணிவன்பும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். இந்நூலின் படிவங்கள் எடுப்பதில் எனக்குப் பெரிதும் உதவிய, வாழப்பாடி இளைஞர் திரு.ஷாஹின்ஷா நாஸருக்கு என் நன்றி கலந்த ஆசிகள்.

இந்நூலினை அழகுறக் குறித்த காலத்தில் அச்சிட்டுத் தந்த ராம்ஸ்ரீ அச்சகத்தார்க்கு என் நன்றி கலந்த பாராட்டுக்கள்.

இந்நூலினைச் சேலம் கம்பன் விழாவில் வெளியிட அனுமதி அளித்துப் பெருமைப்படுத்திய சேலம் கம்பன் கழகத் தலைவர் திரு. என். இராமசாமி உடையார் அவர்களுக்கும், செயலாளர் திரு. ப. கந்தசாமி அவர்களுக்கும் இவர் உள்ளிட்ட அனைத்து நிர்வாகிகளுக்கும் என் உளங் கனிந்த தொண்டுமன நன்றி.

அனைத்திற்கும் மேலாக என்னை நூல் எழுத அருள் கூட்டிய இறைவனுக்கும் அதனில் என்னை ஊக்குவித்துக் கொண்டேயிருக்கும் என் ஞானத் தந்தையார் கம்பன் அடிப்பொடி ஐயா அவர்களின் தூய ஆன்மாவிற்கும் என் இடையறாத வணக்கங்களைச் செலுத்துகின்றேன்.

கம்பன் அடிப் பொடியாரின்
திருவடிப் பொடியன்
**பி. சி. சீதாபதி**

# ஆசிரியர்க்கு
# அறிஞர் தம் ஆசியுரைகள்

## கம்பன் கழகம், காரைக்குடி

உங்கள் உரையாய்வுக் கடிதப்! என்னத்தைச் சொல்வேன்! தெள்ளக் கேட்டு, தெளிய ஆய்ந்து. சிறக்க வெளிப்படுத்தி யுள்ளீர்கள். செவ்வியறிந்து சிந்தை மகிழ வாழ்த்துகிறேன். வணக்கம் புரி கிறேன். வாழ்க நும் திறனாய்வு! வளர்க தமிழ்ப் பணி!

*19—4—69* சா. கணேசன்

'கம்பன் திருநாள் நிகழ்ச்சிகளின் திறனாய்வு' பெற்றேன். இன்றே! நன்றி; உங்களின் ஆர்வத்தை யும், ஒளிவு மறைவில்லாத கருத்தையும் மனமாரப் பாராட்டுகிறேன்.

இத்தகைய மதிப்புரையை மனமார மதித்து ஏற்றுக் கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய மனத் தெம்பையும் மதி நுட்பத்தையும், கரவிலா உள்ளத்தையும் பெற்றுள்ள உங்களை வாயார வாழ்த்துகிறேன். வணங்குகின்றேன்.

*23—2—72* சா. கணேசன்

உங்கள் 'அருமையான நோக்குரை'க்கு எப்படிப் பாராட்டை—நன்றியைப் புலப்படுத்து வேன்? எல்லாம் மிக நுணுக்கமாக நோக்கிக் குறை யும் நிறையும் திறமையாகப் புலப்படுத்தப் பெற் றுள்ளன. இவற்றை எல்லாம் எவ்வளவு மதித்துப் போற்றிமகிழ்கிறேன்—பயனடைகிறேன் என்பதை

எப்படிக் காட்ட வல்லேன்! காமராக் கண்ணோடும் நக்கீர நோக்கோடும் அணுகி, ஆய்ந்து, கண்ட முடிவைக் கரவாது காட்டும் வெற்றியை வாழ்த்தி வணங்கி ஏற்கிறேன். வாழ்க உங்கள் அன்பு!

26—1—75 கம்பன் அடிப்பொடி

இங்ஙனம் மிக்க ஈடுபாட்டுடன்—பரிவுடன் திறனாய்வு செய்து உபகரிக்கும் சேவையைப் பெரிதும் மதித்து வரவேற்று நன்றி கூறுகிறேன்.

26—1—75 கம்பன் அடிப்பொடி

## அருள் திரு பாலமுருகன் திருக்கோயில்

இரத்தினகிரி (வடார்க்காடு மாவட்டம்.)

அருளாசி. தங்கள் கடிதம் கண்டு மகிழ்வு.

தங்களுடைய கருத்துரையினை ஆய்வு நோக்கிலேயே விளக்கிடக் கோருகிறேன். தயக்கத்திற்கே இடமில்லை.பலரின்கருத்துக்களை(புரசை முருகேச முதலியார் அவர்களின் 'வாலி வழக்கு' எனும் நூல் பற்றி) சேர்க்க வேண்டுமென்ற நோக்கத்தில் இதில் ஈடுபடலாயினேன்.

நலன்கள் யாவும் பெற்றிட வாழ்த்தும்.

21—11—77 பால முருகனடிமை

## கலைமகள் காரியாலயம், சென்னை

கோபிக் கவியரங்கில் தாங்கள் பாடிய கவிதையைக் கண்டேன்; படித்தேன்; இன்புற்றேன். அன்று கேட்டதைவிட இன்று படித்துப் பார்த்ததில் அதன் சுவையைக் காண முடிந்தது.

21—1—78 கி. வா. ஜகந்நாதன்

சீதா பதியென்னும் சேலத்து நண்பரை
தீதாரா உள்ளத்து செம்மலை—ஆதரவில்
கண்டேன் களி கூர்ந்தேன் காதலுடனுரைகள்
விண்டேன் விழைவு மிகுந்து.

தங்கல் : பூம்புகார் கி. வா. ஜகந்நாதன்

*17—6—1951*

## மகாகவி அ. கு. ஆதித்தனுர், சென்னை

மேதா விலாசம் மிக நன்று! மிக நன்று!

சீதாபதியார்க்குச் செப்புகிறேன் பல்லாண்டு.

*19—10—77* அ. கு. ஆதித்தனுர்

## கம்பன் கழகம், திருவாரூர்

காரைக்குடி கம்பன் மலரில் தாங்கள் எழுதியுள்ள 'மண்டோதரி மறுகுகின்ருள்' என்ற அற்புதமான கட்டுரையைப் படித்து மிகவும் மகிழ்ந்தேன். தெளிவான ஆராய்ச்சி! புதுமையான அணுகுமுறை! நல்ல கருத்தோட்டம்! இனிய நடை! திருக்குறள் மேற்கோள்கள்! இவையெல்லாம் தங்கள் நுண்மான் நுழைபுலத்தை எதிரொலிக்கின்றன.

படித்து அயர்ந்து போனேன். இப்படியெல்லாம் சிந்தித்து எழுத தங்களுக்கு நேரம் ஏது என்று, இப்போது நான் புரிந்து கொண்டேன்—தாங்கள் வாசிப்பது மட்டும் தமிழை அல்ல, சுவாசிப்பது தமிழையே என்று!

தங்கள் தூயபணி தொடரட்டும்!

தங்கள் நெஞ்சில் இலக்கிய மலர்கள் மலரட்டும்!

*28-3-81* கலைமாமணி மா. வரதராஜன்

திரு. சீதாபதியின் மிகச் சுவையான மதிப்புரையில் சில பகுதிகளைப் படித்தேன். உயர்ந்த தமிழறிவு, தமிழ்க் காதல் இவற்றுடன் நல்ல அறிவுத் தெளிவும் அமையப் பெற்றவர். அன்பு மிகுந்தவர். அவருடைய மதிப்புரைக்காக உளமார்ந்த நன்றியை அவருக்கும் தெரிவிக்க வேண்டுகிறேன். அவரைப் போல் ஆழ்ந்து படித்து மதிப்புரை எழுதுவோரைப் பார்க்க முடியாது. ஆனந்த விகடன், கல்கி முதலிய பத்திரிகைகளில் (அன்பு மிகுந்த மதம் எனும் நூல் பற்றி) மதிப்புரை வரைந்த அன்பர்கள் எல்லாம் அரிமா நோக்கிலேயே நூலைப் படித்தவர்கள். சீதாபதியின் ஊக்கம் அவர்களிடம் காணக் கிடைக்காது.

திரு. ஏ. வி. சுப்ரமணியம் அவர்கள்

(தென் பிராந்திய இரயில்வேயின் அடிஷனல் ஜெனரல் மானேஜராக இருந்து ஒய்வு பெற்று தற்பொழுது ''கலைக் களஞ்சியம்''—தயாரிப்புப் பிரிவின் தலைமை அமைப்பாளராக இருக்கும் பெரியார்) அன்பர் திரு. டி. ஏ. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு 11—6—76 தேதியன்று கல்கத்தாவிலின்று எழுதிய கடிதத்தின் பகுதி.

## கம்பன் திருநாள்—காரைக்குடி
## மேல் முறையீட்டுப் பட்டி மண்டபம்
## 27-3-75



நடுவர்கள் : அமரர் பன்மொழிப் புலவர்
திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்

மாண்புமிகு நீதிபதி
திரு. பு. ரா. கோகுலகிருஷ்ணன்

கோவை, தொழிலதிபர்
திரு. ஜி. கே. சுந்தரம்

பதிவாளர் : அமரர் கம்பனடிப் பொடி
திரு. சா. கணேசன்

கட்சித் தலைவர்கள் : பேராசிரியர்கள்

திரு. அ. ச. ஞானசம்பந்தன்
திரு. எஸ். இராமகிருஷ்ணன்
திரு. இரா. இராதாகிருஷ்ணன்

## ஆசிரியரின் பிற நூல்கள்

கம்பன் சொல்லும் பொருளும்
(பால காண்டம்) ரூ. 7—00

கம்பன் சொல்லும் பொருளும்
(அயோத்தியா காண்டம்) ரூ. 9—00

கம்பன் திருநாள்—காரைக்குடி
மேல் முறையீட்டுப் பட்டி மண்டபம்
27-3-75



நோக்கர் சார்பில் வாதிடுபவர் ; திரு. பி. சி. சீதாபதி

302

## எங்களது புதிய வெளியீடுகள்

# பொருளடக்கம்

# வாலி வழக்கில் தீர்ப்பு

## 1. அயோத்தி மன்னற்குக் கிட்கிந்தையின் மேல் அதிகாரம் உண்டா?

கோசல நாட்டு மன்னன் தயரதனின் ஆட்சி எல்லை யாது?

''நேமி மால்வரை மதில் ஆக, நீள்புறப்
பாம மாகடல் கிடங்கு ஆக, பல்மணி
வாம மாளிகை மலை ஆக, மன்னற்குப்
பூமியும் அயோத்தி மாநகரம் போலுமே'' 31/7

''யாவரும் வன்மை நேர் எறிந்து திட்டலால்
மேவரும் கையடை வேலும் தேயுமால்
கோவுடை நெடுமணி மகுட கோடியால்
சேவடி அடைந்த பொன்கழலும் தேயுமால்'' 31/8

இப்பாடல்களால் 'அவன் உலகம் முழுதும் உடையவன் என்று கம்பர் குறிப்பிடுவார்,

'உலகம் முழுதும் உடையான்' என்பதற்குச் சொல்லுக்குச் சொல் நேர்ப்பொருள் கொண்டு, 'அவன் ஆட்சி இப்பூதலம் முழுவதும் பரவியிருந்தது' எனக் காட்டுகின்றது என்பதா? அன்றி, உயர்வு நவிற்சி அணியாகத் திகழ்கின்றது என்பதா? இதனை ஊன்றிப் பார்க்க வேண்டும்.

''அறுபதினாயிரம் ஆண்டுகள் மாண்டுஉற
உறுபகை ஒடுக்கி இவ்வுலகை ஓம்பினேன்—
பிறிது ஒரு குறை இலை; என்பின் வையகம்
மறுதவது என்பது ஓர் மறுக்கம் உண்டு அரோ'' 32/3

என்று தயரதனே கூறுகின்றான் என்பது உண்மையே!

'இவ்வுலகை' என்று அவன் குறிப்பிட்டுக் கூறுவதால் அவன் ஆட்சி பூதலம் முழுதும் பரவியது அன்று—குறிப்பிட்ட எல்லைக்குள் அடங்கியதே—எனத் தெரிகின்றது. (நாட்டினை உலகம் என்று கூறும் வழக்கும் உண்டு. 'தமிழ் கூறும் நல்லுலகம்' என்பது போலே.)

'பூதலம் முழுதும்' என்றால் 'இ' சுட்டு இன்றி 'உலகம் முழுதும்' என்றே கூறி இருப்பான். இதனைப் புரிந்து கொள்ளாமல், 'இவ் உலகை' என்பது பூதலம் முழுமையும் குறிக்கும்—தேவர் உலகம், நாகர் உலகம் போன்றவற்றினின்றும் வேறுபடுத்திக் காட்டவே அச்சுட்டு நிற்கின்றது—என்று விளக்க முயன்றாலும் முயல்வர்! அஃது அவ்வாறு விளக்குவாரின் மயக்க நிலையினையே காட்டி நிற்கும்!

ஆக, 'அந்தக் குறிப்பிட்ட எல்லைக்குள் அடங்கிய பல்வேறு நிலப் பிரிவுகளுக்கு மன்னர்களாய் நின்றவரையெல்லாம் தன் ஆட்சிக்குள் அடக்கிக் கொண்டான், தயரதன்; அதனால் அவன் மன்னர் மன்னனாய்—சக்கரவர்த்தியாய்—திகழ்ந்தான்' என்பதுதான் அறிவு பூர்வமான, அனுபவ பூர்வமான உண்மை!

இந்த உண்மையைக் காவியத்தின் சில காட்சிகளைக் கொண்டே விளங்கிக் கொள்ளலாம்!

(1) அயோத்திமா நகருக்குக் கலைக் கோட்டு முனிவர் வர வேண்டியதின் அவசியத்தை வசிட்டர் தயரதனிடம் கூறினார். உடனே தயரதன்

"ஈங்கு அறு குணத்தால் மிக்க
செழுந்தவன் யாண்டை உள்ளான்?" 36/34

எனக் கேட்டான்.

பூதலம் முழுதிற்கும் மன்னர் மன்னனாய் இருந்திருந்தால் அம்மாபெரும் முனிவரான கலைக் கோட்டு முனிவர் உரோமபதன் நாட்டில் இருப்பது தயரதனுக்குத் தெரியாமல் போமோ?

அந்நாடு தயரதனின் ஆட்சி எல்லைக்குட்பட்டிருந்தால் தன் கீழடங்கிய உரோமபதனுக்குத் தயரதச் சக்கரவர்த்தி ஓலை அனுப்பி, கலைக்கோட்டு முனிவரை அழைத்து வர அன்புக் கட்டளை இட்டிருக்கலாமே!

'கலைக்கோட்டு முனிவர் மிகப் பெரியவர்—அவர் அயோத்தி வந்து ஆக வேண்டிய காரியமும் பெரிது—அதனால், தானே நேரில் சென்று அழைத்தலே சிரிது' என்று தயரதன் கருதினன் என்பதோ? அப்படியும், அவன் அம் முனிவரை நேரில் சென்று அழைக்கவில்லையே!

மேலும், உரோமபதன்—தயரதன் உறவு எவ்வாறு இருக்கக் காண்கின்றோம்? தயரதன் வருவதை ஒற்றர் மூலம் தெரிந்து கொண்ட உரோமபதன் அவனை வரவேற்க ஓசனை தூரம் முன்னோடிச் செல்கின்றான். இவன் வந்ததைக் கண்ட தயரதனும் இரதத்தினின்றும் கீழிறங்கினன். உரோம பதனுக்கும் தயரதன் தலைவன் என்றிருந்தால் அவன் அவ்வாறு இறங்கியிருக்கத் தேவையின்றே—அஃது மன்னர் மன்னனின் மரியாதைக்குக் குறைவு ஆகும்!

அப்படியானால், 'உரோமபதன் தயரதனின் அடிகளில் வீழ்ந்ததற்குக் காரணம் என்ன?' என வினவலாம். தயரதனின் வயதின் முதிர்ச்சிக்கு உரோமபதன் தந்த மரியாதை என்றே அதனைக் கொள்ள வேண்டும். அதனாற்றான், அடிபணிந்த அவனை அம் மன்னர் மன்னனும் பேரன்பு தழைத்து ஓங்க எடுத்து இறுகத் தழுவிக் கொண்டான். சிற்றரசனாய் இருந் திருந்தால் அடிபணிந்த அவனுக்கு மன்னர் மன்னன் ஆசி புரிந்து நின்றிருத்தலே முறைமை.

இனி, உரோமபதனிடம் தான் வந்த காரணத்தைத் தயரதன் தெரிவித்தான். அவன் கலைக்கோட்டு முனிவரை அயோத்தி அடையச் செய்வதாய்க் கூறியதுமே தயரதன் திரும்பிச் சென்று விட்டான். உண்மையில் உரோமபதன் சிற்றரசனாய் இருந்திருந்தால், தன் மேலவன் இட்ட

பணியைத் தானே முழுமையாய் உடனிருந்து ஆற்றியிருக்க வேண்டும். ஆனால், அவன் கலைக்கோட்டு முனிவருடன் அயோத்திக்குச் செல்லவில்லை.

ஆக உரோமபதன் நாடு தயரதனின் 'இவ்வுலகு' எல்லையில் படாத ஒன்று என்பது தெளிவு.

இதனை உணர்ந்தே வசிட்ட முனிவரும் உரோமபதனைப் பற்றித் தயரதனுக்கு எடுத்துரைக்கும் பொழுது,

"உத்தானபாதன்—அருள் உரோமபதன் 37/35

என்று உளன், இவ்வுலகை ஆள்வோன்" என்கிறார். அதாவது தயரனது போன்றதொரு தனித்த நாடு அஃது என்றாகும்!

(2) இராம இலக்குவர் பின் தொடர விசுவாமித்திர முனிவர் சரயு நதியைக் கடந்து செல்லுங்கால் எரியுண்ட சோலையொன்றைக் கண்டனர். இராமன் முனிவரிடம் அச் சோலையைப் பற்றிய வரலாற்றைக் கேட்டான். அவர் அங்க நாட்டைப் பற்றியும் அதில் அமைந்த காமன் ஆச்சிரமம் பற்றியும் எடுத்துரைத்தார்.

அங்க நாடு அயோத்தி ஆட்சியின் கீழ் அடங்கியது ஆயின், இராமன் அந்நாடு பற்றி முன்னமேயே அறிந்திருக்க மாட்டானா! அவன் கல்லாதவனா?

"இவ்வளவது என ஒரு கரை பிறிது இலவா,
உவள் அரு மறையினொடு ஒழிவு அறுகலையும்
தவள் மதியுனை அரன் நிகர் முனிதர" 51/124

பயிற்சி பெற்றவனாயிற்றே! தன் தந்தையின் ஆட்சிக்குட் பட்ட நாட்டைப் பற்றிய நில நூலறிவு அவற்கு இல்லாமலா போயிருக்கும்?

எனவே அங்க நாடு, தயரதனின் 'இவ்வுலகு' எல்லைக் குட்படாதது என அறிகின்றோம்.

(3) தம்முடன் வந்திருக்கும் இளையர் இருவரும் யாரென மிதிலை நாட்டு மன்னன் சனகன் விசுவாமித்திர

முனிவரை வினவினான். முனிவர், அவர்களின் குல முறை முழுவதையுமே எடுத்துக் கூறினார். அவ்வாறு கூறியதின் உள் நோக்கம் வேறுதான்! ஆனால் அது கொண்டு யாமறிவது 'சனகன் இராம இலக்குவரை அறிந்திலன்' என்பதே.

தயரதனின் 'இவ்வுலகு' எல்லைக்குள் மிதிலை நாடும் அடங்கியதாய் இருந்திருந்தால், தன் மேலவன் தலைநகராகிய அயோத்திக்குச் சனகன் செல்லாமல் இருந்திருக்க ஏலுமோ? அவ்வாறு சென்றிருந்தால் இப்பிள்ளைகளை அங்கு காணாது இருந்திருக்க முடியுமா? அப்படியே அவன் செல்லவில்லை யென்றாலும் திறை செலுத்தச் செல்லும் தூதுவர்கள் வாயிலாகப் பிள்ளைகள் பற்றி அறியாதிருப்பானா?

அது மட்டும் அன்று!

அப்பிள்ளைகள் யாரெனத் தெரிந்தாயிற்று. அவருள் இராமன் வில்லை ஒடித்துச் சீதையை மணக்கும் வாய்ப்பும் பெற்றாயிற்று. திருமணம் நடத்த வேண்டும். என்னதான் அனைவர்க்கும் பெரியவர் என்ற பாங்கில் விசுவாமித்திர முனிவர் அங்கு இருந்தாலும், மணமகனின் தந்தையார்—தயரதச் சக்கரவர்த்தி—தன் நாட்டிற்கும் அதிபதி—வராமல் திருமணம் நடத்த ஒரு சிற்றரசனுக்குத் துணிவு வருமா?

சனகமன்னன் கோசிக முனிவரைப் பார்த்து,

"உரைசெய்—எம்பெரும! உன் புதல்வன் வேள்விதான்
விரைவில் இன்று, ஒரு பகல் முடித்தல் வேட்கையோ?
முரசு எறிந்து அதிர்கழல் முழங்கு தானை அவ்
வரசையும், இவ்வழி அழைத்தல் வேட்கையோ?"

116/65

எனக் கேட்டானே.

அதிலும், 'எம் தலைவன்' என்ற பாங்கிலோ இராமனைப் பெற்றவன்' என்ற பாங்கிலோ தயரதனைக் குறிப்பிட

வில்லை! 'அவ் அரசையும்' என சமநிலை மன்னனைத்தான் சுட்டிக் காட்டிப் பேசினன்!

இதிலிருந்து யாம் புரிந்து கொள்வது, மிதிலை நாடு தயரதனின் 'இவ்வுலகு' ஆட்சி எல்லைக்குட்பட்டது அன்று என்பதே அன்றோ!

(4) "கங்கை இரு கரை உடையான்;
கணக்கு இறந்த நாவாயான்" 371/25

"ஆடு கொடிப் படை சாடி, அறத்தவரே ஆள
வேடு கொடுத்து பார், எனும் இப்புகழ் மேவீரோ?
நாடு கொடுத்த என் நாயகனுக்கு இவர் நாம் ஆளும்
காடு கொடுக்கிலர் ஆகி, எடுத்தது காணீரோ?"
370/22

என்று வல்லமை பேசினன்! அவன் தயரதனின் ஆட்சிக்குட் பட்டவனா? அவன் நாடு அயோத்திக்கு அடக்கம் என்றால் கங்கைப் பெருநதி பற்றிப் பயின்ற போதேனும், இக்குறுநில மன்னனைப் பற்றிய குறிப்புகளையாகிலும் இராம இலக்குவர் அறிந்திருக்க மாட்டார்களா? அப்படி அறிந்திருந்தால், அவர்களைக் காண வந்த பொழுது, அவன்தான் அந்த கங்கை இருகரையுடையான் என்பதைப் புரிந்து கொள்ள வும் முடியாமலா போயிருக்கும்! "நீ யாவன்" என வினவப் பட்டானே!

இந்நிகழ்ச்சி, குகன் நாடும் காடும் தயரதனின், 'இவ் வுலகு' என்ற எல்லைக்குட்பட்டது அல்ல என உணர்த்து கின்றது!

(5) தயரதன் அரசு செய்த திறத்தைப் பாடும்பொழுது கம்பர்,

"எய் என எழுபகை எங்கும் இன்மையால்,
மொய்பெருத் தினவு உறுமுழவுத் தோளினன்"
32/12

என்பார். அதாவது அவனை எதிர்த்து எவரும் போர் புரிய வராததனால் தினவெடுத்து நின்றான் என்பதாகும். அப்படி யானால், அவனாகவே வேற்று நாட்டோடு போர் செய்தது இல்லையோ? உண்டே!

"இன் தளிர்க் கற்பக நறுந்தேன் இடை துளிக்கும்
 நிழல் இருக்கை இழந்து போந்து,
நின்று அளிக்கும் தனிக் குடையின் நிழல் ஒதுங்கி,
 குறை இரந்து நிற்ப, நோக்கி,
குன்று அளிக்கும் குல மணித்தோள் சம்பரனைக்
 குலத்தோடும் தொலைத்து, நீ கொண்டு
அன்று அளித்த அரசு அன்றோ, புரந்தரன் இன்று
 ஆள்கின்றது—அரச!" 55/9

என்று, முற்றும் துறந்த முனிவராகிய விசுவாமித்திரர், தயரதனைப் புகழ்கிறாரே! அந்தச் சம்பரனோடு தயரதன் சென்று செய்த போரில் கைகேயி, தன் உயிர்க்கும் அஞ்சாது துணை நின்றதால் வந்த விளைவுதானே, அவள் பின்னாளில் இரு வரங்கள் கேட்டு இராமாவதார நோக்கம் நிறைவேற வழிகோலியது!

அத்தகைய பரோபகார சிந்தையுடைய மன்னர் மன்னனான தயரதனின் மேற்பார்வையின் கீழ் இருந்ததா, இலங்கை ஆட்சி? அப்படியானால் தேவர்களுக்குத் தொல்லை கள் விளைத்த இராவணனை ஏன் தயரதன் கண்டிக்கவில்லை? தேவர்கள் நேரடியாகப் பிரம்மா முதலியவர்களிடம் சென்று ஏன் முறையிட வேண்டும்?

இதிலிருந்துதான் நமக்கு உண்மை விளங்குகின்றது. தயரதனின் 'இவ்வுலகு' ஆட்சி இலங்கையின் மீதும் பிற வற்றின் மீதும் அமைந்திருக்க வில்லையென!

மேலே விளக்கிய ஐந்து ஆதாரங்களால் யாம் திட்ட வட்டமாகக் கூற இயல்வது:

கோசல நாட்டை அடுத்துள்ள சமவெளிப் பிரிவு நாடுகளே தயரதனின் 'இவ்வுலகு' எல்லைக்குள் அடங்காத போழ்து, ஆரண்யங்கள் தாண்டி அமைந்த கிட்கிந்தை மலை நாட்டின்மீது அவன் ஆட்சி செலுத்தும் வாய்ப்பு இல்லை என்பதே அன்றோ!

தயரதன் கிட்கிந்தையின் மீதும் ஆட்சி செலுத்தப் போர் மேற் சென்றிருந்தான் என்றே கொள்வோம்! இறுதியில் அவனாட்சி அந்நாட்டின் மேல் சென்றிருக்க ஏலாது. ஏன்?

கிட்கிந்தையோ வாலியின் நாடு. அவனைத் தயரதனே எதிர்த்துப் பொருதால் கூட அவனின் பாதி பலம் வாலிக்குச் செல்ல, அவன் தோற்றுப் போய்தானே இருக்க வேண்டும்!

தந்தையின் ஆட்சிக்கு உட்படாத கிட்கிந்தையினரைத் தனயன் இராமன் தண்டிக்கவோ, கண்டிக்கவோ உரிமை ஏது? 'அவனுக்கு அங்கும் உரிமை உண்டு' என்று வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் காரைக்குடி கம்பன் மணி மலரில் (1982) தம் 'வாலிவதை' என்ற கட்டுரையில் எடுத்தியம்புவது எத்துணைப் பேராசைக் கற்பனை! அப்படியானால்,

> ''அம்மான் நகருக்கு அரசன்; அரசர்க்கு அரசன்
> செம்மான் தவிக்கோல் உலகு ஏழினும் செல்ல
> நின்றான். 30/1

என்ற கம்பர் வாக்கின் நோக்கு என்ன?' என்று கேட்கத் தோன்றும்.

தயரதன் அயோத்தி நகரைத் தலைமையாய்க் கொண்ட கோசல நாட்டிற்கு மன்னன். அவன்,

''வாளால் காய்ந்தே கடந்தான், பகை வேலை'' 31/5

அவ்வாறு தன்னால் அடக்கி ஒடுக்கப்பட்ட பகை அரசர்களுக்

கெல்லாம் அரசனுய்த் திகழ்ந்தான். அங்ஙன் மாற்றுரை அடக்கினுலும்,

''ஆதிம் மதியும், அருளும், அறனும், அமைவும்
ஏதில் மிடல் வீரமும், ஈகையும், எண் இல்யாவும்,
நீதிந் நிலையும், இவை நேமியினேர்க்கு நின்ற
பாதி; முழுதும் இவற்கே பணி கேட்ப'' 30/2

என்ற பான்மையால் அவர்க்கெலாம் சம உரிமை கொடுத்துப் பெருமித வாழ்வு வாழ்ந்தான். அதனுல்தான், இராமனுக்கு முடிசூட்டுவது பற்றி அவர்களுடைய கருத்தை யும் ஆய்ந்து தெளிந்தான்.

இத்தகைய பண்பு நலன்கள் சார்ந்த மன்னர் மன்னனின் 'செம்மாண் தனிக்கோல்' எனும் பெருமை ஏழுலகும் பரவி இருந்தது என்பது, அப்பாடல் வரிகளின் உட்கருத்தேயன்றி, 'ஏழுலகங்களும் அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன' என்று ஆகாது.

இதனே உணர்ந்திருந்த வாலி' தாரையிடம் ஏற்ற வண்ணம் எடுத்துரைத்தான்!

''ஏற்ற பேருலகெலாம் எய்தி'' என; 629/33

''எழு பேருலகெலாம் எய்தி'' என்று அன்று. இதற்கு என்ன பொருள்? தந்தை வழி இராமன் அடைதற்கு ஏற்ற தாய உலகப் பெரும் பிரிவை எய்தி—அதாவது தயரதனின் குறுநில நாடுகளே அடக்கிய பெரும் பேரரசில் அவனுக்கே உரியதான கோசல நாடாகிய பெரும் பிரிவை அடைந்து—என்பதுதான் உட்கருத்து.

கிட்கிந்தை மீது தயரதனுக்கோ, அவன் பிள்ளேகட்கோ ஏதுரிமையும் இல்லேயென்பதனேயும் வாலி உறுதிப்படுத்தி கூறும் வரியே,

''தின் மண்ணினுக்கு என் உடல்பாரம் அன்று''
637/92

என்பது.

'நான் எப்படி வாழ்ந்தாலும் அஃது என் நாடாகிய கிட்கிந்தையையே சாருமன்றி, உன் மண்-நாடு-ஆகிய கோசலத்தைச் சாராதே! 'அப்படியிருக்க என்னை ஏன் கொன்றாய்?' என்றே கேட்டு விடுகின்றான்.

ஆகவே தயரதனுடையதோ, அவன் பிள்ளைகளினதோ அரசுரிமை இல்லாத நாட்டில் இராமன் செய்த செய்கை 'வாலிவதம்' என்பது வெள்ளிடைமலை யாகும்!

ஈண்டு திரு எஸ். இராமகிருஷ்ணன் அவர்களின் கருத்துரையைக் காண்போம்.

''நின் மண்ணினுக்கு என் உடல் பாரம் அன்று''
என்று சுருராகக் கூறி விடுகின்றான்.
'நீ வேந்தனும் அல்ல, நான் உன் குடியு மல்ல'

என்ற பொருள் இந்த வாசகத்தில் அடங்கி இருக்கின்றது. கோசலத்தில் முடியைத் துறந்துவிட்டு, வானப்ரஸ்த வாழ்வு நடத்தும் இராமனை வேந்தனுகக் கொள்ள முடியாது என்பது ஒன்று. இராமன் சக்கரவர்த்திதான் என்றாலும் கிஷ்கிந்தையில் பங்கமில்லாத அரசுரிமையுடன் ஆட்சி செலுத்தும் வாலி, இராமனது அதிகாரத்துக்குக் கட்டுப்பட்ட குடியல்லன் என்பது இன்னொன்று. இரண்டு உண்மைகளையும் கணக்கில் எடுத்துக் கொண்டே, 'நின் மண்ணினுக்கு என் உடல் பாரம் அன்று' என்று வாலி இயம்புகின்றான்'' என எழுதியுள்ளார். (47)

இது எமது விளக்கங்களுக்கு முழுமையாய் ஒத்திருப்பதைக் காணலாம்.

ஆதலால்,

''கொலையின் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ்
களை கட்டதனொடு நேர்.'' (திரு. 550)

என்னும் திருக்குறட்பா போன்றவற்றின் அடிப்படையில் இராமன் வாலியைக் கொன்றான் என்பதெல்லாம் பேச்சு அழகுக்கு ஆமேயன்றி, உண்மைக்கு ஒவ்வாததாகும்.

## 2. இராமனுக்குத் தண்டிக்கும் உரிமை உண்டா?

வாலியைத் தண்டிக்கும் உரிமை தயரதச் சக்கரவர்த்திக்கோ, அவன் வாரிசுகளுக்கோ உண்டு என்ற கற்பனை வாதத்தையும் ஒப்புக் கொள்வதாகவே வைத்துக் கொள்வோம், தொடர்கின்ற விளக்கங்களுக்காக வேண்டி! அப்படியானாலும், இராமனுக்குச் சற்றும் உரிமை இல்லை! ஏன்!

இராமன் தயரத சக்கரவர்த்தியின் பிரதிநிதியாகவா அயோத்தி விட்டு அகன்றான்?

''ஏய வரங்கள் இரண்டின், ஒன்றினால் என்
சேய் அரசு ஆள்வது; சீதைகேள்வன் ஒன்றால்
போய் வனம் ஆள்வது.'' 257/14

என்று கைகேயி தயரதனிடம் கேட்டாள்.

தயரதன் கொஞ்சினான்; கெஞ்சினான்; விஞ்சினான்; அவள் பிடிவாதம் நீங்கவில்லை. வேறு வழியின்றி மன்னர் மன்னன்,

''ஈந்தேன்! ஈந்தேன்! இவ்வரம்
என் சேய் வனம் ஆள
மாய்ந்தே நான்போய் வான்உலகு
ஆள்வென்; வசைவெள்ளம்
நீந்தாய், நீந்தாய், நின் மகனோடும் நெடிது''

என்றான். 241/48

பிற்காலத்தில், வாக்கு வன்மையால் எவரேனும், 'வனம் ஆள்வது' என்றதனால், 'வனத்தின் அரசுரிமை இராமனுக்கு உண்டு' என்று வாதிடுவார்களோ என்று ஐயுற்ற கவிச்சக்கரவர்த்தி அதற்கும் சரியான விளக்கத்தைக் கூறிவிட்டார்!

மன்னன் வாய் மடுத்ததாகக் கைகேயி இராமனிடம் என்ன கூறினாள்? 'நீ போய் வனம் ஆள்' என்று மொழிய வில்லை. நன்கு விளக்கமாகவே,

"ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய்
தாழிருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந்தவம்
மேற்கொண்டு
பூழி வெங்கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண்டு ஆண்டின் வா' என்று இயம்பினன் அரசன்"
270/111

என்று கூறிவிட்டாள்!

இராமன் இதற்கு ஏதும் மறுப்போ, மாற்றமோ தெரிவித்தானா? இல்லை; அவள் கூறியபடியே நடந்து கொள்வதாக,

"............இப்பணி தலைமேல் கொண்டேன்
மின் ஒளிர் கானம் இன்றே போகின்றேன்; விடையும்
கொண்டேன்" 270/114

என்று சொல்லிச் சென்றான். அது மட்டும் அன்று.

தன் தாய் கோசலையிடம்,
"............நின் காதல் திருமகன்
பங்கம் இல் குணத்து எம்பி, பரதனே
துங்க மாமுடி சூடுகின்றான்" 271/3

என்று கூறித் தனக்கு அரசுரிமை இல்லை என்பதை உறுதிப் படுத்தி விட்டான்.

'மன்னர் மன்னனே ஒப்பினாலும் மாற்றாந் தாய் வாய் மடுத்தாலும், ஈன்ற தாயான கோசலை தன் எண்ணத்தை வெளிப்படுத்தாததால், இராமனுக்கு அரசுரிமை இல்லை யென்பது' அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது ஆகாது, என்று ஏதேனும் முடவாதம் வரக் கூடாது என்பதிலும்

கவனம் செலுத்தப் பட்டுள்ளது, காவியத்தில். ஆம்; இராமன், 'பரதனே ஆள்வான்' என்றதும் கோசலை,

''மும்மையின் நிறை குணத்தவன்;
நின்னினும் நல்லனால் குறைவு இலன்'' 271/4

எனக் கூறியதோடு,

''மன்னன் ஏவியது அன்று எனுமை,
மகனே! உனக்கு அறன்;
நன்று நும்பிக்கு நானிலம் நீ
கொடுத்து, ஒன்றி வாழுதி'' 271/5

என்றும் கூறி அரசுரிமையை முழு மனத்தோடு பரதனுக்கென உறுதிப்படுத்தி விட்டாள்.

ஆக, இராமன் தன் தாய் நாட்டிலேயே அரசுரிமை இழந்தபின் வேறெந்த நாட்டிலுமோ, தந்தை நாட்டாட்சியின் எந்தப் பகுதியிலுமோ உரிமை கொண்டாட ஏலாது என்பதனை எவரும் ஒப்புக்கொண்டுதானே ஆக வேண்டும்!

''நிகழ்த்துவதற்கு அதிகாரம் இல்லாதவர் நிகழ்த்துவது ஒன்று தன் வரையில் நீதியேயாயினும் அநீதியாகும்'' என்பார் பெ. இராமானுஜன் அவர்கள் (80)

ஈண்டு, ''அரசர்களுக்கு விலங்குவேட்டை புதிதன்று, அது முறைகேடானதும் அன்று. இராமனே அரசருக்கும் அரசன். அவன் ஒரு பொல்லாத மிருகத்தைக் கொன்றான். இதற்குக் கேள்வி என்ன? என்று வான்மீகி இராமாயண ஆதாரம் கொண்டுரைப்பாரை, 'வாலி பாற்கடல் கடைந்தவன், வானவருக்கு அமுதளித்தவன் என்றொரு பக்கமும், வாலி மிருகம் அவனை அரசப் பெருந்தகை' அடித்து வீழ்த்தினன் என்றொரு பக்கமும் இசைத்தல் பெரு நூல்களுக்குப் பெருமை குறையுமே, என்ன செய்வது?'' என்றொரு அறிவு பூர்வமான வினவைப் புரிசையார் எழுப்பியிருப்பது நோக்கத் தக்கது (2,3)

இனி, திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் தம் கட்டுரையில், 'சக்கரவர்த்தியின் திருமகனுகிய நான் உலகில் மறம் புரிவோரை அடக்கி அறத்தை நிலைநிறுத்த வேண்டும் என்முர் (இராமர்)' என எழுதியுள்ளார்!

தான் சக்கரவர்த்தியின் திருமகன் என்று உரிமை பேசிக் கடமை ஆற்றியதாக இராமன் உரைத்தான் என்பதற்குக் கம்பனிலோ வான்மீகியிலோ ஆதாரம் காணவில்லை. கம்பனில், இராமன், வாலி சுக்கிரீவனிடம் நடந்துகொண்ட முறைகேடுகளைச் சுட்டிக்காட்டி இறுதியில்,

> ''ஆதலானும், அவன் எனக்கு ஆர் உயிர்க்
> காதலான் எனலானும், நிற்கட்டனென்;
> ஏதிலாரும், எளியர் என்ருல், அவர்
> தீது தீர்ப்பது என சிந்தைக் கருத்துஅரோ''
>
> 638/110

என்றுதான் கூறி முடிக்கின்ருன். எனவே, திரு. வாரியார் சுவாமிகளின் சொற்கோவையை ஏற்றுக்கொள்ள இயலாமல் போகின்றது.

''அந்நாளைய மன்னன் தன் ஆட்சி எல்லைகளை விஸ்தரிக்காமலோ பிற நாடுகளைத் தனதுடன் இணைத்துக் கொள்ளாமலோ இருந்திருந்தால் அவன் அருகதை அற்றவனுகவே கருதப்பட்டான். இக்கொள்கையில் இராமன் தன் நடவடிக்கைகளை மேற்கொண்டான் என்று கொண்டால் அவனை வேறு அளவுகோல்களால் மதிப்பிடுதல் நெறியானது அன்று'' (145) என்பார் சாஸ்திரிகள். இராமன் அயோத்தியை விட்டு நீங்கியது மன்னர் மகனுகவா? அப்படியானுல் தானே இந்தச் சமாதானம் பொருந்தும்!

'பரதன் இராமனிடம் அரசைத் திருப்பி வழங்கி விட்டான்; இராமனும் அதனை ஏற்றுக்கொண்டு விட்டான். ஆகவே, இராமன்தான் அரசன்; பரதன் அவனின் பிரதிநிதியாகத்தான் ஆள்கின்ருன்' என்பார் திரு. இரத்தினஞ் செட்டியார். (87)

அன்பின் மேலீட்டாலும், பண்பின் பக்குவத்தாலும் பேச்சு வார்த்தைகளாலும் நாட்டாட்சி இராமனுக்கும் பரதனுக்கும் இடையே உருட்டப்பட்டதேயன்றி, அக்கினி சாட்சியாகவோ, தாரை வார்த்தோ இராமனிடம் ஆட்சி தரப்பட்டதா?

மேலும் இராமன் வாய்மை தவறியவனா? தாய் தந்தையர் சொல்லைக் காப்பவன் போல் பாவனை செய்பவனா? பரதன் – இராமன் உரையாடலின் இறுதியில்,

''வானவர் உரைத்தலும், 'மறுக்கற் பாலது அன்று;
யான்உனை இரந்தனென்; இனி என் ஆணையால்
ஆவது ஓர் அமைதியின் அளித்தி பார்' என
தான் அவன் துணை மலர்த் தடக்கை பற்றினன்
397/132

என்று தான் காண்கின்றோமே யன்றி, 'இராமன் அரசைத் திரும்ப ஏற்றுக் கொண்டு விட்டான்' என அன்று. பரதனும்,

''அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினன்,
முடித்தலம் இவை, என முறையின் சூடினன்''
397/136

எனக் காண்கின்றோமே யன்றி, இராமனின் பிரதிநிதியாக ஆள அனுப்பப்பட்டான் என்று அன்றே!

''அயோத்தியின் மன்னன் இராமனின் தம்பி பரதன். அவனே பரதக்கண்டம் முழுமைக்கும் ஆட்சியாளன். எனவே, கிஷ்கிந்தை மன்னன் தவறுதலாய் நடந்து கொண்டானேயானால் அவனைத் தண்டித்தல் அவனுக்கு முறைமை. அப்படிப் பரதன் அப்பகுதியில் நேரடியாக இல்லையென்றால், பரதனின் எந்தச் சகோதரனும், அந்த அரச குடும்பத்தைச் சேர்ந்தவரே ஆயின் தகுதியான தண்டனையை வழங்குதல் முறைமையே'' (145) என்பார் சாஸ்திரிகள்.

''சொன்னேன் இன்றே; இவள் என்தாரம் அல்லள்;
துறந்தேன்;
மன்னே ஆவான் வரும் அப்பரதன் தனையும் மகன்
என்று
உன்னேன்; முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு
என்றான்'' (277/49)

என்று தயரதன் சொல்லி இறந்ததை அறிந்த இராமன் துறக்க லோகத்திலிருந்து வந்த தந்தையிடம் என்ன வரம் கேட்டான்?

''தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்
தாயும், தம்பியும் ஆம் வரம் தருக! எனத்
தாழ்ந்தான் (1559/128.)

அப்படியென்றால் என்ன பொருள்? இதுகாறும் தந்தையின் வெறுப்புணர்ச்சிச் சொல்லிற்கு மரியாதை கொடுத்து பரதனைத் தன் தம்பி என்று சொல்வதிலிருந்தே அகற்றி யிருந்தான் எனத் தெளிகின்றோம். என்றாலும், வீடணனுக்கு அடைக்கலம் தந்தபோழ்து,

''குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்; எம்முழை அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகழ் அருங் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான்
நுந்தை'' (1032/143)

என்று கூறினானே என வாதிடக்கூடும்! பரதனைத் தயரதனின் புதல்வரின் கணக்கில் சேர்க்காமல் இருக்க முடியுமா? எனவே தான் 'எந்தை' என்று முடிக்காமல் 'நுந்தை' என்ற சொல் பெய்து முடித்தார் கவிச்சக்கரவர்த்தி என உணர்தல் வேண்டும்!

ஆகவே, பரதனின் அண்ணன் என்ற முறையினாலும் கூட சாஸ்திரிகளின் வாதப்படி இராமனுக்கு யாரையும் தண்டிக்கும் உரிமை இல்லையே! ''கொலையாளி ஒருவனுக்கு-

குற்றவாளி ஒருவனுக்கு நீதிபதி கொலைத் தண்டனை தந்தால் நீதிபதியும் கொலை செய்தவர் என்பதன்று பொருள். அறத்தை நிலைநாட்ட அறமற்றதையும் செய்ய வேண்டியிருக்கிறது. இராமனும் அறம் காக்க இம்மறச் செயல் செய்தான்! அதனால் அறம் காத்த அவன் வீரம் புகழுக்குரியதுதான்'' என்பார் பி. ஸ்ரீ. (53) ஆனால் இராமன் நீதிபதிக்குரிய நெறிமுறைகளை அனுசரிக்கவில்லையே! மேலும் நீதிபதி செய்வது 'கொலைத் தண்டனை ஆணையே' அன்றிக் கொலை அன்றே!

## 3. வாலி புரிந்த குற்றங்கள் யாவை?

முரட்டுப் பிடிவாதம் பிடிப்பவருக்காக இராமனுக்கு அரசுரிமை இன்னமும் ஒட்டிக் கொண்டிருப்பதாகவே கற்பனை செய்து கொள்வோம்!

வாலியின் மீது சுமத்தப்பட்ட குற்றங்கள் யாவை? அவை முழுதும் உண்மையானவையா?

முதல் குற்றம்: அவன் தன் தம்பி சுக்கிரீவனை ஓட ஓட விரட்டி அடித்தான் என்பதாகும்.

வாலி, பிலத்தினுள்ளிருந்து பல மாதங்கள் வாராமையால் சுக்கிரீவனைப் பிறர் வற்புறுத்தி மன்னன் ஆக்கிவிட்ட உண்மை தெரிந்த பின்னும், சுக்கிரீவன் நடந்து போனவற்றிற்காக வருந்தி மன்னிப்புக்கோரிய பின்னும், அரசுப் பொறுப்பை வாலிக்கே தந்து விடுவதாகக் கெஞ்சிய பின்னும் சினம் தணியாது தம்பியை ஓட ஓட விரட்டி அடித்தான்; கொல்லவும் முயன்றான்; இறுதியில், வாலி வரமுடியாத மலையின் மேல் சுக்கிரீவன் சென்றேறி ஒளிந்திடவே, அவன் தன் எண்ணம் நிறைவேறாது ஏமாந்து பின்னடைந்தான்.

உண்மையை உணர்த்தியும் சினம் தணியாது தம்பியைத் தொலைக்க முயன்றது வாலியின் பிழையே. ஆனால், நாள் படப்பட, அவன் சினம் தணிந்திருக்குமே. அதுதானே

மிறே இயல் தத்துவம். எனவே, சுக்கிரீவன் அனுமன் முதலிய தன் அருங்குண அமைச்சர் வாயிலாகத் தன் தமையனின் நிலை தெரிந்துகொண்டு சமாதான நடவடிக்கையில் ஈடுபட்டதாகவே தெரியவில்லையே! 'சொல்லின் செல்வன்' என்று பின்னுளில் இராமனுல் குறிப்பிடப்பட்ட அனுமன் அணுகியிருந்தால் வாலியும் ஆத்திரம் தணிந்து அமைதி பெற்றுச் சமாதானம் அடைந்திருப்பானே!

இராமனின் துணை கிடைத்த போதும் சமாதான நடவடிக்கை முயற்சியைப் பற்றி எண்ணிப் பார்க்கவேயில்லை. மாருக, சுக்கிரீவன், வாலியினை எதிர்த்துப் போரிட தூண்டப் பெற்று அனுப்பப்பட்டான்.

வாலி சினந்து நடந்து கொண்ட வரலாற்றைப் பின்னுல் இராமனே வாலியினிடம் எடுத்துக்காட்டிக் குறையாகப் பேசியதால், அது பற்றி அலசிப் பார்க்க வேண்டியதாயிற்று! அவ்வாறு ஊன்றிப் பார்க்கும் பொழுதுதான் தவிர்க்கப்பட்டிருக்கக் கூடிய குறை வளர்க்கப்பட்டு விட்டது, இராமனின் துணையினுல்—தூண்டுதலினுல்—எனக் காண்கின்ருேம்.

இராம இலக்குவரைத் தூரத்தே கண்டதும், அவர்கள் வாலியின் ஆட்களோ எனப் பயந்து சுககிரீவன் ஓடி ஒளிகின்ருன். வாலியின் ஆட்கள் அடிக்கடி வந்து தொல்லை கொடுத்திராவிட்டால், அவன் இவ்வாறு பயந்து ஓடி ஒளிந்திருக்கமாட்டான். சுக்கிரீவனுக்கு மன்னிப்பு அளிக்காதது மட்டுமின்றி, அவனைக் கொன்றுவிட வேண்டும் என்றும் வாலி முயன்றிருக்கின்ருன் என்பது இதிலிருந்து புலனுகிறது என்று கூறுவார் திரு. இரத்தினஞ் செட்டியார் (4)

வாலியின் ஆட்கள் அவ்வாறு சுக்கிரீவன் சூழலுக்கு அவனைத் துன்புறுத்தும் நோக்கில் வந்திருந்தால் மிகுந்த பலம் கொண்ட—வாலிக்கு நிகரான பலம் கொண்ட—சுக்கிரீவன் ஏன் அஞ்சவேண்டும்? அவன் என்ன எளிமையான வீரனு? ஒரு வேளை அவன் என்ன அச்சமிகையால் அவ

களைத் தாக்கவில்லை என்றாலும் மதி நுட்பமும், மாபெரு வலிமையும் கொண்ட மாருதி பார்த்துக்கொண்டிருப்பானா? ஒரு முறை, இரு முறை, வாலியின் ஆட்களைத் துரத்தியடித்திருந்தால் அவர்கள் அடிக்கடி வந்திருக்க நெஞ்சுரம் ஏது?

இராம இலக்குவர் வந்த காட்சியை இப்பொழுது நாமும் காண்போம். கம்பரின் பாடல்களின் துணை கொண்டு.

முதல் நாள் சீதையின் நினைவால் இராமன் புலம்பிக் கொண்டிருந்தான், எல்லை மீறி. சந்திரன் தோன்றினான்; இராமனின் பழுது இல் கண் துயின்றில; (597/4)
பொழுது புலர்ந்தது; 'விமலன் வெந்துயரின் எழப் புறப்பட்டனர், சீதையைத் தேடி. காலையிலேயே நெடுந்தொலை நடந்தனர். சுக்கிரீவன் இருந்த மலையை நெருங்கினர்'

சீதையை நினைந்து நினைந்து புலம்பியதால் மனச் சோர்வும், இரவெல்லாம் உறக்கம் இன்மையால் உடற் சோர்வும், காலையிலேயே நெடுந்தொலை நடந்துவிட்டதால் களைப்பும் கொண்ட இராமனும் இன்துணைத் தம்பியும் அம்மலையில்

'நொய்தின் ஏறினர்' (597/1)

'நொய்து' என்ற சொல் பல் பொருள் கொண்டது. எனினும், 'மென்மெல' என்பதே இச் சூழலுக்குப் பொருந்தும், 'எளிதாக விரைவாக' என்பன பொருந்தா. வழி நடைக் களைப்பாலும், வருந்து மனத் துயராலும் மலை ஏறுவதில் வேகக் குறைவும், தளர் நடையும் ஏற்படுமே யன்றி, 'விரைவு' இயற்கையாய், அமையாது!

இதனாலேயே டி. கே. சி. அவர்களும், 423
'ராமன் தள்ளாடித் தள்ளாடி நடக்கிறான், என்பார்.

ஆனால் அவர், "ராம லக்ஷ்மணர்களைப் பார்க்க நேர்ந்த ஒருவன் சுக்கிரீவ மன்னனிடம் வந்து, 'உயர்ந்த ராஜ

குடும்பத்தைச் சேர்ந்தவர்களாய் இருக்க வேண்டும். வெகு தூரதேசத்திலிருந்து பாதசாரிகளாய் நடந்து வருகிறார்கள். யாரோ தெரியவில்லை, என்று சொல்லி வைத்தான். சுக்கிரீவனுக்கு வந்தவர்களிடத்தில் பரிவு உண்டாகி அவர்களை யார் என்று விசாரித்து அழைத்து வரும் படியாக அனுமனை ஏவினான் என்பது தெரியவருகிறது'' என எழுதுகின்றார். (431)

கம்பர் கவியில் இப்படி இல்லை. இப்படி இருக்குமாயின் சுக்கிரீவன் இராம இலக்குவர்கள் வரக்கண்டு அஞ்சி ஓடி ஒளிந்திட வேண்டியதில்லையே!

மேலும், அவர், ''ராமலக்ஷ்மணர்கள் அரச குமாரர்கள். இப்போது அவர்களது நிலைமை பரிதாபமான நிலைமை. இந்த நிலைமையைப் பூர்ணமாய் உணரக் கூடியவர்கள் அரசர்கள்தானே. ஆகவே ராம லக்ஷ்மணர்கள் சுக்கிரீவனைப் பார்க்க ஆத்திரப்படுகிறார்கள்'' என்கிறார் (436)

சுக்கிரீவன் நிலைமையே மிக மிகப் பரிதாபத்திற்குரியதாக இருக்க, அவர் ஏனோ இந்தக் கற்பனை எண்ணம் கொண்டார் எனப் புரியவில்லை! இராம இலக்குவர் அவசரப்பட்டதற்கு, அவனைச் சந்திக்கும்படி ஏற்கனவே கவந்தனும் சவரியும் கூறியிருந்ததற்கு ஏற்ப, அவன் இருந்த இடத்திற்கு வந்து விட்டதை உணர்ந்ததாலேயே என்பது பொருந்தும்.

மேலும், அவர்கள் வருகையை வர்ணிக்கும் பொழுது ''வெஞ்சமத் தொழிலர், தவமெய்யர், கைச்சிலையர்'' என்பார் கம்பர். (598/4)

தவ மெய்யரைக் கண்டு அஞ்சுவானேன்? 'மிரண்டவன் கண்ணிற்கு இருண்டதெல்லாம் பேய்' என்னும் பழமொழிக்கேற்ப, அவர்கள் கையில் வில்லைக் கண்டான்; போர் புரிதற்கேற்ற உடல் வாகுவைக் கண்டான். சுக்கிரீவன் ஓடி ஒளிந்தான்! அனுமன் அருகிருக்க, இருவரே வரக் கண்டும் அவன் அஞ்சினான் என்றால் அஃது அவனுடைய

அச்சமினைகளையக் காட்டுகின்றதே யன்றி. வாலியின் இடை விடாத் தொல்லை இருந்ததெனக் காட்டவில்லை!

அனுமனால், வந்துள்ளவர்கள் யாரெனத் தெளிவிக்கப் பட்டபின் அச்சம் தெளிந்து இராமனைத்

"திங்கள் மண்டலம் உதயம் செய்த மரகதக் கிரி"
எனக் கண்டு கொண்டு விட்டான்! (605/17)

"சட்ட அடிப்படையில் அமைந்த இவ்வரசே (ருஷ்ய முக பர்வதத்தில் சுக்கிரீவன் கொண்டிருந்த அரசே) பதவி ஏற்கத்தக்கது (வாலிக்குப் பின் கிட்கிந்தையின் அரசு) என முடிவு செய்கிறான் (இராமன்); இதனாலேயே, "தலைமை யோடு நின் தாரமும் உனக்கு இன்று தருவேன்" என்று கூறு கிறான் என்பார் திரு. இரத்தினஞ் செட்டியார்! (38)

ஒளிந்திருந்து, பயந்து பயந்து நடுங்கியிருக்கும் சுக்கிரீவன், அனுமன் முதலாய சில மந்திரிகளோடும், குரக்கினத்தோடும் அம் மலையில் தங்கியிருந்தான் என்பது உண்மை. ஒரு பிரச்சனை வரும் பொழுது உடன் இருப்பவர் களைக் கலந்தாலோசிக்க வேண்டுவது அவசியமே. அதனால் தான் இராமனிடம் சுக்கிரீவன், அனுமன் முதலானவர் களோடு ஆலோசிப்பதாகக் கூறுகின்றான். இதனைக் கொண்டு, அவன் அங்கு அரசு செய்து வருகிறான் என் றெல்லாம் சொல்வது, வேண்டாத நடைமுறைக்கு ஒவ் வாத—கற்பனையே! வாலிவதைக்குப் பின் இலக்குவனைக் கொண்டு சுக்கிரீவனுக்கு இராமன் முடிசூட்டுவித்தான் என்பது பொருளற்றதாகிவிடும்!

முதன்முதலில் இராமன் அனுமனிடம் 'நீ யார்?' என்று கேட்டபொழுது,

"இம்மலை இருந்து வாழும் எரிகதிர்ப் பரிதிச்செல்வன்
செம்மலுக்கு ஏவல் செய்வேன்" (599/16)

என்றுதான் குறிப்பிட்டானே யன்றி, 'ருஷ்யமுக பர்வத மன்னனுக்கு ஏவல் செய்வேன்' எனக் குறிப்பிடவில்லை. அதனாற்றான்,

"சுக்ரீவன் உயிர் தப்புவதற்காக எங்கெல்லாமோ ஓடினன். கடைசியாக, இந்த இடத்தைப் புகலிடமாகக் கொண்டு தங்க நேர்ந்தது. சுக்ரீவனுக்கு வேண்டியவர்களாய் நாங்கள் சிலர் உடன் வசிக்கின்றோம்" என்று அனுமன் கூறியதாக டி. கே. சி. அவர்களும் குறிப்பிட்டுள்ளார்கள்.

அப்போது அங்கதன் பற்றி ஒன்றும் இராமன் அறியான். அதனுல் சுக்கிரீவனுக்குத் தலைமை தருவதாகத் திட்டவட்டமாகக் கூறுகிறுன்.

நிற்க.

அவ்வளவு அஞ்சியவன், பின்னர் இராமனேடு நட்புக் கொண்டதும் இராமனின் வலிமையை ஐயப்பட்டு மராமரச் சோதனையை மேற்கொள்கின்றுன்.

தம்பிக்குக் கொடுமை செய்தான் வாலி என்றதும், கோபாவேசமும் வீரவெறியும் ஒன்று சேர்ந்து ராமனது தோள்களைத் திமிரும் தினவும் கொள்ளச் செய்தன. ஏதோ வாலி எதிரில் நிற்பதாக உருவெளித்தோற்றம் காணவும், அப்படியே ஒரு பானத்தை எடுத்து வில்லில் வைத்து வேகமாக எய்தான். அவ்வளவுதான்; எதிரில் வரிசையாக நின்ற மராமரங்கள் ஏழையும் ஊடுருவி அப்பால் சென்றது பாணம். ராமபாணம் என்றால் இன்னது என்று சுக்ரீவனும் அனுமனும் தெரிந்து கொண்டார்கள்" என்ற ஒரு குறிப்புரையை டி. கே. சி. அவர்கள் எழுதுவார்கள். (468)

இராமனின் கோபாவேசத்தைக் காட்டுவதில் டி. கே. சி. அவர்களின் வேகக்குறிப்பையே இது காட்டி நிற்கின்றது.

இவையெல்லாம், சுக்கிரீவன் மனத்தேயிருந்த பீதியைக் காட்டுகின்றனவேயன்றி, வாலியின் வன்மச் செயல்கள் இருந்தனவாகக் குறிக்கவில்லை.

வாலி, சுக்கிரீவன்பால் பின்னும், பின்னும் சண்டைக்குச் செல்லவில்லையென்பதை,

"கொற்றவ! நின் பெருங்குலவுத் தோள்வலிக்கு
இற்றனன், முன்னை நாள் ஈடு உண்டு ஏகினான்.
பெற்றிலன் பெருந்திறல்; பெயர்த்தும் போர் செயற்கு
உற்றது, நெடுந் துணை உடைமையால்" 627/24

என்று தாரை, வாலியைத் தடுக்கும் போழ்து சொல்லியது உறுதிப்படுத்துகின்றது. வாலி அடிக்கடி வம்பிற்குச் செல்ல, சுக்ரீவன் முதல் நாள் வரை பின்வாங்கியிருப்பானே யானால், அவள், 'முன்னை நாள்' என்று குறிப்பிடாது, 'நென்னல் வரை' என்றே குறிப்பிட்டிருப்பாள்!

மறுபடியும் இப்பொழுதுதான் போர்ச் சூழல் ஏற்பட்டுள்ளது; அதுவும் சுக்கிரீவன்தான் வலிய போருக்கு இப்பொழுது வந்துள்ளான் என்பதை "பெயர்த்தும் போர் செயற்கு உற்றது" என்ற சொற்களால் எடுத்துக் காட்டுகின்றார்.

"நீயே (சுக்கிரீவனே) என்னைத் தேடி வந்தபோது நான் (வாலி) உன்னை வரவேற்காமல் இருப்பேனா? இதோ வந்தேன் வந்தேன் என்று கட்டிலினின்று குதித்தான்" என்பார் பெ. இராமாநுஜன் அவர்கள் 780

ஏதோ, கோபம் கொண்டவனாய்ப் போர் செய்யவே வந்திருக்கின்றான் தம்பி என்று தெரிந்து கொஞ்சம் யோசனை பண்ணினான் வாலி, யோசனை செய்யச் சிரிப்புத்தான் வந்தது. அப்படியே படுக்கையை விட்டு எழுந்தான் வாலி. ஒரே கோபமாய்க் கையோடு கையைப் புடைத்தான் என்பார் டி. கே. சி அவர்கள். (470)

சுக்கிரீவனைக் கொல்ல வேண்டும் என்பது வாலியின் எண்ணமே அன்று! அந்த எண்ணம் இடையறாது இருந்திருந்தால் இராமனின் துணையோடு சென்று வலிய வாலியைப் போருக்கிழுத்து மோதினானே, சுக்கிரீவன் அப்பொழுது, முதல் சுற்றிலேயே கொன்றிருக்க முடியாதா?

''அன்ன தன்மையர், ஆற்றலின் அமர்புரி பொழுதின்
வல்நெடுந் தடந்திரள் புயத்து அடு திறல் வாலி,
சொன்ன தம்பியை, தும்பியை அரி தொலைத்தென்ன
கொல் நகங்களின், கரங்களின் குலைந்து உகமலைந்தான்.
632/60

என்பார் கம்பர். அந்த அளவிற்கு அந்நொடிப் பொழுதிலேயே தம்பியைக் கொல்ல வாய்ப்பிருந்தும் அவன் கொல்லவில்லை! அதனால்தான், சுக்கிரீவன் இராமன்பால் திரும்பிச் சொல்ல முடிந்தது; உலைந்த சிந்தையோடு வாடி வதங்கி நின்று வணங்கிட ஆயது!

அது போலத்தான் சுக்கிரீவனின் மனோநிலையும்; வாலியாம் அண்ணனைக் கொல்ல அவன் நினைக்கவில்லை. அவனால் ஏற்படக் கூடிய தொல்லைகள் நீங்க,' அவன் வலிமையை ஒடுக்கவே நினைந்தான். ''நான் என் அண்ணனைக் கண்டு அஞ்சுகின்றேன். என்னிலும் அவன் வலியன்: என்னை நையப் புடைத்துள்ளான். அவனைக் கண்டு நான் அஞ்சாத அளவிற்கு நீ எனக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டுகின்றேன். இதுதான் சுக்கிரீவன் இராமனிடம் கூறியது; வாலியைக் கொல்ல வேண்டும் என்ற எந்த யோசனைக் குறிப்பும் இல்லை. ஆனால் இராமன்தான் பதில் பகர்கையில் அவனை உற்சாகப்படுத்தும் வகையில் ''அவன் உன் மனைவியை அபகரித்துக் கொண்டதால் நான் அவனைக் கொல்வேன்'' என்றான் என சாஸ்திரிகள் குறிப்பிடுவார். (150)

தம்பியை அடித்துத் துரத்திவிட்டு வருகிறேன் என்று வான்மீகத்தில் பேசிய வாலி இங்கு (கம்பரில்) கொன்று விட்டு வந்து விடுகிறேன் என்கிறான். இதன் நுட்பம் அறிவது அரிதன்று. தம்பியைக் கொல்லத் துணிந்தவன் கொலையுண்டது ஒரு வகையில் ஆற்றக் கூடியதே. ஆதலின் வாலிவதையின் கொடுமையை ஓர் அளவு குறைக்கவே இந்த வேறுபாடு'' என்பார் பெ. இராமாநுஜன் அவர்கள் (9)

"இதிலிருந்து சுக்ரீவன் கள்ளமற்றவன்; அன்புடையவன்; இராச்சியத்தை அடைவதற்காகப் பேராசையால் வாலியைக் கொல்லச் சொல்லவில்லை. தற்காப்புக்காக இராமனைச் சரணடைந்தான் என்பதே உண்மை!" என்பார் பி. ஸ்ரீ (46)

"மானவன் குணம் எலாம் நினையும் மா மதியினான்"
603/1

ஆகிய அனுமன் சுக்ரீவனாகிய தன் மன்னனிடம் சென்றான்.

"யானும், என் குலமும், இவ்வுலகும் உய்ந்தன"
என்றான். 603/1

அனுமன் போன்று சுக்கிரீவனும் குரங்கினத்தவன் தானே! அப்படியிருக்க 'யானும் என் குலமும்' என வேறு படுத்திக் கொண்டது ஏன்? 'நாமும் நம் குலமும்' எனச் சுக்கிரீவனையும் உளப்படுத்தியன்றோ செப்பியிருக்க வேண்டும்?

வாலி பிலத்தினுள் சென்று நெடுநாள் வாராதிருக்க சுக்ரீவன் மன்னன் ஆயது அவனுடைய ஆவலாலோ, முயற்சியாலோ, ஒப்புதலாலோ அன்று. அனுமனும் பிற அமைச்சர்களும், ஆன்றோர்களும் கூடிக் கட்டாயப்படுத்தி அவனை அரசன் ஆக்கினர். இதனை சுக்கிரீவன் தெளிவாக எடுத்துக் கூறியும் வாலி சுக்கிரீவன் முடி புனைந்ததை எல்லையற்ற அளவிற்கு வெறுத்துத் தம்பியைத் தாக்கினான். அனுமன் தன்னையும் தன்னைப் போன்ற அமைச்சர்கள்—அறிவுசால் பெரியோர்கள் ஆய குழுவினரையும் தாக்கியதாக, மறைமுகமாக வெறுத்து அவமானப்படுத்தியதாக உணர்ந்தான். தன் மான உணர்வு அவனை உறுத்திக் கொண்டேயிருந்தது. எனவே, வாலியைக் கொல்ல வேண்டும் அன்றி கொல்விக்க வேண்டும்—என்று முடிவு கொண்டிருந்தான், தன் மனத்தகத்தே! அதனால்தான், இந்தச் சூழ்நிலையில் தானும், தன் அமைச்சர், ஆன்றோர் குலமும் வாலியால் அவமானப்

பகுத்தப்படுவதினின்றும் உய்ந்ததாக உள்ளுறை வைத்து உரைக்கின்றான்!

என்று, புரிசையாரின் கருத்துரை கவனிக்கத் தக்கதாகும். சுக்கிரீவனிடம் இராமன்,

"மற்றினி உரைப்பது என்னே வானிடை மண்ணில் நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்......" என்றதும்
"ஆர்த்தது குரங்குச் சேனை அஞ்சனைச் சிறுவன் மேனி
போர்த்தன; பொடித்த ரோமப் புளகங்கள்" என்ற

கம்பரின் வாக்கிற்கு விளக்கம் தருபவர்,

"அனுமன் புளகாங்கிதம் கொண்டனன், ஏன்? இதற்காக நெடுங்காலம் எதிர்பார்த்த நிகரில் அமைச்சன் அவன். ஆதலால்தான் அனுமனுக்கு இவ்வளவு மகிழ்ச்சி" என்பார் (23)

மேலும்,

"அனுமன் கொண்டவை நிறைவேற்றுங் கொள்கையன்; அனுமன் எந்நாளும் அரசனல்லன்; அமைச்சனே. ஆனால், அரசரை ஆக்கிக் காக்கும் அமைச்சன். இத்தகைய ஆற்றலால் தன் உள்ளத்திற்கு ஒத்த ஒரு கொற்றவனை ஆக்கி வைக்க அடிப்படையிட்டனன். அதுதான் வாலி வதையும், சுக்கிரீவன் வாழ்வும்" என்று விளக்கிச் சொல்வார் (28)

இனி திரு. எஸ். இராமகிருஷ்ணன் அவர்களின் நோக்குரை காண்போம்.

"இராமனது மன நிலையைத் தேர்ந்து தெளிந்த அனுமன், அதனைக் கொண்டு வாலி வதத்தைச் சாதித்து விட முடியுமென்று துணிகிறான். அதனால்தான், இந்த இடத்தில், கம்பன் அனுமனைக் குறிப்பிடும் பொழுது,

"மந்திரம் கெழுமுநூல் மரபு உணர்ந்து உதவுவான்" என்று சுட்டியிருக்கிறான்; அமைச்ச நிலைக்கு உரிய நீதி

நூல்கள் அனைத்தும் கற்றுத் தெளிந்த அனுமன், மதியூகமான மந்திராலோசனை அமையப் பெற்றிருப்பதால் உரிய நேரத்தில் அரிய வழி காட்டுகிறான். 'உன்னை அமைச்சனாகப் பெற்ற எனக்கு ஆகக் கூடாத செயலும்—உண்டா?' என்று சுக்கிரீவன் போற்றுவதில் வியப்பொன்றுமில்லை'' என எழுதுகின்றார்.

மேலும்,

''இராவண வதத்தில் கண்ணும் கருத்துமாயுள்ள இராமனுக்கு வாலி வதத்தில் அக்கறை உண்டாக்குவதற்கு இந்த உண்மையை (வாலியின் வால் செலாதவாய் அலது இராவணன் கோல் செலாது என்ற உண்மையை) எடுத்துக் காட்டுதல் நலம் என்று அமைச்சுக் கலையில் வல்லவனான அனுமன் கருதியிருக்கலாம்'' என்றும் குறிப்பிடுகின்றார்.

'அனுமன் கதை' என்ற தம் நூலில் திரு.மா. சீதாராமன் அவர்கள் ''வாலி தொலைந்தது கேட்டுச் சுக்கிரீவன் அனுமனை வாழ்த்தினான். மதிநலம் மிக்க மந்திரியால் அல்லவா சுக்கிரீவனுக்கு மனைவி கிடைத்தாள்; அரச பதவியும் திரும்பக் கிடைத்தது! அனுமனை எண்ணும்தோறும் அவன் உள்ளம் பூரித்தது!'' என எழுதுவார்.

''அனுமனோ ஞானி; சொல்லின் செல்வன்; நல்லறிவாளன், அவனும் வாலியை விட்டு அரசிழந்த சுக்ரீவனிடமே இருக்கிறான். ஆகவே சுக்கிரீவன் நல்லன், குற்றமற்றவன் என்றே அவனை ஏற்றுக் கொள்கிறான் இராமன்'' (49) என்பார் பி ஸ்ரீ. அதாவது வாலிக்கு வந்த வினையெல்லாம் அனுமனால்தான் என்றுசொல்லாமல் சொல்லுகின்றான்.

ஆக, வாலியைக் கொல்ல வேண்டுமென்பது அனுமனின் தன் மான தன்னிச்சைத் திட்டமேயன்றி, சுக்கிரீவன் ஒரு பொழுதும் நினைந்ததும் இல்லை!

அதனால்தான், இராமன் வரவைப் பற்றி சுக்கிரீவனுக்கு அனுமன் எடுத்துரைக்கும்பொழுது.

"... ... ... விரை செய்தார்.
வாலி என்ற அளவு இலா வலியினன் உயிர் தெறக்
காலன் வந்தனன்; இடர்க் கடல் கடந்தனம்" (603/2)

என்றான்! வாலி கொல்லப்படப் போவதை அப்பொழுதே உறுதிப்படுத்திக் கொண்டுவிட்டான்!

எனவே, 'வாலியை ஒழிப்பதைத் தவிர வேறு வழியில்லை எனக் கருதிய சுக்கிரீவனும், அனுமனும் இதற்குக் காலம் நோக்கிஇருந்திருக்கின்றனர் என்னும் திரு. இரத்தினம் செட்டியார் வாக்கை (5) முழுமையாய் ஏற்பதற்கில்லை.

"ஒருவன் இடையூறானவனாக இருப்பானேயானால், அவன் தொடர்ந்து இருப்பது இக்கட்டான சூழ்நிலை எனக் கருதப்பட்டால், தயா தாட்சண்யம் இன்றி என்ன செய்வார்கள் என்றே சொல்ல முடியாது! வாலியைக் கொலைத் தண்டனைக் குள்ளாக்கியதில்—இராமன் குற்றமுற்றவன் எனவே நான் அஞ்சுகிறேன்," (146) என்று சாஸ்திரிகளே எழுதுவார்!

இராமன் சினந்து, வாலியைக் கொல்வதாகக் கூறு ரைத்த பின்னும் சுக்கிரீவன்.

"விழுந்ததே இனி வாலி தன் வலி!" (613/71)
என்றுதான் எண்ணுகிறானேயன்றி,

'விழுந்திருந்தான் இனி வாலி' என்றிலன்!

'வாலியின் வலிமையைத் தொலைக்க (வாலியை அன்று) இராமனுக்கு ஆற்றல் உண்டோ?' என்று சுக்ரீவன் ஐயுறு கின்றான். அவனை மிகைப்படுத்திச் சொல்லின் செல்வன் தான்.

"அன்ன வாலியைக் காலனுக்கு அளிப்பது ஓர் ஆற்றல்

இன்ன வீரர்பால் இல்லை என்று அயிர்த்தனை'(613/73)
எனப் பேசிச் செல்கின்றான்.

இராமனை மராமரங்கள் இருந்த இடத்திற்கு அழைத்தேகி சுக்கிரீவன் சோதனை] செய்யத் தலைப்பட்ட பொழுது கூட,

''........என் தன் மனத்து இடர்போம்''(614[1)
என்றுதான் சுக்கிரீவன் புகன்றானே யன்றி'

'வாலியைக் கொல்வாய் என உறுதி கொள்வேன்' என்ற பாங்கில் சொற்களை உதிர்க்கவில்லை.

இராமனின் அம்பால் வீழ்ந்த அண்ணன் வாலியைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்தான், சுக்கிரீவன். இதனை,

''வாசத் தாரவன் மார்பு எனும் மலைவழங்கு அருவி
ஓசைச் சோரியை நோக்கினன்; உடன் பிறப்பு என்னும்
பாசத்தால் பிணிப் புண்ட அத்தம்பியும், பசுங்கண்
நேசத் தாரைகள் சொரிதர நெடுநிலம் சேர்ந்தான்''
(635/77)

எனும் காட்சியாக்கிக் காட்டுவார் கவிச்சக்கரவர்த்தி.

இப்படியிருக்க, வித்துவான் கா. இராமசாமி அவர்கள் 1963 ஜுன்—ஜுலை தமிழ்ப் பொழிலில் 'வாலி ஒறுக்கப்பட்ட முறை சரியா?' என்ற கட்டுரையில்: ''இராமனும் சீதையும் உறங்குகையில் 'வில்லை யூன்றிய கையோடும் வெய்துயிர்ப் போடும்' நின்ற இலக்குவன் 'தம்பியரின்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்' என்ற கும்பகர்ணன் ஆகியோரது சகோதர அன்புடன் ஒப்பிட்டு நோக்குழி சுக்கிரீவன் அண்ணன் மீது பற்றுக் கொண்டிலன் என்பது புலனாகும்'' என்று எழுதியிருப்பது. (சு.ஆ 136) அவர் சுக்கிரீவப் பாத்திரத்தை. அப்பாத்திரத்தின் பாச உணர்வின் தூய்மையைப் புரிந்து கொள்ளாததையே எடுத்துக் காட்டி நிற்கின்றது!

அந்த ஆசிரியரின் கருத்துக்கு மறுப்புத் தெரிவித்தல் போலே அந்த 'தமிழ்ப் பொழில்' 1963 ஆக—செப். இதழில் த. இராமநாதப்பிள்ளை, பி. ஏ. அவர்கள் ''வேண்டி

யவற்றைச் செய்யக் காலந் தாழ்த்தினனொழிய செய்ந்நன்றி மறந்தான் அல்லன் சுக்கிரீவன். வாலி மீது அன்புடையவன்'' என்று (க: ஆ.136) எழுதியிருப்பதையும் இங்கு நோக்குதல் சாலப் பொருந்தும்!

''எவ்வளவு பகைமையிருந்த போதிலும் 'மரணாந்தாநி வைராணி' என்றபடி எதிரியிறந்தவளவிற் பகைமை நீங்குதலால், அன்புடைத் தம்பியான சுக்ரீவன் தன் தமையனது மரணத்தைக் குறித்து வருந்தினனென்க. இங்ஙனமே இராவணனிறந்த பின்னர் விபீஷனன் வருந்துவதும் காண்க. வாலிக்குச் சுக்கிரீவன் பக்கலுண்டானாற்போலப் பெரும் பகைமை சுக்ரீவனுக்கு வாலியினிடம் ஆதியில் உண்டானதில்லையென்பதும் உணரத்தக்கது.

'முதலில் சீதையைத் தேடுவோம்; பின்னர் வாலியைப் பார்த்துக் கொள்வோம்' என்றுதான் சுக்கிரீவன் சொன்னான். இராமனும் 'நின்குறை முடித்தன்றிச் செய்கலேன்; என்றுதான் சொன்னான். 623/27

அப்பொழுது அனுமன்தான் இடைபுகுந்து, ''கொடுந்தொழில் வாலியைக் கொன்று'' (623/29) என, வாலியை இராமன் கொல்ல வேண்டுமென்பதை வலியுறுத்திப் பேசலுன்றான்.

ஆக, அண்ணன் தம்பியருள் பூசலும் ஏசலும் இருந்ததேயொழிய, ஒருவனின் உயிரை மற்றவர் பறிக்கும் எண்ணம் அமைந்திருக்கவில்லை; மதியூக மந்திரிமாருதியின் சூழ்ச்சியாலேயே—தன்மான உணர்வால் ஏற்பட்ட வன்னெஞ்சச் செய்கையாலேயே வாலி கொல்விக்கப்பட்டான் என உணர்தல் வேண்டும்!

இன்னமும், இயம்பப் போனால், இராமன் மறைந்திருந்து அம்பெய்வதற்கு ஓர் எண்ணத்தை மறைமுகமாக ஊட்டியவனே அந்த அனுமன்தான்!

‘‘சென்று திக்கினை அளந்தன, பனைகளின்; தேவர்
‘எங்ஙன் பிறக்கும்’ என்றுஇசைப்பன; இரு சுடர்திரியும்
குன்றினுக்கு உயர்ந்து அகன்றன; ஒன்றினும் குறுகா
ஒன்றினுக்கு ஒற்றின் இடை, நெடிது யோசனை உடைய’’
635/11

மராமரங்களை ஓர் அம்பினாலேயே துளைக்கச் செய்யும் சோதனைத் திட்டத்தை வகுத்துத் தந்தவன் அனுமன்தானே! இந்தச் சூழ்நிலைச் சோதனையில் இறங்கிய இராமனுக்கு வாலியை மறைந்து நின்று அம்பெய்யும் சிந்தனை தோன்றியதில் வியப்பில்லையன்றோ!

எனவே, சுக்கிரீவனைக் கொல்ல வாலி முயன்றதாகக் கூறப்படும் குற்றச் சாட்டிற்கு, வாலி முழு பொறுப்பாளி ஆகின்றானலன். ஆயின், இரண்டாவது குற்றச்சாட்டின் வலுவால், இராமன் வாலியினிடம் சமாதான நடவடிக்கைக்கு வழிகோல வில்லை என்று கூறி தப்பிக்க முயலலாம்.

துன்பப் பட்ட ஆன்மா என்று தெரிந்த மாத்திரத்தில் சுக்ரீவன் மேல் ராமனுக்கு அப்படியே இரக்கம் உண்டாய் விட்டது. ராமன் என்றால் இரக்கத்தை ஒழிக்க இயலாதவன் என்று சொல்ல வேண்டும்’ என்று குறிப்புரை எழுதுவார் டி.கே.சி அவர்கள். (458)

இதற்கும் முன்னதாக அவர்,’ எவ்வளவோ கஷ்டப் படுத்தலாம் அதிகாரம் ஒருவன் கையில் இருக்கும்போது’ கஷ்டத்துக்கு உள்ளானவன் சுக்ரீவனைப் போலத்தான் பேசுவான். பாதாளம் வரைக்குமே துரத்தித் துரத்தி அடித்தான் என்றெல்லாம் கஷ்டத்தை எடுத்து சொல்லத் தோன்றும். கஷ்டத்தை அப்படித்தான் அளக்க வேண்டும்’ என்றொரு குறிப்புரையும் எழுதுவார். (457)

‘வாலிக்குக் கோபம் வராமல் என்ன செய்யும்? இந்த விருத்தாந்தத்தை யெல்லாம் யோசனை பண்ணிப் பார்த்தோமானால் குற்றம் சொல்லுவதற்கு ஆளே இல்லை. சுக்ரீவன்

மேலும் குற்றம் இல்லை. வாலியின் மேலும் குற்றமில்லை. எல்லாம் விதி செய்த காரியம் என்றுதான் சொல்ல வேண்டி யிருக்கிறது. விதியின் விளையாட்டுத்தான்' என்றும் அவர் குறிப்பிடுவார். (488)

''சரண் புகுந்த தம்பியைக் கொல்ல முயன்றது (வாலியின்) குற்றமே'' என்று த. இராமநாதப் பிள்ளையும் (க.ஆ 137) குறிப்பிட்டுள்ளார்.

எப்படியானாலும் முதல் குற்றச்சாட்டை சுக்கிரீவனை வாலி துரத்தித் துரத்தியடித்ததை ஒப்புக்கொண்டேயாக வேண்டும்.

அடுத்தக் குற்றச் சாட்டு! வாலி தன் தம்பி சுக்ரீவனின் மனைவியை 'விரும்பினான்' என்பது!

'ராஜ்யம் மீண்டும் வாலிவசம் போய்விட்டது. ஆனால் அதோடு நிற்கவில்லை விஷயம். சுக்ரீவனது அருமை மனைவி யையும் கைப்பற்றிக் கொண்டான். இன்னம் வாலியின் கொடுமை தணிந்ததாக இல்லை' என்று அனுமன் கூறிய தாக டி. கே. சி அவர்கள் வெளிப்படையாகவே எழுதி யின்றார் உருமை வியவகாரத்தை. (465)

ஆனால் காவியத்தில் 'விரும்பினான்' என்ற சொல்லே காணப்படுகின்றது.

இக்குற்றத்தை எடுத்துரைத்தது யார்: சொல்லின் செல்வனாகிய, மதியூக மந்திரியாகிய மாருதி என்னும் அனுமன்! யாரைப் பற்றி? சிறியன சிந்தியா வாலியைப் பற்றி!

'வாலியைப் பற்றிய விவரங்களை அனுமன் நடுநிலை தவறாமல் சொல்வதை இராமன் உணர்ந்தான்; வாலியின் வல்லமை, பக்தி, ஆட்சிச் செழிப்பு அனைத்தையும் மறைக்கா மல் புகழ்ந்தான் அனுமன்: ஆகவே, உருமையைப் பற்றிச் சொன்ன செய்தியை இராமன் நம்பினான்' என்பார். திரு. இரத்தினஞ் செட்டியார். (32)

இங்கு நானே அனுமன் என்னும் அறிவின் மிகு அமைச்சனின் வாக்கு வன்மை மிளிர்கின்றது! அவன் சொல்லின் செல்வனுயிற்றே!

''அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான் எஞ்ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை'' (திரு. 64/5)

என்ற திருக்குறட்கு எடுத்துக் காட்டாய் நின்றவன்.

''சொலல் வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது'' (திரு 64[7)

என்ற திருக்குறட் பாவிற்த உதாரணமாய் நிற்பவன்.

எவ்வெவற்றை எப்படி எப்படிச் சொன்னுல் இராமனுக்கு நம்பிக்கையும், சினமும் தோன்றும் என்பதை உளவியல் தத்துவக் கோணத்தில் அனுமன் அறிந்து பேசினுன். அதனுல் அவன் சொல்லிய எல்லாம் உண்மையாகி விடுமா?

''சொல்லின் செல்வன் அல்லவா? கேட்போர் உள்ளத்தைப் பிணிக்கும் வகையில் வாதித்துச் சுக்கிரீவனது நலம் தேடுகிருன்'' என்று கூறும் எஸ். இராமகிருஷ்ணன் அவர்களின் கருத்துரையும் (11) ஈண்டு கருதத் தக்கது.

''வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் பகை மூண்டதையும், சுக்கிரீவன் மனைவி 'ருமை' என்பாளைக் கவர்ந்து கொண்டான் என்பதையும், வாலி இராவணனுடன் அக்கினியைச் சான்ருக வைத்து 'உனக்கு நட்பு எனக்கு நட்பு' என்றும், 'உனக்குப் பகை எனக்குப் பகை' என்றும் சத்தியம் புரிந்து நட்புக் கொண்டான், என்பதையும் அநுமன் கூறினுன். அவ்வண்ணம் கூறிய அநுமன் உண்மையுடையவன். பொய்யறியாதவன் என்று கம்ப நாடர் கழறுகின்ருர், என

''பொய்யிலாதவன் வரன் முறை இம்மொழிபுகல''
என்னும் பாடல் வரி கொண்டு பகர்வார் திரு. வாரியார் சுவாமிகள். (282)

"மறுபடியும் கிட்கிந்தைக்குப் புறப்படுமுன் சுக்கிரீவன் தன் மனைவியை மீட்டல் என்ற 'சிறு குறை' முடிக்க வேண்டுவன், 'சிறுகுறை' என்ன என்று கூறவில்லை. அனுமனே, அச்'சிறுகுறை'யைக் கொடுந்தொழில் வாலியைக் கொன்று, கோமகன் கடுங்கதிரோன் மைந்தன் ஆக்கி, கைவளர் நெடும்படை கூட்டுவது' என்று விளக்குகிறான். இதைச் 'சாது ஆம்' என இராமன் ஆமோதிக்கிறான். சுக்கிரீவன் யாதும் பேசவில்லை" என்று பொய்யுரையாத புண்ணியன்' என்ற, நூலின் அறிமுகத்தில் நா. வரதராஜுலு நாயுடு அவர்கள் எழுதுவார். (VI)

அனுமன் பொய்யன் என்பதன்று நமது வாதம்.

"விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின் (திரு. 64/8)

என்ற அமைச்சியல் சொல்வன்மை யுடையவன் என்பதே உறுதி. அதனால்தான் சொல்லின் வரன் முறை அறிந்து, 'தம்பியின் மனைவியை விரும்பினான்' என்று கூறினான். அவன் சொற் பொருளை வேறு வகையாய்ப் புரிந்து கொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்தி இராமனுக்குச் சினத்தை மூட்டினானேயன்றி பொய்யா புகன்றான்?

"சுருங்கிய சொற்களிலே செறிந்த பொருளை உணர்த்தும் ஆற்றல் உடையவன் அனுமன். கேட்பவரைத் தன்பால் ஈர்த்தல்; சொற்களை ஆராய்ந்து கூறல்; தன் கருத்தினை வலியுறுத்திப் பேசுதல்; காரண காரியங் காட்டிப் பேசுதல்; சலிப்பின்றிப் பேசுதல்; வகைப்படுத்திக் கூறும் திறன்; கேட்போர் உளமறிந்து மொழிதல்; காலமறிந்து கூறல்; இடனறிந்து பேசல்; குறிப்பால் உணர்த்தல்; இரு பொருட் படப் பேசல்; இடம் பொருள் ஏவலறிந்து சொல்லாடுதல் முதலிய தன்மைகள் அவன் சொல்லாற்றலுக்கு வெற்றியையளிக்கின்றன" என்பார், தம் 'அனுமன் ஆய்வும் வழிபாடும்' என்ற நூலுள் திருமதி ச. சிவகாமியவர்கள் (ப. ஆ. 75)

"அனுமனும் அறிவுடை அமைச்சன் சமயம் பார்த்து—'வாலி என்றுளான்; வரம்பில் ஆற்றலான்; இவனது

முன்னேன்; இவனது அரசினையும், அருமருந்தனைய தாரத்தை யும் வவ்விஞன்' என்று எடுத்துரைத்து வாலியின் இரக்க மற்ற, பண்பற்ற செயல்களை விரிந்துரைத்தான்'' (44) எனப் பி ஸ்ரீ. அவர்கள் எழுதுவதில் 'சமயம் பார்த்து' என்றது குறிப்பிடத்தக்கது.'

''எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.'' (திரு. 43/3)

''எப்பொருள்எத் தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.'' (திரு. 36/5)

என்பன அன்றே அடிப்படைத் தந்துவங்கள், இராமன் இந்த அடிப்படையில் ஆராயாது அனுமன் பேச்சை அப்படியே நம்பியது என்பதே, இராமனின் வாலிவதைக் குற்றத்திற்கு அடிப்படையாக அமைந்த பிழையாகும்!

'அனுமன் மெய் இராமனுக்கு அப்புறம் இப்புறம் திரும்பிப் பார்க்கவும் இடமின்றி வாலியை முடிக்க வழி வகுத்து விட்டது, என்பார் புரிசையார் (29)

'இவனது சொல் திறமைக்கு முன்னே மும்மூர்த்திகளின் சொல் திறமையும் இல்லாததாகக் காணப்படும் என்பதாம்! என்பார் வை. மு. கோ.

''ஆனல் வாலி, அப்படி (இராவணன் போல்) இல்லையே! தவறு செய்து விட்டானே! ருமையை அனுப வித்து விட்டானே. இனி திருந்த சந்தர்ப்பம் எங்கே கொடுப்பது? தவறு நடந்தபின் தண்டனை தானே தர வேண்டும்'' என்பார் பி. ஸ்ரீ. (50)

என்னே வெளிப்படையான வார்த்தைகள்! அவ னுருன செய்கையை ருமையைத் தவிர பிறரால் சொல்லக்கூடாத் எங்கும் சொல்லாத, இரகசியச் செய்கையை, சாட்சியம் (கருத்தரிக்கும் இயற்கையாலன்றி) உருவாக்க முடியாத செய்கையை, இவ்வளவு உறுதியாக அனுபவித்து விட்டான் என்று எழுதுவது நாகரிகமாகப் படவில்லை.

அனுமன் பெண்வாடையே இல்லாத மாபெரும் பிரம்மச் சாரி! அவன் எண்ணத்தில் சிறியன சிந்திக்கலாமா? அவன் செவ்வழி உள்ளத்தான் ஆயிற்றே! டி. கே. சி. அவர்கள் உரை எழுதிக் குறிப்பது போலே, அவன் உயர்ந்த நெறியி லேயே இயல்பாகச் செல்லும் உள்ளம் படைத்தவனாயிற்றே!

ஒருவன் மனைவியை மற்றொருவன் அழைத்துச் சென்றான் என்றால் உடனடியாகப் பாலுணர்வின் தப்பெண்ணம் புகட்டிக் காணல் ஞானிக்கு அழகு அன்று! வேறு பலராலும் சொல்லப்பட்டதை இவன் இராமனிடம் எடுத்துச் சொன்னான் என்று கூட நினைப்பதற்கின்றி,

> ''உருமை என்று இவற்கு உரிய தாரம் ஆம்
> அருமருந்தையும் அவன் விரும்பினான்'' 612/67

என்று, கம்பர் அனுமன் தன் அபிப்பிராயமாகவே எடுத் துரைத்ததாகப் பாடிவிட்டார்!

தான் ஆண்ட சொல் அசம்பாவிதமானது என்பதை அவன் உள் மனம் உரைத்துக்கொண்டே இருந்தது போலும் வீழ்ந்த வாலியுடன் இராமன் பேசியிருந்த பொழுது, அனுமனும் வேறு சிலரும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அனுமன் சில வார்த்தைகள் பேசினான்.

''எல்லாம் விதி செய்த காரியம். வாலி, தம்பியை எவ்வளவோ அன்பாகப் பார்த்து வந்தான். அப்படியே தம்பி சுக்ரீவனும், தமையன்மேல் அளவில்லாத அன்பைச் செலுத்தி வந்தான். ஒன்றிலும் குறைவில்லை.

ஏதோ விதிவசத்தால், வாலி நாட்டை விட்டுத் தூர தேசம் போக நேர்ந்தது. சுக்கிரீவன் அரசியல் பொறுப்பை வகிக்க நேர்ந்தது. முன்னதாக யாரும் சொல்லி விடாமல் திடீர் என்று தமையன் திரும்பி வந்தான். வந்தபோது சில வினையாளர்கள் இனந் தெரியாமல் வாலியை மதியாமல் இருந்து விட்டார்கள்.

வாலிக்குக் கோபம் வந்தது இயல்புதான். எல்லாம் சுக்ரீவனது செயல் என்றே எண்ணி விட்டான். தம்பிமேல் ஒரே ஆங்காரம் பிறந்து விட்டது. அந்த ஆங்கார வெறியில் தம்பியைத் தொலைத்துவிட எண்ணி வேலை செய்தான். யார் சொல்லியும் வாலியின் செவியில் உண்மை ஏறவில்லை. சுக்ரீவன் ஓடி ஒளிந்து பல கஷ்டங்களுக்கெல்லாம் உள்ளானான், என்னவானாலும் தமையன் மேலிருந்த இயற்கையான அன்பு இதயத்தை விட்டுப் போய்விடவில்லை. இதோ, மூர்ச்சித்து விழுந்து கிடக்கிறானே! உண்மையை இது புலப்படுத்த வில்லையா!'' என்பதாக மிக்க உருக்கத்தோடு பேசி முடித்தான் அனுமன்.

ராமனுக்கும் வாலிக்கும் உண்மை விளங்கி விட்டது. என்ன உண்மை? விதியின் கொடுமையே எல்லாம் என்ற உண்மைதான்.

தேக வலிமை நீங்கிய வாலிக்கு அனுமன் சொல்லியதெல்லாம் உணமைதான்; தம்பி சுக்ரீவனைப் பகைத்ததெல்லாம் பிசகுதான்' என்று உணர முடிந்தது'' என்று டி. கே. சி, அவர்கள் எழுதுகின்றார்கள் 509-510

இதில் நாம் உற்று நோக்க வேண்டுவது, 'அனுமன், தான் முதலில் இராமனிடம் எடுத்துக்கூறிய உருமை விவகாரம் ஒன்றையும் இப்பொழுது சாடையாகக் கூடத் தொட்டுப் பேசவில்லை என்பதே; அதற்குக் காரணம், தான் முன்னம் அக்கட்டுக் கதையைக் கையாண்டது காகுத்தனுக்குக் கோபம் உண்டாக்க வேண்டும் என்பதனாலேயே என அவன் உள்ளுணர்வு கூறியது மட்டும் அன்று,'' அப்பிரச்சனையை எடுத்திருந்தால் வாலி தன் களங்கமற்ற போக்கை விளக்கியிருப்பான்! அது தன்னுடைய வேண்டாத தீய சொற்களைத் தெளிவுபடுத்தியிருக்கும்; மேலும், அது இராமனையே பாதித்திருக்கும் — ஆபாது தான் மேற்கொண்ட முடிவுக்கு வருந்த வேண்டியதாகியிருக்கும்—என்பதையும் அனுமன் உணர்ந்ததினாலேயே!

## 'விரும்பினன்' என்பதற்கு வேறு சாட்சி உண்டா?

இராமன், சுக்கிரீவனோடு முதலில் உரையாடிய பொழுது,

> "மை அறு தவத்தில் வந்த சவரி, இம்மலையில் நீ வந்து
> எய்தினை இருந்த தன்மை, இயம்பினள்" 606/24

என்றான். ஆனால் சுக்கிரீவனோடு விருந்துண்ணும்பொழுது அவனிடம் இராமன், 'நீயும் மனைவியைப் பிரிந்துள்ளாயோ? எனவினவினன். எனவே அந்தச் சவரி என்றளாவி, சிறியன ஏதும் சிந்தித்து உருமை கதையொன்றும் இராமனிடம் சொல்ல வில்லை என்றாகின்றது! அதனால் வாலி வதை சரியானதே என்பவர்கள் சவரியைச் சாட்சிக்கு இழுப்பது வாலியின் மீது சுமத்தப்பட்ட இரண்டாவது குற்றச்சாட்டிற்கு உதவாது போகின்றது.

சவரிக்கு முன்னரே கவந்தன் இராமனிடம், சுக்கிரீவனோடு நட்புக்கொண்டு சீதையைத் தேடச் சொல்கின்றான். ஆனால், அவன் வாலி—சுக்கிரீவன் அரசியல் வரலாற்றையோ, வாலி—உருமை இணைப்புக் கதையையோ ஒன்றும் குறிப்பிட்டுப் பேசவில்லை, அவனுவது சொல்லியிருந்தால், இராமன் சுக்கிரீவனிடம் அவனுடைய மனைவியின் பிரிவைப் பற்றிக் கேட்டிருக்க மாட்டான்.

அவன் கூறியது,

> "தீயவர்ச் சேர்கிலாது செவ்வியோர்ச் சேர்ந்து
> செய்தல்" 577/54

> "கதிரவன் சிறுவன் ஆன கனக வாள் நிறத்தினனை
> எதிர் எதிர் தழுவி. நட்பின் இனிது அமர்ந்து,
> அவனின் ஈண்ட
> வெதிர் பொரும் தோளினனை நாடுதல் விழுமிது"

என்பவையே யாகும். 577/55

இராவணனுக்குத் தோழன் ஆகிவிட்டான் வாலி என்பதை அறிந்திருந்ததனால் சுக்கிரீவனை நாடச் சொன்னானேயன்றி, வாலி கெட்டவன் என்று கருதியதனால் அன்று.

''உற்ற காரியத்துக்கு உரிய தேவை என்பதை எடுத்துரைத்த கந்தருவன், கிஷ்கிந்தைக்கு வேந்தனாக விளங்கும் மாவீரன் வாலியிடம் செல்லும்படி யோசனை கூறவில்லை. அண்ணனுக்கு அஞ்சி அனாதையாக வாழும் சுக்கிரீவனிடம் செல்லும்படிக் கூறுகிறான். வாலியை அவன் அறிந்திருக்க மாட்டான் என்று வாதிக்க முடியாது, ருசியமுக பர்வதத்தில் ஒளிந்து வாழும் சுக்கிரீவனைப் பற்றித் தெரிந்தவன், புரிந்தவன், வரம்பில்லா ஆற்றலுக்குரியவனாகக் கிஷ்கிந்தையில் கோலோச்சும் வாலியைப் பற்றித் தெரிந்திரான் என்று சொல்ல முடியாது. பத்துந்தலை இராவணனின் செருக்கை அடக்கிச் சீதையின் மீட்சியை எளிதில் சாதிக்கும் வல்லமை உடைய வாலியை விட்டுவிட்டுச் சுக்கிரீவனது நட்பை நாடும்படி கந்தருவன் இராமனுக்கு யோசனை கூறியதின் மர்மம் யாது? இது ஆராய்ச்சிக்குரிய விஷயம் (7) என்றும்,

''கந்தருவனைப் போலவே. சவரியும் வாலியின் நட்பைக் கூடா நட்பாக ஒதுக்கி விட்டாள்போல் தோன்றுகிறது! இதன் காரணத்தை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும்'' (8) என்றும்,

''வாலி சிற்றினம் சேர்ந்ததால் அவன் இராமனுக்குத் துணைவனாக முடியாதென்பதையும் வாலி வதை இராவண வதத்துக்கு முன்னேற்பாடாக முற்றுப் பெற வேண்டும் என்பதையும், சுக்கிரீவனது துணையே கொள்ளத் தக்கது என்பதையும் தனு என்ற கந்தருவனும் சவரி என்ற வேடர் குலமாதும் ஓர்ந்து தெளிந்தனர். எனவே, இராமனை ருசிய முக பர்வதம் சென்று பகலவன் மைந்தனுடன் நட்புக் கொள்ளும்படி அறிவுறுத்தினர்'' (149) என்றும் திரு. எஸ். இராமகிருஷ்ணன் குறிப்பிட்டுள்ளார்.

"எப்பக்கம் செல்வது என்று தெரியாமல் இருந்த இராம இலக்குவர்க்குக் கவந்தனுடைய இந்த ஆலோசனை எதிர் பாராமல் கிடைத்த பேருதவியாக அமைகிறது. சுக்கிரீவனைப் பற்றியோ, அவன் அண்ணனாகிய வாலியைப் பற்றியோ, இராம இலக்குவர்க்கு முன்னர்த் தெரியாது. இப்போது முதன் முதலாகச் சுக்கிரீவனைப் பற்றிக் கேள்வி யுறுவதோடு, அவன் எங்கே இருக்கிறான் என்றும், அவன் இருக்கும் இடத்திற்குப் போவதற்கு யாரிடம் வழி தெரிந்து கொள்ளவேண்டும் என்றும், அந்தச் சுக்கிரீவனைத் துணைக் கொண்டு சீதையைத் தேட வேண்டும் என்றும், ஆலோசனை அவர்களுக்குக் கிடைக்கிறது" என்றும் (98)

"இராமனைத் துதித்த சவரி, இராம இலக்குவரிடத்தில் உருசியமுகப் பருவதத்திற்குச் செல்லும் நெறியெல்லாம் நினைந்து சொல்கிறாள்" (99) என்றும் மு.மு. இஸ்மாயீல் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஆனால் இவ்விருவரும் கூட கவந்தன் சவரி ஆகிய இரு வரும் உருமை விஷயம் ஏதும் இராமன்பால் குறிப்பிட்டுள்ள தாக எழுதும் அடிப்படையைக் காணவில்லை!

எனவே, முதலில் கவந்தன் கூறியது பொதுநெறி. வாலி தீயவன் என வெளிப்படையாகச் சொல்ல வில்லை யென்றாலும், அவன் வழுத்திய வாசகத்தின் உதவி கொண்டு, 'வாலி கெட்டவன் என்று கவந்தன் கூறியதாக வாதிடுவோரைத் தடுக்கிலேம்.

திரு. வாரியார் சுவாமிகள், தம் கட்டுரையில் "அவன் மனைவியை வாலி கவர்ந்து கொண்டான், சுக்கிரீவன் மனைவியை இழந்து கவல்கின்றான்—மனைவி இழந்தவ னுக்குத் தான் மனைவியின் பிரிவுத்துயர் விளங்கும். நீர் வாலியைக் கொன்று சுக்கிரீவன் மனைவியை அவனிடம் சேர்த்தருளும். அவன் இராவண வதத்திற்கு உதவி செய்து, சீதையைத் தேடித் தருவான் என்று கூறிச் சென் றான்" என எழுதுகின்றார்! அதற்கு ஆதாரம் ஏதும் காண் கிலேம்!

செந்நாப் போதார்,

"பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலின் குன்றல் இனிது" (திரு. 82/1)
"பேதை பெருங் கெழீஇ நட்பின், அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும்" (திரு. 82/6)

என்றெல்லாம் தெளிவித்ததின் அடிப்படையில் அவன் பொதுவாக முதலில் எடுத்துரைத்தான்.

நிச்சயமாக ஒரு செய்தி தெரியாதபொழுது அது நெறி முறையானதாய்த்தான் இருக்கும் எனக் கருதுவதே உயர்வுள்ளும் பண்பினதாகும் அன்றோ! அதனாற்றானே தெய்வப் புலவரும்,

"உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல்; மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து" (திரு. 60/6)

என்று அறிவுரை பகர்ந்துள்ளார்!

எனவே கவந்தனுடைய சாட்சியமும் 'வாலிவதை சரி' என்பார்க்கும் முழுமையாய் உதவவில்லை.

"இராமன் பிறனில் விழைந்தானைத் தண்டிக்கப் பிறந்தவன். அவன் காரிய வெற்றிக்காகப் பிறனில் விழைந்த வாலியோடு கூட்டுச் சேர்ந்தால், அச்செயல் என்றென்றும் அவனுக்குத் தீரா வசையாகவே இருக்கும். காரிய அனுகூலத்திற்காகப் பொருந்தாக் கூட்டுச் சேரக் கூடாது. இராமனின் குழு அறவொழுக்கம் — பிறழாதவர்களையே உறுப்பினர்களாகக் கொண்டிருக்க வேண்டும். இதனாலேயே கவந்தன், "தீயவர் சேர்கிலாது செவ்வியோர்ச் சேர்த்துச் செய்தல்" எனக் கூறினான்" என்பார் திரு. இரத்தினஞ் செட்டியார். (2)

இராமன் பிறனில் விழைந்தானைத் தண்டிக்கப் பிறந்தவன் என்பதற்கு ஆதாரம் எங்கே?

"சுடு தொழில் அரக்கரால் தொலைந்துவான் உளோர்" (33/7)

''இருபதுகரம், தலைசர் ஐந்து என்னும் அத் (33/10)
திரு இலி வலிக்கு,ஒரு செயல் இன்று எங்களால்''
என்றும்

''ஐ இரு தலையினேன் அனுசர் ஆதியா
மெய்வலி அரக்கரால், விண்ணும் மண்ணுமே
செய்தவம் இழந்தன—திருவின் நாயக!—
உய்திறம் இல்லை'' என்றும்,(34/17)

''எங்கள் நீள் வரங்களால், அரக்கர் என்று உளார்,
பொங்குமூ உலகையும் புடைத்து அழித்தனர்;
செங்கண் நாயக! இனி தீர்த்தல்; இல்லையேல்,
நுங்குவர் உலகை! ஓர் நொடியில்''(34/18) என்றும்

''கொதிகொள் வேல் அரக்கர் தம் கொடுமை கூறினர்''
(34/16)

அதற்கு விடையிறுத்த திருமால்,
''......வருந்தல், வஞ்சகர்.

தம்தலை அறுத்து. இடர் தணிப்பென் தாரணிக்கு''
என்றும் (34/19)

''மசரதம் அனையவர் வரமும், வாழ்வும் ஓர்
நிசரத கணைகளால் நீறு செய்ய, யாம்
கசரத துரக மாக்கடல் கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதும் தாரணி'' (34/21)

எனவும் கூறி

''கொலை தொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பேன்''
எனவும் உறுதி அளித்தார். (33/6)

என்டு திரு.வாரியார் சுவாமிகளின் கூற்றைக் காண்போம்.

''இராமர் அவன் (வாலியின்) முன்னே தோன்றினார். அந்த இடத்தில் கம்பர் கூறும் கவியை நன்கு சிந்தியுங்கள்.

'இறை திறம்பினனால் என்னே இழிந்துளோர் இயற்கை என்னின்
முறைதிறம்பினனால் என்று மொழிகின்ற முகத்தான் முன்னர்
மறை திரும்பாத வாய்மை மன்னர்க்கு முன்னஞ் சொல்லுந்
துறை திறம்பாமல் காக்கத் தோன்றினான் வந்து தோன்ற''

'வேத நெறி தவறாத வேந்தனுடைய அறத்தினைக் காப்பதற்காகவே வந்து தோன்றிய பெருமான் அவன் முன்னே தோன்றினார்' என்று கூறுகின்றார், கம்பர். நூலாசிரியரது கருத்து இராமர் தரும நெறியைக் காக்க வந்தவர் என்பது'' என எழுதுகின்றார்.

தரும நெறியைக் காத்தல் என்பதற்காக இராமன் தோன்றினான் என்றால், அதுவரை தருமநெறி காக்கப்படாமல் இருந்ததா? கம்பர் கவிதையின் உட்பொருள் வேறு!

'தோன்றினான்' —யார்? இராமன்! அவன் யார்? திருமால்! ஏன் தோன்றினான்?' முன்னஞ் சொல்லும்துறை திறம்பாமல் காத்தற்கு—அதாவது தேவர்களுக்குத் தான் கொடுத்த இராவண வத வாக்குறுதியைத் தவற விடாமல் காத்தற்காக அவதரித்தான்! எங்கே அவதரித்தான்?—மறை திறம்பாத வாய்மை மன்னர்பால் அவதரித்தான்.

இப்படியாக உட்பொருளை உணருவோமேயானால் திரு. வாரியார் சுவாமிகளின் மேலெழுந்த வாரியான கருத்துரை முழுமையானதன்று என்று படும்!

''கம்பர் காட்டிய இராமன் இருவகையினன். ஒருவன் எளிய மனிதப் பண்புடையவன், இன்னொருவன் திருமாலின் அவதாரமான இறைமையைப் பெற்றவன்'' எனத் திரு. வி. இராசமாணிக்கம், எம்.ஏ. அவர்கள் 1963 பிப்—மார்ச் 'தமிழ்ப் பொழில்' இதழில் குறிப்பிட்டுள்ளார்.க.ஆ.82

''இராமனின் அவதார இரகசியத்தைக் கோசிகன் வாயிலாகக் கூறி விடுகிறான் கம்பன். மூல சக்தியின் திருவவதாரமே இராமன் என்றும் குறிப்பிடும் கம்பன் நீலமாலையின் கூற்றான 'மாத்திரை அளவில் தான் மருந்து' எனும் பாடலின் மூலம் விரிசடைக் கடவுள் அம்சத்தையும், கடிமணப் படலத்தின் 'கோவையின் பெருவடமுத்தங் கோத்தன,' 'மேவரும் சுடரென விளங்கும்' என்னும் பாடல் களின் மூலம், மூலப் பொருளாவன் என்பதையும், சுந்தர காண்டத்தில் அனுமன் வாயிலாக 'சொல்லிய அனைவரும் அல்லன்' 'மூலமும் நடுவும் ஈறும் இல்லது' என்னும் பாடல் களின் மூலம் மும்மூர்த்திகளின் திருவவதாரமாகக் கம்பன் காட்டுகிறான். காப்பியத்தின் மூலமாக வைணவத்தையும், சைவத்தையும் ஒன்று வைத்துள்ளான் கம்பன்'' என்றெல் லாம், கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் 1970ம் ஆண்டின் வங்கத் தமிழ் வெளியீட்டில் திரு. ப. ந. தியாகராஜன், இராமனின் அவதார இரகசியத்தைக் குறிப்பிடுகிறார். (க.ஆ. 86)

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைச் சார்பு நான்காவது கருத்தரங்கு மலர் வெளியீட்டில் 1972 ஆம் ஆண்டில் 'இராமன் திருமாலா?' எனும் நூலில், ''இராமா யணத்தில் இராவணன் செருக்குற்ற போது அவனை அழிக்கத் திருமால் வடிவில் பரம்பொருள் மனிதனாக வந்து அவதரித் துள்ளார்'' எனப் பல பாடல்களைச் சான்றாக்கி விளக்கியுள் ளார் திரு கு. திருமேனி அவர்கள். (க,ஆ 88)

தயரதன் புதல்வன் என்ற முறையில் இராமன் என்னும் திருநாமத்தோடு எல்லையற்ற சக்தியை மறைத்துக் கொண்டு மனிதனாகவே-குறைபாடுடைய மனிதனைப் போலவே நடித்துவிட வேண்டும் என்று விரும்பிய பரம்பொருள் சிற்சில சமயத்துத் தன் வரம்பிகந்த வல்லமையில் ஒரு சிறு பகுதியைக் காட்ட வேண்டி நேர்கின்றது'' (99) என்றும்

''மனிதனாக இராம நாடகம் நடத்த விரும்பிய கடவுள் சில சமயம் தன் உருவை மறைத்துச் செயலை மட்டும் காட்டி

விடுகிறது. இராம நாடகத்திலே தெய்வ மானுடக் குழப்பம் ஆங்காங்கே விரவியிருக்கிறது. அதனால்தான் வாலிவதைக்கு ஒரு காரணம் நம் அறிவைக் கொண்டு அறிதல் அருமையா யின்றது என்றும்

"கடவுள் ஒரு செயலைச் சாதிக்க விரும்பி மனித வடிவு கொண்டு முயன்றபோதெல்லாம் பெரும்பாலும் தோற்றுப் போய் இறுதியில் தன் மெய் நிலையைக் காட்டியே வெற்றி பெற நேர்கின்றது" (110) என்றும் எழுதுவார் பெ. இராமானுஜன்.

"அநுமான் தத்வஜ்ஞாந முள்ளவனாதலால் இராம பிரானை விஷ்ணுவின் அவதார மென்று அறிந்தனன் என்றலும் ஆம்" என்பார் திரு. வை. மு. கோ. அவர்கள்.

ஆனால், இந்த அவதாரக் காட்சிப் பேச்சு வார்த்தைக் களில் 'பிறனில் விழைவுப்' பேச்சு இடம் பெறவில்லை.

அது கொண்டு இராமனுக்குப் 'பிறனில் விழைவு' என்பது குற்றமாகப்படவில்லை என்று வாதிடல் மடமையே! ஆனால், வாலி 'பிறனில் விழைந்த குற்றத்தின்பாற் பட்டவன் அல்லன் என்று மேலே விளக்கியதைத் தெளி வாக்கவே இதனை எடுத்துரைத்தோம். அப்படியானால், கவந்தனும் சவரியும் சுக்ரீவனைத் துணையேற்கச் சொல்லியது ஏன்?

"வாலியுடன் இராமன் கூட்டுச் சேர்ந்திருந்தால், வாலி ஒருவனே சீதையை மீட்டுக் கொண்டு வந்திருப்பான். அஃது இராமனின் வில்லின் ஆற்றற்கு மாசு சேர்ப்பிக்கும். சீதையை மீட்பதற்கு ஒருவன் துணையாக அமையலாம். ஆனால், அவனே காரணமாக அமையக் கூடாது" என்பார் கூற்றை ஏற்கலாமா?

வாலி அவ்வாறு சீதையை மீட்க முற்பட்டிருப்பானே யானால், சீதை,

"அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ:
எல்லை நீத்த உலகங்கள் யாவும், என்

சொல்லினும் சுடுவேன்; அஃது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு என்று விசினேன்'' 845/18

என அனுமனிடம் சொல்லிய சொல்லை வாலியிடம் சொல் லித் தடுத்திருக்க மாட்டாளா? அது கேட்டு வாலி, இராமனே சீதையை மீட்கட்டும் என்று, தான் துணைபுரியும் கட்டத்தோடு நின்றிருக்க மாட்டானு? ஆக அக்காரணம் ஏற்புடைத்தன்று.

'பிறவில் விழைந்த வாலியிடம் அவனைத் துணைக் கொள்ளச் செல்லவில்லை' என்பார் கூற்றை ஏற்கலாமா!

''வாலி சுக்கிரீவன் மனைவியைத் தன்னவள் ஆக்கிக் கொண்டான் என்ற குற்றச்சாட்டையே எதிர்க்கும் நிலையில் இக்காரணத்தை ஏற்பதற்கு இல்லை.

'பிறவில் விழைந்த வாலியிடம் இராவணன் தன் மனைவியை அபகரித்துச் சென்றிருக்கிறுன் என இராமன் கூறினுல், அவன் ஒருவேளை அதற்காக அனுதாபம் கொள்ளாமல் போகக்கூடும் என அஞ்சியே அவனைத் துணைக் கொள்ளச் சொல்லவில்லை' என்பார் கருத்தை ஏற்கலாமா?

''இராவணன் செய்யும் தீய காரியத்திற்கு வாலி உதவி யாயிருப்பான் என்று எண்ணலாகாது. உதவுவதுதான் நட்புக்கு அழகு என்று எவரும் கூறுர் (95) என்பார் பெ. இராமானுஜன் அவர்கள்.

'இராமனைப் பற்றிப் பெருமதிப்புக் கொண்டு, தன் மனைவி தாரையிடம் அவன் இராமன் பெருமைகளையெல் லாம் பேசினுன். தாரை சொல்லியவற்றை நம்பவில்லை. வடஆற்காடு மாவட்டம் திருப்பத்தூர் 1977 ஆம் ஆண்டு கம்பன் விழா மலரில் 'மலைக்குயில் மயில்' என்ற தலைப் பிலான தனது கட்டுரையில் பேராசிரியை சரசுவதி இராம நாதன் அவர்கள் 'வாலியின் உயர்ந்த பண்பு இராமனைச் சந்தேகிக்க இடம் தரவில்லை' எனக் குறிப்பிடுவார். இராமன் மறைந்து நின்று அம்பெய்து தன்னை வீழ்த்திய பின்னை,

"ஆவியை சனகன் பெற்ற அன்னத்தை, அமிழ்தின் வந்த
தேவியை, பிரிந்த பின்னை, திகைத்தனை போலும்,
செய்கை" 636/86

எனக் கேட்கின்றான்.

அவன் மனத்தில், இராமன் சீதையைப் பிரிந்திருக்கும் நிலை எவ்வளவு அனுதாப உணர்வோடு ஆழ்ந்திருந்தால் இந்த வார்த்தைகள் வெளிவரும் என்பதை உளவியல் போக்கின்படி உன்னிப் பார்த்தால் அக்காரணம் இருக்கும் இடம் தெரியாமலே போகின்றது!

அப்படியானால் உண்மைக் காரணம் என்னவாக இருக்கும்? ஆதியில் திருமால்

"வான்உளோர் அனைவரும்; வானரங்கள் ஆய்,
கானினும், வரையினும், கடிதடத்தினும்,
சேனையோடு அவதரித்திடுமின் சென்று" 34/20

என்றான். அவன் சொற்படி நடப்பான் வேண்டி இந்திரன்.

"எனதுகூறு மருவலர்க்கு அசனி அன்ன வாலியும்
மகனும்" (35/26)

எனக் கூறினான்.

இரவியோ,

"மற்று எனது கூறு அங்கு அவற்கு இளையவன்"
(35/27)

எனக் கூறினான்.

கூறியவர்கள் கூறியபடியே வந்தனர். ஆனால், இந்திரன் கூறுகிய வாலி, வந்த வேலையை மறந்தான். அதாவது இராவண வதத்தில் இராமனுக்குத் துணை நிற்க வேண்டும் என்பதை மறந்து, இராவணனோடு கூட்டுச் சேர்ந்து விட்டான்! மேலும், அதே நோக்கில் தோன்றியுள்ள, இரவியின் கூறுகிய சுக்கிரிவனைப் பகைத்துக் கொண்டான்!

இதனை அறிந்திருந்தான் அந்த கவந்தனாகிய கந்தர்வன். இராமன். 'திருமாலே' என்று உணர்ந்து ஏத்திப் போற்றிப் பாடும் ஞானமுள்ள கந்தர்வனுக்குச் சாதாரண தேவர்களின் அவதார இரகசியம் தெரியாமலா போகும்?

ஆக, ஒரு கல்லால் இரு மாங்காயை அடிக்கும் வேலை செய்தான்! சுக்கிரீவனோடு நட்புக் கொள்ளச் சொன்னதால், அவனுடைய தொல்லை நீங்கவும், வந்த வேலையை மறந்த இந்திரன் கூறு சுயநினைவு பெற்றுத் திருந்தவும் செய்திடவே அந்த யோசனையைக் கூறினான்!

அதனில் இன்னமும் ஒரு சிறப்புள்ளது!

இராமன் இரவிகுல திலகன். சுக்கிரீவனும் இரவியின் கூறு. ஆக, இனம் இனத்தைக் காக்கும் பான்மைக்கு இராமனை ஆளாக்கி விட்டான் கவந்தன்!

'இராமனின் குழு அறவொழுக்கம் பிறழாதவர்களையே கொண்டிருக்க வேண்டும்' என்ற அடிப்படையில் காணும் பொழுது சுக்கிரீவன் அறவொழுக்கம் பிறழாதவன் எனக் கொள்வதற்கில்லையே.

இறக்கும் தருவாயில் வாலி, தன் தம்பி சுக்கிரீவனுக்கு அறவுரைகள் பல அறைந்தான் அவற்றுள்,

"மதஇயல் குரக்குச் செய்கை மயர்வொடு மாற்றி. வள்ளல்
உதவியை உன்னி, ஆவி உற்றிடத்து உதவுகிற்றி;
பதவியை எவர்க்கும் நல்கும் பண்ணவன் பணித்த யாவும்
சிதைவுஇல செய்து, நோய்இன் தீர்வு அரும் பிறவி தீர்தி" (644/143)

"அரசியல் பாரம் பூரித்து அயர்த்தனை இகழாது, ஐயன்
மரைமலர்ப் பாதம் நீங்கா வாழுதி; மன்னர் என்பார்
எரிஎனற்கு உரியார் என்றே எண்ணுதி; எண்ணம் யாவும்
புரிதி, 'சிற்றடிமை குற்றம் பொறுப்பர்' என்று எண்ண வேண்டா" (644/144)

என்பவை கூர்ந்து நோக்க வேண்டியவை. சுக்கிரீவன் ஒழுக்கம் பிறழக் கூடியவன் என்பது இவற்றால் தெரிகிறது!

சுக்கிரீவனுக்கு முடிசூட்டியதும் இராமன் அவனுக்கு அறவுரைகள் பற்பல புகன்றான். அவற்றுள்,

''மங்கையர் பொருட்டால் எய்தும்
மாந்தர்க்கு மரணம் என்றல்
சங்கை இன்று உணர்தி; வாலி
செய்கையால் சாலும்; இன்னும்,
அங்கு அவர் திறத்தினாலே,
அல்லலும் பழியும் ஆதல்
எங்களின் காண்டி அன்றே;
இதற்கு வேறு உவமை உண்டோ?'' 651/13

என்பதுவும் கூர்ந்து நோக்கத் தக்கது!

வாலி இறந்தது, 'மங்கையின் பொருட்டால் என்று தான் இராமன் குறிப்பிட்டானே அன்றி, 'உன் மனைவியைப் பெண்டாடியதால் உன் அண்ணன் இறந்தான்' என்று வெளிப்படைப் பொருளால் குறிப்பிடவில்லை! ஏன்? வாலி தம்பியின் தாரத்தைச் சுவைத்தான் என்பதை இராமன் நம்பவில்லை! அதனால்தான்,

''உருமை என்று இவற்கு உரியதாரம் ஆம்
அரு மருந்தையும் அவன் விரும்பினான்.''
(612/67)

என்று அனுமனைக் கூறவைத்த கவிச்சக்கரவர்த்தி, தன் கூற்றாக,

''.........'பரிவுஇலன்! ஒருவன் தன் இளையோன்
தாரம் வெளவினன்' என்ற சொல் தரிக்குமாறு
உளதோ?'' (612/69)

என்று பாடி நின்றார். அதாவது, 'தம்பியின் மனைவியை வாலி பெண்டாண்டான்' என்பதை இராமன் கேட்டுக் கொள்ள மாட்டான்—சகிக்க மாட்டான்—என்பதாகும்.

இதனை மெய்ப்பிப்பான் வேண்டி, இராமன் முதலி லேயே சுக்கிரீவனிடம்,

''புகை உடைத்து என்னின், உண்டு பொங்கு அனல்
அங்கு' என்று உன்னும்
மிகை உடைத்து உலகம்'' 651/9

என்று கூறிவிடுகின்றான்,

மேலும், வாலியின் வரலாறும் சுக்கிரீவனின் நிலையும் அறிந்து, இராமன் சினந்து வாலியைக் கொல்வதாகச் சூளுரைத்த போதும்,

''தலைமையோடு, நின் தாரமும், உனக்கு இன்று
தருவேன்'' (612/70)

என்றே கூறினான்! வாலியின் இன்பத்தில் மூழ்கியிருந்தவ ளாய் உருமையை இராமன் கருதியிருந்தால் 'நின் தாரமும்' என்று குறிப்பிட வாய் வந்திராது. தற்காலிகமாக வேறும் மாற்றானுக்கு மனைவியாய் நடந்து கொண்டிருந்தால் அவளை அவளுடைய கணவன்பாலே, 'நின் மனைவி' எனக் குறிப் பிட்டுக் காட்டுவது 'வெந்த புண்ணில் வேல் ஏற்றுவது போன்றது' என்ற உளவியல் உணராதவனா இராமன்?

இந்த உளவியல் அடிப்படை உணர்ந்திருந்ததால் தானே, இந்திரனால் பெண்டாளப்பட்ட அகலிகைக்குத் தன்னால் சாப விமோசனம் கிடைத்தபின் அவளை, அவள் தன் கணவனாகிய கௌதம முனிவரிடம் சேர்ப்பிக்கும் பொழுது, 'மாதவன் மனையாளே! என்ற பாங்கில் விளிக்காமல்,

''மாதவன் அருள் உண்டாக வழிபடு; படர்உறுதே
போது நீ, அன்னை'' என விளித்தான். (79/25)

அதுமட்டுமா'

''குணங்களால் உயர்ந்த வள்ளல்
கோதமன் கமலத் தாள்கள்
வணங்கினன், வலம் கொண்டு ஏத்தி,

மாசு அறுகற்பின் மிக்க
அணங்கினை அவன்கை ஈந்தான்''  79/28

எனக் காண்கின்றோம்!

இப்படியெல்லாம் அண்ணனாலும், அன்னையாலும் அறிவுரைகள் வழங்கப்பட்டிருந்தும். தான் சொன்ன சொல் மறந்து,

''நித்நியா நின்ற செங்கிடை வாய்ச்சியர்
முத்தவாள் நகை முள்ளயிற்று ஊறுதேன்,
பித்தும். மாதும், பிறவும், பெருக்கலால்
மத்த வாரணம் என்ன மயங்கினான்''  674/21

இந்நிலை, ஒழுக்க நிறைவின் பாற்பட்டதோ?

ஆக, கவந்தனும் சபரியும் சுக்கிரீவனோடு இராமனை நட்புக் கொள்ளச் செய்தது வாலியின் பாற்கொண்ட வன்மையால் அன்று, சுக்கிரீவன் பாற்கொண்ட மென்மையால் அன்று, அவதார இரகசியம் அறிந்ததன் விளைவால் ஓரம்பு இருகூறு என்ற பாங்கிலேயே ஆகும், எனத் தெளிதல் வேண்டும்;

ஈண்டு திரு. இராமகிருஷ்ணன் அவர்களின் நோக்குரை காண்போம்.

''வாலியின் மனது தூயது. ஆனால், அவனது குறை, திருத்தத்துக்கு உரியது அன்று. சமுதாயத்துக்குச் சாத்தானாக வாய்த்திருக்கும் இராவண ஆட்சியை அழிக்க வாழ்வின் பிரவாகம் திரண்டு செல்லுங்கால் இராவண சகவாசம் என்ற குற்றம் புரிந்து, தடை மதிலென இடைவந்து நிற்கிறான், வாலி. தடைமதிலைத் தயவு தாட்சண்யமின்றித் தகர்த்தெறிவதைத் தவிர அறத்துக்கு வேறு வழியில்லை. எனவே, வாலிவதை நிகழ்கின்றது. (151) என்கின்றார்.

இராவணன் எந்தச் சமுதாயத்துக்குச் சாத்தானாக இருந்தான்? தேவர்களுக்கு வேண்டாதவனாக இருந்தாலேயன்றி,

இலங்கைச் சமுதாயத்திற்கோ, 'கிட்கிந்தைச் சமுதாயத் திற்கோ, கோசல சமுதாயத்திற்கோ அவன் இடையூருக இருந்தான் என்று எங்கேனும் காணப்பட்டுள்ளதா? கோசல சமுதாயத்தில் தோன்றிய ஒருவன்—அந்த இராமன்-தானே வலிய சென்று இராவணன் அவர்களுக்குத் தீங்கிழைக்கும் சூழ்நிலையைத் தோற்றுவித்தான்! அதற்குக் காரணம்—அந்த இராமன்—திருமாலின் அவதாரம். தேவர்களுக்கு அபயம் கொடுத்ததைக் காக்க வந்தமையால் அல்லவா! அது நிற்க,

வாலி. இராவணனுடன் நெருங்கிய கூட்டுச் செய்து கொண்டதால் இருவரும் இணைந்து எங்கேனும் அட்டூழியங் கள் செய்தனரா? அல்லரே! அப்படியிருக்க வாலி இராவண னின் வேண்டாத செயலுக்குத் துணை நிற்பான். எனவே அவன் தடைமதில் போல்வான், என்றெல்லாம் தவருகக் கற்பனை செய்து அவனைத் தகர்த்தெறிய வேண்டிய அவசியம் என்ன? வாலியின் வழியாகவே சீதையை மீட்கும் முயற்சி செய்திருந்தால், வாலிக்குப் பயந்தாகிலும் இராவணன் சீதையை விட்டிருக்கக் கூடுமே!

இங்கே நொண்டிச் சமாதானம் வரும்! தன் தம்பியின் மனைவியை விரும்பியவன் இராவணனுக்கு அறவுரை கூற முன் வருவானு? என்பர். அனுமனின் சாதுர்யமான வார்த்தைகள் இவ்வாறெல்லாம் இக்கட்டான சூழ்நிலையைத் தோற்றுவித்து விட்டன என்றுதான் கொள்ளவேண்டும்!

இது பற்றி அமரர் மூதறிஞர் இராஜாஜீ அவர்கள் என்ன சொல்லுகின்ருர்கள் எனப் பார்ப்போம்,

''கவந்தன் சொன்னபடி தசரத குமாரர்கள் மறுபேச் சின்றி சுக்கிரீவனுடைய நட்பை நாடினர்கள். கவந்தன் சுக்கிரீவனைவிட மிகப் பராக்கிரமசாலியான வாலியின் உதவியை அடையச் சொல்லவில்லை இராமனுக்குப் பெரிய நன்மை செய்து அதற்கு அவனைக் கடன்படச் செய்து அவனிடம் பிறகு உதவி பெற்ருல் அந்தஸ்து குறையாமல்

விரும்பியதை அடைந்து வெற்றி பெறல் வழியாகும். வாலி யின் உதவியால் வெற்றி அடைந்தால் ராமனுடைய அந்தஸ்து வாலிக்குக் கீழ்ப்பட்டுப் 'போயிருக்கும் அல்லவா? கவந்தன் யோசனை ராமன் புகழைக் காப்பாற்றிற்று. ராமா வதாரத்தில் ஆண்டவனும் தேவியும் சகிக்க வேண்டிய துக்கங்களில் இந்தத் தவறும் பழியும் ஒன்று'' என்பார்.

இதனால் நாம் உறுதியாக விளங்கிக் கொள்வது இராமன் தவறுகளுக்கு ஆளானவனே; உப்பு சப்பில்லாத காரணங் களைக் காட்டி அதனைத் தப்புவிக்கத் தேவையில்லையென் பதாகும் அன்றோ?

1931 நவ-டிச. ஆனந்த போதினியில் திரு. ப. ஸ்ரீனி வாசன் அவர்கள் எழுதியுள்ளது பற்றிப் பார்ப்போம்.

''வாலி வதைக்குக் கூறப்படும் பிற காரணங்களை மறுத்து. வாலிவதை இராமன் மேற்கொண்டுள்ள அவதார லட்சியம் நிறைவேறுவதற்கு அவசியம். அதனால் வாலி வதை நிகழ்கிறது என்றுரைத்து வாலிவதையின் தத்துவத் தையும் கூறுகிறார். நிராயுதபாணியான வாலி மீது மறைந் திருந்து அம்பெய்தது குற்றமே என்கிறார். (க. ஆ. 218)

பெ. இராமானுஜன் அவர்கள் ''இராமன் மறைந் திருந்து அம்பு எய்தது வாலி பெற்றுள்ள வரத்திற்குப் பயந்துதான் என்னும் அபவாதம் அபவாதமே'' என்கின்றார் (12)

இனி' கம்பர் கவியின்பம்' என்னும் தமது நூலுள் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் 1969ம் ஆண்டிலேயே என்ன எழுதியிருக்கின்றார் என்பதையும் நோக்குவோம்.

''வாலியின் வரம் பற்றி அறிந்திருந்ததால், இராமன் மறைந்திருந்து அம்பு எய்தான். 'தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலும் செய்கை' என்ற வாலியின் கூற்று. சக்தியில்லையேல் சிவம் இல்லை' என்ற உண்மையை உணர்த்தும் வாக்கு. வாலிவதம் இராமாயணக் கதைக்குத்

தேவையற்ற ஒரு நிகழ்ச்சி. வாலி-சுக்கிரீவன் சண்டையில் இராமன் தலையிட்டது குடும்ப நீதிக்கு விரோதமான செயல் வாலியைக் கொல்வதற்கான அரச கடமையோ, உரிமையோ, கைகேயி ஆணைப்படி இராமன் வானப்பிரஸ்த முதலால் அவனுக்கு இல்லை. அனுமனுடைய வாக்கு வன்மையால், ஏற்பட்ட மதிமயக்கமும். சீதையைப் பறி கொடுத்ததால் ஏற்பட்ட மான உணர்ச்சியும், ஒன்றன்பின் ஒன்றாகத் தவறிழைக்கத் தூண்டி இறுதியில் மறைந்திருந்து வாலியைக் கொல்லும் அநீதிக்கு இராமனை இரையாக்கி விட்டன, ஜீவான்மாவுக்கு "அருளு முன்னர் பரமான்மா காட்சிப் படுவதில்லை'' என எழுதுகின்றார்.

இதனில் 'வாலிவதம் இராமயணக் கதைக்குத் தேவை அற்ற நிகழ்ச்சி' என்பதை ஒப்புதற்கில்லை. வாலிவதம் நிறை வேறவில்லையென்றால் வாலி சுக்ரீவன்சர்ச்சை நீடித்திருக்கும். அதன் விளைவாகச் சீதையைத் தேடும் பணி தள்ளிப் போயி ருக்கும்; விளைவு அனுமன் சீதையின் தற்கொலை முயற்சியைப் பார்த்துத் தடுத்திருக்க இயலாது! காரியம் வேறு விதமாய் முடிந்திருக்கும்!

''பழம் பெருங் காப்பியத்தையும் பற்பல நூற்றாண்டு களுக்கு முன்னம் ஆட்சி புரிந்த மன்னரின் பண்புகளையும் படிக்கும்பொழுது இராமனுடைய எண்ணங்களை இன்றைய மனோபாவனைகளைக் கொண்டு மதிப்பிட நமக்கு உரிமை இல்லை'' (145) என்கின்றார் சாஸ்திரிகள்! மானுட நெறி முறைகளின் அடிப்படைகளின் பாங்கில் மாற்றங்கள் ஏற் பட்டு விடுமோ, நமக்கு உரிமை இல்லாது போக?

இதேபோல், 'கம்பர் கவிநயம்' எனும் தமது நூலுள் கவிஞர் அ. கு. ஆதித்தர் அவர்கள் ''இராமன் வாலிக்குத் தூது அனுப்பாததும், மறைந்திருந்து கொன்றதும் பிழையே யாகும்'' என திட்டவட்டமாக எழுதிவிட்டு, ''ஆனால் இஃது கால தர்மத்தின் பாற்படும்'' என்ற கருத்தையும் சேர்த்துள்ளார். (க. ஆ. 370)

பின்னைய கருத்தில் கால தர்மம் அமையுமாயின் இராமனை அந்த யுகத்தார் பின்பற்றினுல் போதும்; இந்த யுகத்திற்கு அது அவசியம் எனக்கொளல் தேவையில்லை என்ற நியாயமான வாதம் எழும். எனவே, இராமனின் பிழையை உறுதிப்படுத்தி நிறுத்தியதோடு நின்றிருக்கலாம் அவர்.

''கம்பன் கண்ட இராமன்'' எனும் தமது நூலில் நீதிபதி மு. மு. இஸ்மாயில் அவர்கள் ''வாலி சுக்கிரீவன் வரலாற்றைக் கேட்ட இராமன், வாலியைக் கொல்லச் செய்த முடிவு, சந்தர்ப்பங்கள் உருவாக்கிய முடிவேயாகும். அடைக்கலமான அங்கதனிடம் தன் வாளைக் கொடுக்கும் இராமன், 'நீ இது பொறுத்தி' என்பதற்கு வாலியைக் கொன்ற இச் செயலை மன்னிப்பாயாக' என்பதே பொருளாகும்' அரசியற் படலம் 23, 24 முதலியவற்ருல், வாலியை முறைதவறிக் கொன்ற போதிலும் இராமன் தன் தவற்றை உணர்ந்து அதனை வெளிப்படுத்தவும் செய்கிருன்'' என்று திட்டவட்டமாக எடுத்துக் காட்டுகின்ருர். (க. ஆ. 385)

''கருணை மலர்ந்த கண்களையுடைய இராமனும் வணங்கிய அங்கதனை வாரித் தழுவி அவனை ஏற்றுக் கொண்டதற்கு அறிகுறியாக 'இதை நீ வைத்திரு' என்று தன் உடைவாளை நீட்டினன்'' (140) என்பார் பெ. இராமானுஜன் அவர்கள்.

'எந்த குற்றத்தையும் அதன் உள் நோக்கம் கொண்டு தீர்மானிக்க வேண்டுமே யன்றிச் செயல்கொண்டு தீர்மானிக்கக் கூடாது என்பார் இரத்தினஞ் செட்டியார் (71)

அப்படியானல் 'இராமன் செய்தது குற்றமே; அதற்கு உள் நோக்கத்தைப் பார்க்கும்பொழுது அவன் தண்டனைக்குள்ளாகான்' என்று அவரே ஒப்புக் கொண்டதாகின்றது,

இதே பார்வையில் வாலியின் குற்றத்தை ஏன் நோக்கக் கூடாது? அவன் உருமையை அபகரித்த குற்றம் சுக்கிரீவன் அவனை நாடியேனும் தன் எல்லைக்குள் வரவேண்டும் என்ற

பதே; இந்தச் சூழ்நிலையை வைத்து அவனையும்—அவளையும் இணைத்துப்பேசி அவனைத் தண்டனைக்குரிய குற்றவாளி யாக்கிவிட்டான் அனுமன்!' என்று ஏன் கொள்ளக் கூடாது.

''அருமை உம்பிதன் ஆருயிர்த் தேவியைப்

பெருமை நீங்கினை எய்தப் பெறுதியோ?'' (639/109)

என்று இராமனே கீழ்த் தரச் செய்கையை எடுத்துக் கூறும் அளவிற்கு வாலி உருமையைக் கெடுத்தான் என்பதற்குச் சான்று யாண்டு உளது;

மேலும், இராமன் இந்த அளவிற்கு ஆபாசச் செய் கையை எடுத்துப் பேசுவானு? அப்படியானல் இராமனின் கூற்றுக்குப் பொருள்தான் என்ன?

'ஒரு பெண்ணை அபகரிக்கும் செய்கையால் ஒருவன் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ள நினைப்பது தருமம் அன்று. அவனைப் பற்றி ஆய்ந்து நீ எண்ணவில்லை; எண்ணியிருந்தால் உன் தம்பி மனைவியை, தர்மம் நீங்கி நின் பெருமை குன்ற அபகரித்துக் கொண்டிருப்பாயா?' என்று பொருள் கொண் டால், இராமனும் சிறியன சிந்தியாப் பெரும் பண்பாள னாகக் காட்சியளிப்பான் அன்றோ!

இனி, அனுமன் பிரம்மச்சாரி என்றாலும் சுக்கிரீவன் நல்லமைச்சன். அதனல் சமயமறிந்து, தக்க முறையில் தங்கள் காரியம் நிறைவேறும் வகையில் பேசுவதுதானே அமைச்சர்க்கழகு!

''பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்

பொருத்தலும் வல்லது அமைச்சு (திரு.64/3)

என்றெல்லாம் அமைச்சர்கள் தகுதியைச் செந்நாப் போதார் செப்பவில்லையா!

அதனல்தான் வாலி உருமையை சுக்கிரீவனிடம் செல்லவிடாது நிறுத்தியதை, 'விரும்பினுன்' என்ற சொல் லால் குற்றச் சாட்டாக்கி விட்டான்' என வேண்டுமானுல் கொள்ளலாம்!

இதனைத்தான், "ஆயினும் அனுமன் தாரம் விரும்பினுன் என்று வாலிமேற் குற்றம் சாட்டினுன். இராமன் கேட்டபிறகுதான் அனுமனுக்கே அதைச் சொல்லத் தோன்றியது. ஊரிலே விட்டு வரப்பட்டாள் என்று சொல்வாது 'அவன் விரும்பினுன்' என்று சொன்னுன். சுக்கிரீவன் ஓடியவுடனே அவன் மனைவியையும் வாலி அவனிடம் அனுப்பியிருக்க வேண்டும். அதைச் செய்யத்தவறியதால் அவன் விரும்பினுன் என்று சொல்ல இடம் உண்டாயிற்று. இது வாலி அரசதர்மத்தில்—வழுவியதன் பயன். உண்மையிலேயே வாலி ஒழுக்கத்தில் தவறி நடந்திருப்பின், அதை வேறு யார் பொறுத்தாலும் அவன் மனைவி பொறுக்க மாட்டாள். வாலி ருமையோடு நாட்கள் கழித்திருப்பானுகில் தாரை துன்பமே அறியாது இருந்திருப்பாளா?' இது வரையில் எப்பொழுதும் என்னோடு மாறுபடாத குணத்தை யுடையவனே' என்றும் கூறுகிருள்" என்றெல்லாம் திரு. கோ. சுப்பிரமணியப் பிள்ளையவர்கள் (சொர்ணம்மாள் சொற்பொழிவுகள்—வாலிவதை) பேசியுள்ளார்கள் (க.ஆ.138)

மற்றும், சுக்கிரீவனுக்கு அரசாட்சி தரவே வாலிவதை நிகழ்த்தப்பட்டது. அதற்கு இராமனும் இலக்குவனும் சொன்ன காரணங்களைவிடத் தலைமையோடு தாரமும் தருவேன் என்று சற்றும் ஆராயாமல் இராமன் சொன்ன சொல்லும், அதற்குத் தூபம் போட்ட அனுமன் சொல்வன்மையும் சூழ்ச்சியும் உண்மையான காரணம்" என்கிருர், திரு. நா. ஆறுமுகம்அவர்கள் [க.ஆ.140] ஆனல் பெரியவர்கள் தவறியும் தம் வாயால் தகாத வற்றைச் சொல்லக் கூடாதே.

"ஒழுக்கம் உடையவர்க் கொல்காவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்"
"நயன்சாரா நன்மையின் பயன்சாரப்
பண்பில் சொல்வல்லா ரகத்து" (திரு. 20/4)

என்றெல்லாம் பெருநாவலர் புகன்றுள்ளாரே! இருக்கட்டும்.

'விரும்பினான் என்ற சொல்லைச் சொல்லின் செல்வனே சொல்லிவிட்டதால் இராமனும் வாலியிடம்,

''அருமை உம்பி தன் ஆர் உயிர்த் தேவியை
பெருமை நீங்கினை எய்தப் பெறுதியோ?''

என்று கேட்டுவிட்டான்!

கிட்கிந்தையில், வாலி—தாரை, சுக்கிரீவன்—உருமை ஒன்றாய் வாழ்ந்தவர்கள். சுக்கிரீவன்,—'பிழைத்தால் போதும்' என நாட்டை விட்டே ஓடி ஒளிந்து கொண்டான். அதனால் வாலி—தாரை வாழ்ந்த சூழலிலேயே உருமை இருந்து விட்டாள்! ஓடி விட்ட தம்பியின் மனைவியை வாலி வலியகொண்டு சென்று அவன்பால் சேர்ப்பானா? சேர்ப்பிப்பானா? மாறாக, அவனை அழைத்துச் செல்ல தம்பி வருவானேல் வஞ்சம் தீர்த்துக் கொள்ளலாம் என்று வேண்டுமானால் எதிர்பார்த்து இருந்திருப்பான். உருமை தன் கணவன்பால் சென்று சேரப் புறப்பட அவளை வாலி தடுத்து நிறுத்திக் கொண்டான் என்று கூறக்கூட சான்று இல்லை. அதனால் அவர்களுடன் வாழ்ந்த—வாழ வேண்டியதாகிவிட்ட—உருமையை,—'விரும்பினான்'' என்னல் கற்பனைக் குற்றமே!

வாலி நல்லவன்தான்—ஆனால் அதைப்பற்றி இராமனுக்கு அக்கரை இல்லை. வாலி சுக்கிரீவனுக்கு வேண்டாதவன். அதனால் தனக்கும் வேண்டாதவன் என்றாகி விட்டது. சுக்கிரீவன் மனைவியைப் பற்றி, வாலி விரும்பினான் என்று யாரும் எதுவும் பேசினது கிடையாது. சுக்கிரீவன் அவளை நினைத்ததாகவோ, நினைத்துத் தேடியதாகவோ, தேடி வருந்தினதாகவோ யாதொரு சான்றும் கிடையாது. ருமை தன் கணவனைத் தேடியதாகவும் யாதொரு குறிப்பும் கிடையாது. வாலி ருமையைப் பற்றியதாகவோ, அவளுக்குக் கொடுமை செய்ததாகவோ, தகாதபடி நடந்து கொண்டதாகவோ சான்று இல. சுக்கிரீவன் மனைவியை மீட்க முயன்றதாகவோ எதுவும்

நடந்ததாகவோ தோன்றவில்லை" யெனத் திரு. கோ. சுப்பிரமணியப்பிள்ளை யவர்கள் பேசியுள்ளார்கள். (க.ஆ.138)

அது பற்றிச் சுக்கிரீவன் இராமனிடம் ஏதும்கூறவேயில்லை!

இங்கே, பாரதக் கதையின் நிகழ்ச்சி ஒன்று நினைவிற்கு வருகின்றது!

துரியோதனன் மனைவியும், கர்ணனும் சொக்கட்டான் ஆடியிருந்தனர். அவள் ஒரு கட்டத்தில் ஆட்டத்தை நிறுத்தித் திடீரென எழுந்தாள். கர்ணன், அவளை 'எழக் கூடாது' என்று வாயால் சொல்லி வற்புறுத்தியிருக்கலாம்; அதுதான் பிற பெண்டிரோடு பழக நேரும் போழ்து வேற்று ஆண் மகனுக்கு எல்லை. ஆனால், அவன் என்ன செய்தான? கொண்ட மனைவியைப் பிடித்து இழுத்து உட்கார வைப்பது போலே அவள் மடிச் சேலையைப் பற்றி இழுத்தான்: அவளின் மேகலை அறுந்தது.

இந்தக் காட்சியை வேறொருவர் கண்டிருந்தாலே விபரீதப் பொருள் கொண்டு கட்டுக் கதைகள் பரப்பி யிருப்பர்!

ஆனால், இக்காட்சியைப் பின்னால் வந்து கொண்டிருந்த துரியோதனனே கண்டு விட்டான். அருகில் வந்தான். அவர்கள், நடந்து விட்ட நிகழ்ச்சிக்காக வருந்தி நின்றனர். துரியோதனன், இதற்குப் பொருள் விபரீதமாகக் கொண் டானா? சந்தர்ப்பச் சூழ்நிலையாய் நடந்ததைப் புரிந்து கொண்டான். (அறுந்த -மேகலையை) 'எடுக்கவோ? கோக்க வோ?' என்று கேட்டான்.

துர்க்குணனுக்கே இந்த எண்ணம் தோன்றுமானால், நற்குணனான அனுமனுக்கு விபரீதப் பொருள் ஏன் தோன்றிற்று? சற்குணனான இராமன் ஏன் பிறன் சொல்லை ஆராயாது ஏற்றுக் கொண்டான்?

இராமனின் இந்த செய்கைக்குக் காரணம் கற்பிப்பாரும் உளர்.

'பிறன் மனை விழையாமையே இராமனின் அருங்குணங் களில் தலையாயது. அதனால்தான்,

''இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்''

சீதைக்கு அளித்தான் என்பர்.

இந்த வாக்குறுதியும் சந்தர்ப்பச் சூழ்நிலையால் வந்ததே!

இராமன் திருமாலின் அவதாரம். சீதையோ இலக்கு மியின் அவதாரம்.

''மருங்கு இலா நங்கையும், வசைஇல் ஐயனும்
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர்
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?''

என்று வியந்து, 85/38

''ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்
எனக் காணத் திருமணம் நடந்தேறியது. 194/85

அதன் பின்னர், இருவர்க்கும் தங்கள் அவதார நோக்கம் நினைவிற்கு வந்தது போலும்!

தங்கள் அவதார நாடகத்தில் சீதை, தான் இராவண னிடம் அகப்பட்டுக் கொண்டபின் இராமனாகிய திருமால் தன்னுடைய மற்ற மனைவியாகிய பூமாதேவியை நாடிச் சென்று விட்டால் தன் கதி என்னவாகும் என்று அஞ்சு வாளோ எனத் திருமாலாகிய இராமன் ஐயுற்றான். உடனே மேலே குறிப்பிட்ட உறுதிமொழி தந்திட்டான்!

அவன் கூறியது, என்றைக்கும் ஒரு கணவன் கடைப் பிடிக்க வேண்டிய பொது உத்தம நியதியென்றால்,

'எந்த எப்பிறவிக்கும் மறுமாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்' தந்திருக்க வேண்டுமே!

ஆனால், திருமால்தான் இருதாரம் உடையவன் ஆயிற்றே! (நீளா தேவியையும் இங்கு நினைவு கூர்ந்தால் மூன்று மனைவியர் ஆகின்றனர்)

''அரவு ஆகிச் சுமத்தியால்; அயில் எயிற்றின் ஏந்துதி
யால்,
ஒரு வாயில் விழுங்குதியால், ஓர் அடியால் ஒளித்தியால்,
திரு ஆன நிலமகளை; இஃது அறிந்தால் சீறுளோ
மரு ஆரும் துழாய் அலங்கல் மணிமார்பில் வைகுவாள்''
417/57

என்று விராதன் வேறு நினைவுபடுத்திச் சென்றுவிட்டான்!

ஏன், இதற்கும் முன்னமேயே தயரதன், இராமனுக்கு பூமாதேவியை இரண்டாவது தாரமாகத் திருமணம் செய்விக்க விரும்புவதாய்க் கூறினானே! இராமனுக்கு முடிசூட்ட வேண்டிய, தன் விருப்பத்தை நேரடியாகக் கூற வேண்டியது தானே! அதனை விடுத்து,

''பெருமகன் என்வயின் பிறக்க, சீதை ஆம்
திருமகள் மணவினை தெரியக் கண்டயான்,
அருமகன் நிறைதணந்து அவனி மாது எனும்
ஒரு மகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்''
254/28

''நிவப்புறு நிலன் எனும் நிரம்பு நங்கையும்,
சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்,
உவப்புறு கணவனை உயிரின் எய்திய
தவப்பயன் தாழ்ப்பது தருமம் அன்று அரோ'' 235/29

என்றல்லவா பகர்ந்தான்!

அவனுக்கு இராமன்—சீதை இருவரும் திருமால்—இலக்குமியின் அவதாரங்கள் என்பது தெரியாமலேதான் அவ்வாறு உரைத்தான் என்றாலும் பூமாதேவியை வேறு தன் மகனுக்கு திருமணம் செய்விக்க விழைவதாய்க் கூறிய கூற்று இராமன்—சீதை செவியேற சீதை (இலக்குமி) தன் நிலைக்காய் ஐயுற்றிருப்பாள் என்பதில் ஐயம் இல்லை!

எப்போதும் மற்றவளைத் தள்ளிவிட முடியுமா? அதனால், 'பல மாதர்' என்று செப்பாமல். 'இரு மாதர்' என்றே எண்ணிக்கை எல்லை காட்டினான். இந்தப் பிறவியில் சீதை ஒருத்தியைத் தன் மனைவி என மனத்தே திண்ணமாய்க் கொண்டு, மற்ற இருவரை மனத்தாலும் நினையாதிருந்து, அவளை அந்த அல்லல்களில் இருந்தும் விடுவிப்பதாகத் தைரியப் படுத்தினான்!

தன் கணவன் இராமனாகிய திருமால் "மார்பணி முத்தாரந்தான்' என்பதைக் குறிப்பிடவே, சீதை அனுமனிடம் முதலில்,

"ஆரம் தாழ் திருமார்பற்கு அமைந்தது ஓர்
தாரம்தான் அலளேனும்" (847/30)

என, 'தான் என்ற அழுத்தத்தைக் கொடுத்துக் கூறுகின்றாள்.

இராமனும் சீதையும் தாங்கள் அவதாரங்கள் என்பதை உணர்ந்து அப்போதைக் கப்போது மறைமுகப் பேச்சுக்களாலும், செயல்களாலும் வெளிப்படுத்தியுள்ளனர் என்பது சொல்லுக்குச் சொல் பொருள் ஆழம் காண் பார்க்கே புலனும்.

பகவான் ஸ்ரீ சத்திய சாயி பாபா அவர்கள் தாம் தந்துள்ள 'ராமகதா ரச வாஹினி' என்னும் நூலில் இராமனும், சீதையும், மாரீசனாகிய மாய மானைப் பிடித்துத் தரக்கோரும் காட்சிக்கு முன் தாங்கள் அவதாரங்கள் என்ற தெளிவான உணர்வுடனேயே பேசிக் கொண்டிருந்ததாகக் குறிப்பிடுவார்.

'இராமனுக்குத், தான் தெய்வம் என்பது தெரியாது. இராவணயுத்தம் முடிந்த பின்னர் தேவர்கள் பிரமன் வாயிலாக இராமனுக்கு அவர் தெய்வம் என்பதை உணர்த்தினர்.' என்பார் இரத்தினஞ் செட்டியார் (91)

இதுவே போல், புரிசையாரும், 'ஆனால் தான் ஒரு அவதார மூர்த்திதான் என்பதனை இராமபிரான் ஒப்புக் கொண்டதாக வரும் இடம் ஒன்றுகூட இல்லை' என்பர். (10)

இவையெல்லாம் தவறு. அவன், 'தான் அவதாரன் என்பதை அப்போதைக்கப்போது உணர்கின்றான் என்பது கம்பரின் சொற்களை ஊன்றிப் பார்க்கும்போது தெளிவாகும். மேலும், விராதன் கவந்தன் துதிகளும், சவரியின் பேச்சும், இந்திரன் துதியும் இராமன் அவதாரன் என்பதைக் காட்டி நிற்கவில்லையா? அப்போதெல்லாம் இராமன்தான் புரிந்து கொள்ளவில்லையா? நிற்க,

வாலி இறந்தபின் தாரை சொல்லி அழுத வாக்குமூலம் இரண்டாம் குற்றச்சாட்டிற்கு எதிர்ப்பாகின்றது! அவள்,

''ஓங்கிய குரலால் பன்னி இனியன உரைக்க
ஆற்றாள்'' (647/163)
வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்
கரை சேரா இடர் வேலை காண்கிலேன்
உரைசேர் ஆருயிரே! என் உள்ளமே!
அரைசே! யான் இது காண அஞ்சினேன்'' (647/164)

''துயராலே தொலையாத என்னையும்
பயிராயோ? பகையாத பண்பினாய்!
செயிர் தீரா விதி ஆன தெய்வமே!
உயிர் போனால் உடலாரும் உய்வரோ?'' (647/165)

''ஐயா! நீ எனது ஆவி என்பதும்
பொய்யோ? பொய் உரையாத புண்ணியனே!''
(648/169)

இவ்வாறெல்லாம் அவள் பன்னிப் பன்னி அரற்றி அழும் அளவிற்கு, வாலி தன் மனையாளோடு ஒன்றி வாழ்ந்தான் என்பது தெரிகிறது.

மேலும் பின்னால் மாசற்ற பத்தினியாள் மண்டோதரி—(மாண்ட கணவன் உடல்மீது விழ, உயிர் போகும் அளவிற்குக் கற்புடைய மாது)—இராவணன் உள்ளத்தே பிறன் மனையாளான சீதையின் காதல் உளதோ என்று இராமனின் அம்பு தேடியதாகக் கூறும் வகையில்

பாடல் அமைந்தது: ஏனென்றால் சீதையின் மேல் இராவணன் மோகம் கொண்டதனை அவள் அறிவாள்!

ஆனால் உண்மையில் வாலி உருமையை இச்சித்து முறையற்ற வகையில் நடந்துகொண்டிருந்தால், தாரையின் வாயிலாக ஒரு குறிப்பேனும் வந்திராதோ? அவன் மாய்ந்த பின்னாலேனும், பெண்ணிற்குப் பெண் பொறாமைப்பட்டுக் குற்றம் சாட்டும் தன்மையில்!

1978 ஆம் ஆண்டு காரைக்குடி கம்பன் மணிமலரில் ''கம்பன் காட்டும் உளவியல் இரகசியங்கள்'' என்ற தம் கட்டுரையில் அருட்பா சா. ஆர். தங்கவேலு அவர்கள் பெண்மைக்கு இன்னுமொரு விந்தையான குணம்! தன் கணவன், தனது உடல், பொருள், ஆவி எல்லாவற்றாலும் தனக்கே முழுமையாகச் சொந்தமாயிருத்தல் வேண்டும் என்றும் எண்ணுவாள். ஒரு பெண் எதை வேண்டுமானாலும் சகிப்பாள். ஆனால் வேறொரு பெண்ணிடம் தன் கணவன் கொள்ளும் மனச்சார்வை எந்தப் பெண்ணும் எந்நிலையிலும் சகிக்கமாட்டாள்'' என்றதோர் உளவியல் உண்மையை எழுதுவார்.

''வாலி சுக்கிரீவனின் கூக்குரலைக் கேட்டு அவனுடன் சண்டைக்குப் புறப்படுமுன் வாலியின் மனைவி தாரை அவனுக்குச் சில உண்மைகளைக் கூறினாள். ஆனால் அவள் அவனுக்கு அறிவுரை ஒன்றும் கூறவில்லை.

''ஈண்டு உங்களின் கவனத்தை ஒரு காட்சிக்கு அழைக்கின்றேன். இராவணன், விபீஷணன் முதலாயவர்களிடம் ஆலோசனை கேட்டபொழுது அவர்கள் சீதையை அவளுடைய கணவனிடம் திரும்பவிட்டு விடும்படி அறிவுரை கூறினர்.

இதற்கு இணையான சூழ்நிலையில் தாரை வாலியிடம் அறிவுறுத்திக் கொண்டிருக்கும் பொழுது, ''ருமையை சுக்கிரீவனிடம் திருப்பிச் சேர்த்து விடுங்கள், அவன் அதனால் மிகவும் அங்கலாய்த்துக் கொண்டிருக்கின்றான். இராஜீவ

விஷயத்தில் அவனுக்கு ஒரு வகை வெறுப்பு. ஆனால் இந்த ருமை விஷயமும் ஒரு பெருந்தொல்லையானது. நீர் சுக்கிரீவனைச் சமாதானப் படுத்துவதானால் சுக்கிரீவனை யுவராஜன் ஆக்குவது மட்டும் அல்லாமல் ருமையையும் திரும்ப அவனுடைய மனைவியாக்கி விடுக' என்று சொல்லி யிருக்கலாம். கடைசிக் காரணம் அண்ணன்—தம்பியிருள் பூசல் ஏற்பட அமைந்த காரணங்களுள் ஒன்றுயிற்றே! தாரை அவ்வளவு அறிவுடையவளாக, சூழ்நிலையுணர்ந்தவளாக அவனிடம் அப்பொழுது ஏன் கூறவில்லை? என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை'' (155) என்பார் சாஸ்திரிகள்!

வாலி ருமையுடன் கூடா உறவு கொண்டிருந்தால் தானே தாரம்ஆம் தாரைக்கு அவ்வாறு அறிவுரை கூறத் தோன்றும்!

ஆக, அவன் பிறன் மனையான உருமையை நயவாதவன் என்று எண்ணுதலே சிறிது.

அனுமனே இராமனிடம் வாலியின் சிறப்புப் பற்றி உரைக்குங்கால்,

''நாலு வேதம் ஆம் நவைஇல் ஆர்கலி
வேலி அன்னவன்' 608/37

என்று குறிப்பிடுவான்! அத்தகையோன் அற்பமாக, அடாதது செய்வான் என்று நம்புவதற்கில்லை.

இராமனே வாலிவதைக்குப் பிறகு அவனை 'நிரம்பினன் ஒருவன்' அதாவது 'நற்குணங்களே நிரம்பிய ஒருவன்' எனக் குறிப்பிடுவான். 658/29

ஆனல், இராமனிடம் வாலியே,

''ஐய நுங்கள் அருங்குலக் கற்பின், அப்
பொய்இல் மங்கையர்க்கு ஏய்ந்த புணர்ச்சிபோல்
செய்திலன், எமைத் தேமலர் மேலவன்,
எய்தின் எய்தியது ஆக, இயற்றினன்'' 640/112

> "மணமும் இல்லை, மறைநெறி வந்தன;
> குணமும் இல்லை, குலமுதற்கு ஒத்தன—
> உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுங்கு அலால்
> நிணமும் நெய்யும் இணங்கிய நேமியாய்" 6401 13

என்றெல்லாம் சொல்லி விட்டபின் 'அக்குற்றம் அவன் செய்யவில்லை யென்பது எங்ஙன்? என வினவலாம்!

வாதத்திற்காகத் தன்குல ஒழுக்கத்தை அவன் எடுத்துப் பொதுவில் சொன்னனே அன்றி, தான் அம்முறையில் குற்றம் புரிந்ததாகச் சொல்லவில்லை! அவன்,

> "பெற்றி மற்று இது; பெற்றது ஓர் பெற்றியின்
> குற்றம் உற்றிலன்"

என்றே முடிக்கின்றான்!

அதாவது, 'எங்கள் குலத்திற்குண்டான நடை முறையைத் தான் கூறினேன்; அந்நடை முறையை ஆதாரமாகக் கொண்டு நான் (உருமைக்கு) தவறு இழைத்தேனல்லேன்' என்று தெளிவு படுத்துகிறான். "சுக்கிரீவன் மனைவியைக் கவர்ந்து கொண்டதாகக் கூறிய குற்றச்சாட்டை வாலி மறுக்காது ஏற்றுக் கொண்டன னேனும், அப்பிழையை அவன் செய்திருப்பான் என்று எண்ணவோ நம் மனம் இடந்தரவில்லை. மனைவியையும் சார்ந்தவரையும் நினைத்துப் பார்க்கவும் நேரமின்றித் தன் உயிர் தப்பினல் போதும் என்று ஓடினவன் சுக்கிரீவன். இந் நிலையில் 'உன் கணவன் மதங்க மலையில் இருக்கிறான். நீயும் அங்கே போய் விடு' என்று வாலி சொல்வான்? கோப வெறியில், தம்பியைக் கொல்ல முயன்ற வாலியின் நெஞ்சில் அவன் மனைவிக்கு இடமிராது. பிறகும் அவளைப் பற்றிச் சிந்தித்திரான். வாலியின் தம்பியைப் பிறன்மனை நயவாத வனாகப் படைத்த புலவர் பிரான் தன்னுடைய மதிப்பிற்கு உரியவனாக்கிக் கொண்ட வாலியை பிறன்மனை நயந்த பேதையாகச் சித்திரிக்க ஒவ்வார். 'நமக்கு இல்லாததும், மனித சாதிக்கு உரியதுமான தருமத்தைப் பேசுகிறான்

இராமன்; 'இதை மறுத்தாலும் ஏற்றாலும் பழியும் இல்லை, பாவமும் இல்லை' என்ற எண்ணத்தினால் தான், 'தம்பியின் மனைவியைக் கவர்ந்து கொண்டாய்' என்ற இராகவன் கூற்றை மறுக்காது தவறு என்று காட்டுவதற்கு உரிய சட்டமே தன்பால் செல்லாது என்று பேசுகிறான் என்பார் பெ. இராமானுஜன் அவர்கள். (78)

ஆனால் இராமன் தான் முன்னமேயே வாலியைக் கொல்வதாக முடிவு எடுத்துக் கொண்ட காரணத்தால், வாலியின் பேச்சுக்கு 'எங்கள் குலதர்மத்தின் படி நடந்து கொண்டேன்; இதில் தவறு இல்லை' என்று பொருள் கொண்டு மேலும் பேசலானான்!

அது மட்டுமன்று; அவன் பிறன்மனை நயவாதவன் என்று நம்பும் அளவிற்கு தன் மனைவி தாரையின்பால், அன்பும் காதலும் கொண்டிருந்தான் என்பதை உறுதிப்படுத்தும் அளவிற்கு, தாரை, போருக்குச் செல்ல வேண்டா' என்று தடுத்த போது பேசிய உரையாடல் நிற்கின்றது!

மேலும், வாலி—உருமையின் தவறான உறவு காட்டி எங்குமே பேச்சு இல்லை.

ஈண்டு புரிசையாரின் பார்வையைப் பார்ப்போம்.

"தேவி நீங்க அத்தேவரில் சிரியோன்
ஆவி நீங்கினன் போல் அயர்வான் இது
பாவியாது பருகுதிர் போலும் நும்
காவி நாண்மலர்க் கன்னியர் காதல்நீர்" 676/31

என்ற பாடலில், 'நும் என்றது சுக்ரீவன்தான். அவளால் சுட்டப்படுகின்றவள் உருமைதான். இவ்வளவு பெருவாழ்வு ஊருக்குப் போய் இருந்து வந்த உருமையினிடத்தில் சுக்ரீவனுக்கு உறும் வாழ்வு! இதெல்லாம் நோக்க உருமை திறமையானவளாகவே அங்கு இருந்திருக்கலாம் என எண்ணவும் இடமிருக்கின்றது' என எழுதுகின்றார்.

'தித்தியா நின்ற செங்கிடை வாய்ச்சியர்
மூத்தவாள் நகை முள் எயிற்று ஊறுதேன்
பித்தும், மாலும், பிறவும், பெருக்கலால்,
மத்த வாரணம் என்ன மயங்கினான்.'' 674/21

என்ற, சுக்கிரீவன் இருந்த நிலையைக் காணும் பொழுது இந்த அனுமானம் பிழைபடுகின்றது.

'வாலி, இராமன் வினவிய பொழுது, தான் உருமையைச் சிறைப்படுத்தியிருப்பதாகக் கூறி இருக்கலாம். ஆனால் அவன் பொய்யுரையாத புண்ணியன். ஆதலால் அதனை மறுக்காமல், உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கலால் மணமும் இல்லை; மறைநெறி வந்தன குணமும் இல்லை என உடன்பட்டுக் கூறுகின்றான்' என்பார் இரத்தினஞ் செட்டியார் (90,91) 'வாலி தப்பித்துக் கொள்வதற்காகக் குடிமக்கள் வாழ்க்கையைத் தன் மீது ஏற்றிப் பொய் கூறுகிறான்' என்பர்.

இதில் முன்னுக்குப் பின் முரணாய்ப் பேசப்பட்டுள்ளது; காரணம் இராமனின் குற்றத்தைக் குற்றமில்லை என்று காட்ட முயல்வதால் ஏற்படும் கோளாறு!

மற்றவன் மனையாளைப் பெண்டாடுதல் மாபெரும் குற்றமெனத் தெரிந்திருந்தும் மாலவன் இராமனாய் வந்து, தன் மனையாள் இலக்குமி ஆகிய சீதையை இராவணன் கொண்டேகச் செய்தான், அவன்பால் குற்றம் காட்டிப் போர் செய்து அழிப்பதற்கு!

ஆனால் வாலியோ அடுத்தவன் மனைவியை இச்சித்தல் குற்றம் என்பதை உணர்ந்தவனாய், பிறனுக்காக வருந்தும் மனோநிலையில் உள்ளான். அதனால்தானே, இராமனிடம் வாதிட்ட முதல் நிலையில், சீதையை இராவணன் எடுத்தேகியதை நினைந்து இராமனுக்காக வருந்தி,

''தாரம் மற்று ஒருவன் கொள'' 638/98

என்று அகம் கலாய்த்து அரற்றுகின்றான்.

இத்தகையவன் தன் தம்பியின் தாரத்தைக் கெடுத்தான் என்பது அறநிலை ஆய்வு மனம்கொண்ட பெருந்தகையாளர்கள் ஒப்ப இயலாத ஒன்று!

ஈண்டு திரு. எஸ். இராமகிருஷ்ணன் அவர்களின் கூற்றுக்களை உன்னிப் பார்த்தல் பொருந்தும்.

''உடன்பிறப்புப் பாசத்தை முற்றும் ஒழித்து இராவணனைப் போல் பிறன் மனை நாடிய காமுகனுகத் தாழ்ந்தவனுனல், வாலியைச் சிறியன சிந்தியாதான்' என்று கவிஞன் கணிப்பது எங்ஙனம் பொருந்தும்?'' என்றும் (4)

''சினம் கொண்டதால்தான் விவேகம் துணை புரிய முடியாது போயிற்று. அமைதியாக ஆலோசித்திருந்தால், இராமன் தன் சமுதாய அறத்தை அளவு கோலாகக் கொண்டு வாலியின் நடத்தையைக் கணித்திருக்க மாட்டான்'' (23) என்றும்

''ஒரு தலை ஆராய்ச்சியால் உரைக்கும் தீர்ப்பு நீதியாகாது; சுக்ரீவனும் அவனது அமைச்சனுக அனுமனும் கூறுவதைக்கொண்டு வாலி குற்றவாளியென்று துணிந்துவிடமுடியாது; வாலி தன் திறத்தில் சொல்வதற்கு இருப்பதையும் கேட்டுத்தான் முடிவு கூறவேண்டும், ஆனுல் அரச நீதியின் அடிப்படை நெறியான இந்த கொள்கையையும் இராமன் புறக்கணித்து விடுகின்றுன்'' என்றும் எழுதுகின்றுர். (24)

ஆக இரண்டாவது குற்றச்சாட்டு' அனுமனின் சொல் வன்மையால் கற்பிக்கப்பட்டதே!

வாலி, தன் மகனுகிய அங்கதனை அழைத்து வருமாறு சுக்கிரீவனிடத்துச் சொல்லும்போது,

''உய்த்தனை கொணர்தி உன்றன் ஓங்கரு மகனை''
[644/146

என, அவனைச் சுக்கிரீவனுக்கு மகனுக்கிக் கூறுகின்றுன். இஃதும் ஞானத்தின் அடையாளம்' என்பார் இரத்தினஞ் செட்டியார். (79)

இதற்கே (உன்றன் மகன் என்பதற்கே) விகற்பமான—அருசையான—பொருள் கற்பிக்க முடியாதா? அப்படிக் கொள்ளுதல் விவேகமா? பெரியோர் பண்பா? தாரையின் கற்பிலேயே ஐயம் தோன்றுதா?

'உன்றன் ஓங்கரு மகனை என்று சொல்லும்போது சுக்ரீவனுக்கு மகன் இருந்ததாக எண்ணலாம்; அப்படி ஒன்றும் கிடையாது. அங்கதனையே தன் மகனாக எண்ணி அன்பு பாராட்டி வந்தான் சுக்ரீவன். அந்த அருமைப் பாட்டை எல்லாம் குறித்தே, 'உன் மகன்' என்று சொல்லுகின்றான், வாலி' என்றே தெளிவுபடுத்தி விடுகின்றார். இந்தப் பொல்லா உலகின் கீழ்மையெண்ணம் கருதி. டி. கே. சி. அவர்கள் (513)

அதுபோலத்தான், உருமையை வாலி கெடுத்தான் எனப் பகர்வதும் கீழ்மைப் பண்பால் சொல்லப் பெறுவது!

என்றாலும், பின்வரும் வாதங்களுக்காக, 'வாலி—உருமை' கற்பனை உறவை ஏற்றுக்கொண்டே தொடர்வோம்!

சீதையை இராவணன் தூக்கிச் சென்று சிறை வைத்திருப்பது பிறனில் விழைதல் என்னும் குற்றமே. ஆனாலும், அவளை அவன் களங்கப்படுத்தாமையால் குற்றத்தின் கொடுமை குறைந்து போகிறது என்பார் இரத்தினம் செட்டியார். (31)

இராவணன் சீதையை ஏன் களங்கப்படுத்தவில்லை? அவளாக விரும்பி வரட்டும் என்ற மனப் போக்கில் இருந்தானா? எந்தப் பெண்ணையும் வலிய அடைய முயன்றால் இராவணன் தலை வெடிக்கும் என்னும் சாபம் இருந்தமையான் அன்றோ (சாபம் உண்டு அது என் ஆருயிர் தந்ததால்—சீதை) இராவணன் தினந்தோறும் சீதையின்பால் வந்து கொஞ்சி, கெஞ்சி, மிஞ்சி, வஞ்சினம் கூறியெல்லாம் காலம் கடத்த வேண்டியதாயிற்று! ஆக இராவணனின் பிறனில் விழைந்த குற்றம், கொடுமை, சற்றும் குறைபடாத முழுமையானதே!

## 4. மறைந்திருந்து தாக்கியதேன்?

வாலியின் எதிரில் சென்ருல் இராமன் பலத்தில் பாதி அவனைச் சென்றடையுமே, அதனுல் அவன் எதிரில் செல்ல வில்லை என்பாரும் உளர்! இராமனைத் தெய்வமாய்க் காண்பதாய்ப் பாவனை செய்து, அத்தெய்வத்தின் ஆற்ற லுக்கே மறைமுகமாய்க் களங்கம் கற்பிப்பவர்களின் வாதமே, இது! ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் வல்ல ஒரு தெய்வத்திற்கு, வாலியின் வரங்களை—ஏன் வாலியையே—ஒரு நொடிப் பொழுதில் நேரிலன்றி நினைப்பளவிலேயே அழிக்க முடியதா?

இந்த வழக்கினை வளர்க்கின்றவர்கள் யார்? இராம பக்தர்கள்தாம். இப்பெரு மக்கள் இராம பக்தர்கள் பட்டி யலில் வாலிக்குக் கடைக் கோடியில் கூட இடம் தருவதில்லை. ஆனல், ஒவ்வொருவரும் தங்களுக்கே முதலிடம் வகுத்துக் கொள்ள முற்படுகின்ருர்கள். இவர்கள் வாலியை வதைத்தது இராமன் எனக் கருதுவதில்லை. வாலியைத் தாங்களே வதைத்து வாகை சூடியதாக மார் தட்டுவதும் உண்டு. ஆனல் வாலியை வதைத்தது நேர்மையான செயல் தான் எனக் காரணங்கள் கூற முற்படுவதில் கொள்ளும் ஒற்றுமை, கூறும் காரணங்களில் இருப்பதில்லை' என்று கூறும் புரிசையாரின் நோக்குரை இங்கு கருதத்தக்கது. (2)

இராமன் மனிதன்; தெய்வமே என்ருலும் மனித வாழ்வு பெற்று விட்டவன்!

வாலி தன்னம்பிக்கையின் காரணமாக, தன் மனைவி தாரையினிடம்

''பேதையர் எதிர்குவர் எனினும் பெற்றுடை
ஊதிய வரங்களும் உரமும் உள்ளதில்
பாதியும் என்னதால்; பகைப்ப தெங்ஙனம்?
நீதுயர் ஒழிகென நின்று கூறினன்'' 628/29

'எதிர்குவர் என்னும் சொற் சொண்டே.' அவன் எதிரில் செல்வார் பலத்தில் பாதி அவனையடையும் என்று கருதுதல் சரியன்று?

அப்படியானால் 'அவ்வரம் பலமற்றுப் போயிற்றா?' என்ற ஐயம் ஏற்படலாம். இல்லை! அவ்வரத்தின் உண்மைத் தன்மையைச் சொல்லின் செல்வனாகிய அனுமன் வாய்ச் சொற்களே விளக்கும்!

''கிட்டுவார் பொரக் கிடைக்கின், அன்னவர்
பட்ட நல் வலம் பாகம் எய்துவான்'' 608/40

என்றுதான் அவன் கூறினான். அதாவது, தன்பால் போரிட வருவார், தன் கையகப்பட்டு விட்டால், அவர்கள் பலத்தில் பாதி அவன் உடலேறும்' என்பதே கருத்தன்றி, சண்டைக்கு அவன் எதிரே சென்றாலேயே அங்ஙன் ஆகும் என்பதன்று. இதற்கு இராமனின் அம்பே அத்தாட்சி!

'உள்ளத்தில் பாதி என்னதால்—அதாவது ஒரு வெற்றி கிடைத்தால் அடுத்த வெற்றிக்கு ஆதாரம் ஆகிறது அது— இன்றைக்கும் நாம் பார்க்கிற காரியம்தான் எனப் புது விளக்கம் ஒன்று கூறியுள்ளார் டி.கே.சி. அவர்கள் (477)

இராமன் மறைந்திருந்து அம்பு எய்தான்; ஆனால் அவ்வம்போ வாலியின் பின்புறமாக மறைந்து சென்று அவன் முதுகில் தாக்கி, இராமனுக்குப் பழியை பெருக்க வில்லை! அவனுடைய விளங்கித் தோன்றிய மார்பில் தான் பாய்ந்தது. ஆகவே அஃது வாலியின் எதிர்ப்புற வழியில் தான் சென்றது என்றாகிறது. எதிர்ப்பட்டாலே எதிரியின் பலம் பாதி வாலிக்குப் போம் என்றால், அவ்வம்பின் பலம்— அவ்வம்பின் மேல் ஏற்றிய இராமனின் பலம்—பாதியாக, அம்பு வழியிலேயே துவண்டு வீழ்ந்திருக்க வேண்டும்! மாறாக அஃது அவன் மார்பைத் தாக்கியதும் அவன் கைப்பிடிக்குள் சிக்கி, தன் பலம் மங்கி அவன் உடலை ஊடுருவிச் செல்ல இயலாமல் நிறுத்தப்பட்டு விட்டது!

''வாலி வதையில், வாலியின் உயிர் இருக்கும் வரை அவன் நெஞ்சைத் துளைக்கும் ஆற்றல் (இராமன்) அம்புக்கு இல்லை. இராமனின் அம்பைத் தடுத்து நிறுத்திய அறநெஞ்சன் ஆற்றல் இது'' என டாக்டர் ச. வே. சுப்பிர மணியன் அவர்கள் நினைவு கூறுகிறார். (க.ஆ-84)

இது ஒன்றே போதாதோ, வாலியின் வரம் பற்றிச் சரியான விளக்கம் காட்டிட!

'இங்கே தான் வாலியின் வரபலம் பற்றிய மற்றொரு மர்மம் வெளியாகிறது. வாலி கிட்டுவார் பலத்தில் பாதி பலம் பெறுவான் என்பது உண்மையே. ஆனால், அவன் விரும்பினால்தான் எதிரியின் பாதி பலம் அவனுக்கு வரும். விரும்பா விட்டால் வராது' என்று கூறி, அதற்கான சப்பைக் கட்டுக் காட்சிகளையும், காட்ட முயல்வார் இரத்தினஞ் செட்டியார் (56) முடிவில் 'வரபலம் மோது வாரிடத்தே செல்லுமேயன்றி மோதுகின்ற சடப் பொருளிடத்தே செல்லாது என்பார் அவர் (60)

அது சாதாரண சடப்பொருள் என்றால், 'வாலியின் வலியைவிடப் பன்மடங்கு வலியுள்ளதாய்' முன்னர் எப்படி அந்தப் பாணம் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகக் கூறுவார் இரத்தினஞ் செட்டியார். (59)

அதற்குக் காரணம், அது, 'இராமபாணம்' அதாவது, இராமன் தன் ஆற்றலை ஏற்றி அனுப்பிய பாணம்; எனவே, வாலியின் கைப்பிடிக்குள் அகப்பட்ட அந்த பாணத்தில் மறைந்திருந்த இராமனின் ஆற்றலின் பகுதி போயது என்று கொண்டால் தவறே இல்லை! அதனை விடுத்து வீண் கற்பனைக் காரணங்களை மேற்கொள்ள முயல்வது, 'பொரக் கிடைக்கின்' என்ற பாடலின் அடிப்படையில்' வாலியின் பிடிக்குள் அகப்பட்டதால்தான் பொருவாரின் பாதிப் பலம் அவன்பால் போம்' என்பாரின் முறையான வாதத்தின் வலுவையே குறைக்கும். நிற்க,

அவ்வரம் சடப் பொருளுக்குப் பொருந்தாது என்ருல் அவ்வரம் அளித்த தெய்வத்திற்குக் கபட எண்ணம் இருக்கின்றது என்பதுதானே பொருள்! ஒரு வரம் முழுமையாக ஒருவனுக்கு உதவ வேண்டுமேயன்றி, மறைமுகமாகக் கூட பாதி பலன் அளிக்கக் கூடியதாய் அமையாது; அப்படி அமைந்தால், அத்தெய்வம் முழு அருளோடு, ஆசியோடு அளிக்கவில்லை எனத் தெரிதல் வேண்டும்! அந்த அளவிற்கு நாம் தெய்வ நிந்தனையை மேற் கொள்ள வேண்டுமா? தேவையற்றது.

''ஊசி போற் சென்ற பாணம் ஏன் புறத்தே போகவில்லை? காரணம் உண்டு. 'இராம நாமத்தை வாலி காண வேண்டும்; கண்டு, அடுசரம் தொடுத்தவன்மீது சுடுசரமாய்க் கேள்விகளைத் தொடுக்க வேண்டும். அதற்காகவே அந்த வாளியை இந்த வாலி பறித்து எடுத்துப் பார்க்கிருன்'' என்பார் புலவர் க. வே. இராமநாதன். (ராஜபாளையக் கம்பன் கழக வெளியீடான இராமனைத் தரிசிப்போம்—கிட்கிந்தா காண்டம் பக்—57)

இது ஒரு சாதுர்யமான நோக்கே என்பதில் ஐயமில்லை. ஆனால் கம்பர் கையாளும் சொல்லின் வேகத்தையும் கவனிக்கும் பொழுது இக்காரணம் இராமனின் அந்த பாணம் போன்றே வலுவற்றுப் போகின்றது!

'இராகவன் துரந்தான்' (633/65)

என்கின்ருர். 'துரந்தான்' என்பதற்குத் 'துரத்தினன்,' 'முடுக்கினன்' என்ற வேகப்பொருள்கள் ஆம். மாருக, தன்கணை மெதுவாகச் சென்று தன் நாமம் காட்ட வேண்டுமென்று நினைத்திருந்தால் மென்மைப் பொருள் தரும், 'ஏவினன் (கட்டளையிடுதல், தூண்டிவிடுதல், செலுத்துதல்) என்பது போன்ற சொற்களைக் கையாண்டிருக்கலாமே! (அஃதன்றியும் வாளியைத் தன் கையால் நிறுத்தி வைத்திருந்தான் வாலி. பின் அது எவ்வழி இராமன்பாற் திரும்பச் சென்றது என்றும் கூறப்படவில்லை)

மேலும், குற்றவாளியை விசாரித்தபின் தண்டித்தல் நெறியா? அவன் சாகும் அளவிற்கான ஆயுதத்தை உபயோகித்துவிட்டுக் குற்றுயிராய்க்கிடக்கையில் அவனிடம் வாதபிரதிவாதம் செய்தல் முறையா?

ஆக, இந்த அம்பின் நிலை சாட்சி போதாதென்றால் இதோ இனியும் ஒரு சாட்சிக் காட்சி!

வாலி—சுக்கிரீவன் போர் தொடங்கியது. தொடக்கம் முதலே இருவரும் நேருக்கு நேர் நின்று பொருதனர். அதனைப் பற்றி பற்பல பாடல்களால் கம்பரே போற்றி வியந்து நிற்கின்றார்.

வாலியின் முன்னால் சுக்கிரீவன் வந்ததும் அவன் பலத்தில் பாதி வாலிக்குச் சென்றிருக்க வேண்டுமே! அவ்வாறு சென்றிருந்தால் சரி நிகர் சமானமாக எப்படிப் போர் செய்ய இயலும்.

''தாம் ஒரு தாய் வயிற்றின் வந்தோர்
தம் தோள் வலி மிக்கவர்'' 631/48

என்ற கம்பர் வரிகள்கொண்டே அவர்கள் இருவரும்சமபலத்தவர் என்று கண்டாலும் வாலி பெற்ற வரத்தின் படி எதிர் வந்தோர் பலத்தில் பாதி அவனை எய்திடும் என்பது உண்மையானால் அச்சம பலத்தவனென்று கருதிக் கொள்ளப்படும் சுக்கிரீவனும் அதற்கு இலக்கு ஆகவேண்டியவன்தானே!'

அப்படியிருக்க அவன் பலம் எப்பொழுது குன்றியது? சுக்கிரீவன், இறுதியில் வாலியின் பிடிக்குள் முழுமையாய் அகப்பட்டுக் கொண்ட பின்னர்தான் என்பதை,

''அன்ன தன்மையர், ஆற்றலின் அமர்புரி பொழுதின்
வல்நெடுந் தடந்திரள் புயத்து அடுதிறல் வாலி
சொன்ன தம்பியை, தும்பியை அரிதொலைத்தென்ன
கொல் நகங்களின் குலைந்து உக மலைந்தான் 632/60

என்ற பாடலினால் உணர்கின்றோம்.

வாலிக்கும் அவுணனுக்கும் நடந்த போரில் அவுணன் ஏன் ஓடிப் பிலம் புக்கான் என்பதனை,

''முட்டி நின்று அவன் முரன் உரத்தின் நேர்
ஒட்ட அஞ்சி, நெஞ்சு உலைய ஓடினன்'' 610/51

என்பார்.

'ஒட்ட அஞ்சி' என்பதற்கு, 'எதிர்த்திடப் பயந்து' என்று எளிமையான பொருள் கொள்ளுதல் பொருந்தாது, 'உடலும் உடலும் உராயும் வண்ணம் மோத அஞ்சி' என்ற காட்சி தோன்றுகின்றது! ஏன் அதற்கு அஞ்சினன்? உராயும் பொழுது வாலியின் கைப்பிடிக்குள் அகப்பட்டு விட்டால் பாதிபலம் போமே என்ற அச்சம்தான்!

ஆக, இம் மூன்று காட்சிகளாலும் வாலி பெற்ற வரம், 'எதிரி அவனுடைய பிடிக்குள் அகப்பட்டுக் கொள்ளும் போது, அவன் பலத்தில் பாதி அவனை (வாலி) வந்தடையும் என்பதேயன்றி, 'அவன் எதிரில் வந்ததுமே எதிரியின் பலம் பாதி அவனை வந்தடையும்' என்பதன்று.

இராஜாஜியவர்களும் கூட, 'ஒன்று நிச்சயம்; வாலியை ராமன் எதிர்த்து ஜெயித்திருக்க முடியாது, ராவணனைத் தேவர்கள் எதிர்க்க முடியாதிருந்தது போலவே. இது வாலி பெற்ற வரத்தின் பயனாகும். மறைந்து நின்றேதான் ராமன் வாலியைக் கொல்ல முடியும். ஆயினும் ஏன் வாலியைக் கொல்ல வேண்டும் என்கிற கேள்வி நிற்கின்றது' என எழுதுகின்றார், கடைசியில் உள்ள வினா சரியானதே ஆனாலும், முற்பகுதி அதாவது இராமனின் பலத்தில் பாதி போயிருக்கும் என்பது ஆழ்ந்து பாராத பார்வையேயாகும்!

''இராவணனுடனேயே இராமன் பல நாட்கள் போரிட்டுக் கடைசியில் வெல்ல வேண்டியதாயிற்று. அவனிலும் வலிய வாலியுடன் நேருக்கு நேர் போர் செய்திருந்தாலோ? இராமன்தான் வெல்வான் என்பதில் ஐயமில்லை; அதே சமயத்தில் அவன் பற்பல நாட்கள் அதிதீவிரமாகப் போரிட

வேண்டியிருந்திருக்கும் என்பது தெளிவு. அதற்குள்ளாக சுக்கிரீவன் பொறுமையிழந்திருக்கக் கூடும்'' என்பார் சாஸ்திரிகள். (155)

முதல் நாள் போரிலேயே இராம இராவண நேர்ப் போரில்,

''சொல்லும் அத்தனை அளவையில் மணிமுடிதுறந்தான்,
எல் இமைத்து எழு மதியமும் ஞாயிறும் இழந்த
அல்லும் ஒத்தனன், பகலும் ஒத்தனன், அமர்பொருமேல்
வெல்லும் அத்தனை அல்லது, தோற்றிலா விறலான்''
(1140/247)

''அறம் கடந்தவர் செயல் இது' என்று. உலகுஎலாம் ஆர்ப்ப
நிறம் கரிந்திட, நிலம் விரல் கிளைத்திட நின்றான்
இறங்கு கண்ணினன், எல் அழிமுகத்தினன், தலையன்
வெறுங்கை நாற்றினன், விழுதுடை ஆல் அன்ன மெய்யன்'' (1141/249)

என்ற நிலையில் நாணி நின்றான். அந்த ஒருநாட் போரிலேயே இராமன் இராவணனைத் தோற்கடித்து விட்டான்; கொன்றும் இருக்கலாம்; ஆனால்

''நின்றவன் நிலைநோக்கிய நெடுந்தகை, இவனைக்
கொன்றல் உன்னிலன், 'வெறுங்கை நின்றான் எனக்
கொள்ளா'' (1141/250)

என்ற கவிச் சக்கரவர்த்தியின் போர் விமர்சனத்தைத் தெளிந்திருக்க வேண்டிய பெரியவர் இராமனின் ஆற்றலைக் குறைவுபட மதித்துப் பலநாள் போரிட வேண்டியிருக்கு மென எழுதிவிட்டாரே!

''வாலியின் வரபலம் காரணமாக மறைய நின்று அம்பு எய்ய வேண்டி வந்ததும் சந்தர்ப்பமே'' என வெகு எளிதாக எழுதி விட்டார் திரு. பழ. பழநியப்பன்! (30)

எனவே, இராமன் வாலியின் எதிரில் வந்தால் அவனின் பலத்தில் பாதி வாலிக்குச் சென்றுவிடும் என்பதனால்தான் இராமன் மறைந்திருந்து அம்பு எய்தான்' என்பது, ஆதார மற்ற, உரமற்ற ஒரு நொண்டி வாதமே!

ஆதலால், இராமன் மறைந்திருந்து அம்பெய்தது தவறே!

'இது அறம் பிறழ்தற்கு அஞ்சும் இராமனின் தீவிர மனப்பண்பைக் காட்டுமேயன்றி, வாலியைக் கொன்றது குற்றமெனக் காட்டாது' என்பார் இரத்தினம் செட்டியார் (84)

இவ்வாறு வாதிப்பவர்கள் முன்னுக்குப் பின் முரணான கொள்கையைக் கையாள்பவராகின்றனர்!

இராமனே தன் தவற்றை உறுதிப்படுத்துகின்றான், தன் செய்கையால்.

''வாலி, இராவண வதத்துக்காக வானர வடிவம் கொண்ட தேவன்! இந்திரனின் அம்சம் அவன்! அப்படி வந்தவன் இராவணனையே நட்புக் கொண்டது இராணுவ உடன்படிக்கை மீறல் போன்ற குற்றமல்லவா? அவனைக் கொல்லல்தானே சரி! வந்த காரியத்தை மறந்து அழிக்க வேண்டியவனை அன்புக்கரம் நீட்டி அரவணைத்தவன் தண்டனைக்குரியவனே! அவனைப் புறப்பட்ட இடத்துக்கே அனுப்பி வைத்தான் இராமன்'' என்பார் பி. ஸ்ரீ. (53)

வானுலகுக்கும் அப்பால் உலகத்திற்கு வாலி சென்றானே யன்றி புறப்பட்ட இடத்துக்கே இராமன் அவனை அனுப்ப வில்லை.

மேலும், அவர், ''அவனுடைய துணை இராமனுக்குத் தேவை இல்லை. ஆனால் அவன் மேலும் மேலும் குற்றவாளி யாகக் கூடாதே! இராமராவண யுத்தம் என்று வரும்போது வாலி இராவணனுக்குத் துணை நின்றால் பெருங்குற்ற மாகுமே! இதையெல்லாம் அவதார புருஷன் ஒவ்வொன்

ருகச் சொல்லி விளக்கம் தர இயலாதல்லவா! அதனுல்தான் விளக்கம் கேட்க இடமின்றி மறைந்தே நின்று அம்பெய் தான். இது ஒருவகை அதிர்ச்சி வைத்தியமாகத் தசமுகனுக்கு இருக்கட்டும் என்றும் இருக்கலாம்'' என எழுதுகின்ருர்.

இதனுல் இராமன் அவதார புருஷன் என்பதை அவர் ஒப்புக் கொள்ளுகின்ருர் என்பது தெளிவு. ஆனுல் விளக்கம் கேட்க இடமின்றி' என்று கூறுவது பின் நிகழ்ச்சிகளைக் காவிய மூலம் அறிந்து கொண்ட பின்னும் எழுதுவது தவறு; வாலிதான் சரமாரியாக வினுக்கள் தொடுத்து விளக்கங்கள் கேட்கிருனே.

வாலிவதையே இராவணனுக்குத் தெரியாதே! அதனுல் தானே அவன் அனுமனிடம்

''..........வாலி சேய் விடுத்த தூத!
வன்திறல் ஆய வாலி வலியன் சொல்? அரசின் வாழ்க்கை
நன்று கொல்?' என்னலோடும், நாயகன் தூதன் நக்கா (917/83)
''அஞ்சலை, அரக்க! பார் விட்டு அந்தரம் அடைந்தான் அன்றே'' (917/84)

என்றும் பின்னர் தானே எடுத்து கூறினுன். அதெப்படி அதிர்ச்சி வைத்தியமாகும்?

## 5. வாலியின் வினு

''அவ்வுரை அமையக் கேட்ட அரிக்குலத்து அரசும்! 'மாண்ட
செவ்வியோய்! அனையது ஆக! செருக்களத்து உருத்து எய்யாதே'
வெவ்விய புளினுர் என்ன, விலங்கியே மறைந்து, வில்லால் எவ்வியது என்னை' 641/124

என்று நியாயம் கேட்டான் வாலி, இராமன்பால்.

அப்பொழுது தான் இராமன் வாலிக்குப் பற்பல நியாயங்களை எடுத்துரைத்த சூழ்நிலை!

''இனையது ஆதலின், எக்குலத்து யாவர்க்கும்,
அனைய தன்மை அறிந்தும், அழித்தனை,
மனையின் மாட்சி' என்றான் மனுநீதியான்'' 641/23]

ஆகிய இராமன், ஆகவே, அந்த இராமன் காதில் வாலியின் கேள்வி,

''அனையது ஆதலின், எக்குலத்து யாவர்க்கும்
வினையினால் வரும், மேன்மையும் கீழ்மையும்,
அனைய தன்மை அறிந்தும் அழித்தனை,
முனைவில் லறம் நீ முழுதுணந் தோயே!''

என்று ஒலித்தது போலும்!

வாலியின் வினாவிற்கு விளக்கங்கள் புரிசையார் வாக்கில் கண்டால் இராமன் விடையிறுக்க இயலாமல் ஊமையானான் தன்மை நன்கு விளங்கும்.

''இறை திறம்பினனால் என்னை
இழிந்துளோர் இயற்கை எண்ணின்
முறை திறம்பினனால் என்று
மொழிகின்ற முகத்தான் முன்னர்
மறை திறம்பாத வாய்மை
மன்னவர்க்கு முன்னஞ் சொல்லும்
துறை திறம்பாமல் காக்கத்
தோன்றினன் வந்து தோன்ற 636/82

என்ற பாடலில் உள்ள 'வந்து' சொல் கொண்டு அழகான, முறையான, விஞ்ஞான—மெய்ஞ்ஞான வாதம் செய்கின்றார்–(54)

அரசர்கள் தமது குடிகள் முறை மாருதிருக்கும் வண்ணம் காக்கும் கடப்பாடுடையவர்கள். அவ்வரசருக் கெல்லாம் அரசன், அவ்வரசர்களையெல்லாம் அரச நீதி சொல்லும் முறை மாருதிருக்கக் கண்காணிக்க வேண்டி யவன். அத்தலைமையிடத்தில் அத்தொழில் புரிய ஒருவன் வேண்டுமே எனத் தசரதன் தவம் புரிந்து பெறத் தோன்றிய தோன்றல் இந்த இராமன். இதுவரை எச்செயல் களிலும் உலகம் உவப்பப் பிற்படாது முற்பட்டொழுகி வந்த முதல்வன் தான். ஆனல் இப்பொழுது அடியோடு முறை மாருகவே நிற்கின்றது இராமன் செயல். முறை பிறழ்வுகள் யாவை என நினைக்கலாம். இப்பாடலில் 'வந்து' என வருவதால், இதுவரை அங்கு வரவில்லை; நெடுந் தொலைவில் நின்றனன் என்பதும், 'தோன்ற' என்பதனல் மறைந்தே இருந்தனன் என்பதும், தெரிகின்றன. ஆண்மையும், அறநெறியும் உள்ளவர்கள் ஆற்றலோ டிருக்கும் ஒரு வீரனை அணுக வேண்டும். அப்பொழு தெல்லாம் அயலகத்தே நிற்பதும், வெளிப்பட நிற்க வேண்டிய நேரத்தில் மறைவுற வைகுவதும், மாருன முறைகள்!

அடுத்து,

> ''தாரம்மற் றொருவன் கொளத்தன் கையில்
> பாரவெஞ்சிலை வீரன் பழிப்பதே?
> நேரம் அன்று மறைந்து நிராயுதன்
> மார்பில் எய்யவோ? வில் இகல் வல்லதே?'' 638/98

என்ற பாடலின் உட்பொருளாய் ''உனது தாரத்தைப் பிரித்தான் ஒருவன். அவன் உற்றவனல்லன். மற்றவன். உனக்கே சொந்தமாக—நீயே அதற்கு உற்றவனுக இருந்தும், உனது அரும்பெரும் பொருளாகிய வில்லின் வீரத்தினைப் பிரித்தனை நீயே. அவனும் ஒளித்து வந்து தான் செய்தனன். நீயும் ஒளித்து நின்று தான் செய்தனை. ஆனல், அவன் ஒரு குல முனிவர்பால் பயிலவில்லை. அப்படிப் பயின்ற

பெருமையன் நீயே. பயின்றது இதற்காகவோ?'' என்றெல்லாம் வாலி இராமனை வினவினதாகும்' என்பார்! (59)

''எனக்கு நேர்ந்த மரணத்தையும் யான் ஒத்துக் கொள் கிறேன். ஆனால், தவறுகள் செய்த என்னைத் திருத்த வரும் தலைவன் நீ. என்பால் கண்ட இரண்டு குற்றங்களே நின் பாலும் நேரும்படியொரு தண்டனையோ? நான் குரங்கிற்கு அரசன், நீ குவலயத்திற்கு எல்லாம் அரசன். அரசர்கள் தாம் வெல்லப் புகுவோர்க்கு முன்னதாகத் தமது வருகை யைத் தெரிவிப்பார்கள். போரிடும் இடத்தை நியதி செய் வார்கள். போரில் பயன்படுத்தும் படைகளையும் தமது எதிரி காண எடுப்பார்கள். இப்படி விளக்கமாக வெல்லுவதையே வெற்றியாகக் கருதுவார்கள். மறைந்து நிற்பானேன்? ஒரு படையும் பற்றாத என்னைப் படைகொண்டு கொல்லுவா னேன்?'' என வினவினான் வாலி. இவ்வினாக்களுக்கு உடனடி யாக விடைவந்தது. அது, இராமபிரான் வாக்காலன்று, இலக்குவனார் வாக்கால் வந்தது. வாலியின் இவ்விரு வினாக் களும், யாராக இருந்தாலும் நேராக விடையிறுக்க முடியாத வை. இவ்வினாக்களுக்கு இராமபிரான் கடைசி வரையில் விடையிறுக்கவேயில்லை' எனவும் எடுத்துக் காட்டுவார்! (68)

இந்த இடத்தில் இராஜாஜி அவர்களின் கருத்துரையும் காண்டல் ஏற்புடைத்தாகும்.

'வாலியின் இந்த குற்றச்சாட்டுக்கு ராமன் என்ன பதில் சொல்ல முடியும்? ஏதோ சொன்னதாகவும் அதைக் கேட்டு வாலி சமாதானப்பட்டதாகவும் நாம் இப்போது படிக்கும் ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. அதில் சாரம் இல்லை என்று விட்டுவிட்டேன், பெரியோர்கள் மன்னிப்பார்கள்' என்கிறார்!

'பொய்யுரையாத புண்ணியன்' என்ற நூலுக்கு 'அறி முகம்' எழுதியுள்ள நா. வரதராஜுலு நாயுடு அவர்கள், ''இராவணனுவது தான் இழைத்தது வஞ்சம்'' என ஒப்புக்

கொள்கிருன். நொண்டிச் சமாதானத்திலும் இளைய பெருமாளோ, இராமனே தாம் செய்த கைதவத்தை ஒப்புக்கொள்ளவில்லை'' என எழுதுகின்ருர் (14)

''பின்னல், இராவணன் நீலனுடன் போர் செய்து கொண்டிருத்தலைக் கண்டு, ஒரு வீரன் மற்ருெரு வீரனுடன் பொரும்பொழுது தான் இராவணனைத் தாக்குதல் நியாயம் அன்று என்று கருதி அனுமன் போரிடாமல் நின்று விட்டான். பிறகு இராவணன் தனித்துத் தன்னுடன் பொர முழு வாய்ப்பு ஏற்பட்டபின்தான் அனுமன் அவனிடம் சண்டைக்குச் சென்ருன்.

ஆனல் வாலிவதை நிகழ்ச்சியில் வாலி இராமனைக் கவனிக்க முடியாது, சுக்ரீவனேடு சண்டையிட்டிருந்த நேரம் என்பது மட்டுமன்று அவ்விடத்தில் இராமன் இருப்பதையே அவன் அறியான்'' (150) என்பார் சாஸ்திரிகள்.

இராமன், வாலி கேட்ட கேள்வியின் அடிப்படை நியாயத்தை உணர்ந்தவனுய், பதில் சொல்ல முடியாதவனுய், மனச்சாட்சி அவனை உறுத்த மௌனியாய் நின்ருன். அவனுக்குப் பதிலாக இலக்குவன் பதில் சொன்ஞன்.

''முன்பு,நின் தம்பி வந்து சரண்புக, 'முறை இலோயைத்
தென்புலத்து உய்ப்பென்' என்று செப்பினன்; செருவில் நீயும்
அன்பினை உயிர்க்கு ஆகி, 'அடைக்கலம் யானும்' என்றி
என்பது கருதி, அண்ணல் மறைந்து நின்று எய்தது
என்ருன். 642/125

வாலியும் இதனைப் புனைந்துரைக் காரணம் என்பதைப் புரிந்து கொண்டான்; இராமனின் மனச் சாட்சிக்குட்பட்ட மௌனத்தையும் தெரிந்து கொண்டு ஆத்திரம் சற்று அடங்கிஞன். ''ஆகையால் அவனைக் கொல்ல (வாலியை) வேண்டுமாஞல், அந்த வரம் செயற்படாமல் இருக்கும்படியாக அவன் எதிரில் போகாமல் மறைந்து நின்றுதான் கொல்ல

வேண்டும். இதைச் சிந்தித்துதான் இராமன் முன்னர்க் கூறிய முடிவுக்கு வந்தான் என்று ஊகிப்பது தவறாகாது', என்று திரு.மு.மு. இஸ்மாயில் அவர்கள் எழுதியிருப்பது தவறாகாது என்று கொள்வதற்கில்லை.

டி. கே. சி, அவர்கள், 'ராமனிடம் அவன் வரலாறு இன்னது என்று தெரிய வேண்டும் என்று கேட்டுக் கொண்டான் அனுமன். ராமன் ஒன்றும் சொல்லவில்லை. லஷ்மணன் பேசுகிறான்' என்பார். (442)

கம்பன் பாடலில் 'ராமன் ஒன்றும் சொல்லவில்லை" என்பதற்குச் சொற்கள் இன்றி,

''வார்கழல் இளையவீரன், மரபுளி, வாய்மை யாதும்
சோர்வு இலன் நிலைமை எல்லாம் தெரிவுறச்
சொல்லலுற்றான்'' 601/25

என்றுதான் உள்ளது.

துயரமான செய்திகளையோ, பிறர் பிழைகளைச் சுட்டிக் காட்டும் செய்திகளையோ எடுத்துச் சொல்வதில் இராமன் மௌனம் சாதிக்க, இலக்குவனே எடுத்தியம்புவான் என்பதையே தெளிவுபடுத்தி விட்டார். தமது நோக்குரையால்!

இந்த பதிலைக் கூறிய இலக்குவன் "துவக்கத்திலிருந்து எந்த மனோ நிலையில் இருந்தான் என்பதைப் புரிசையார் நோக்குரை கொண்டு காண்போம்.

'அது முதல் (அனுமன் இராம இலக்குவர் பற்றிச் சுக்ரீவனிடம் எடுத்துச் சொல்லியது முதல்) இதுவரை (வாலியுடன் போருக்கு ஆயத்தம் ஆகிவிட்ட இதுவரை) அனும, சுக்ரீவர்களின் உள்ளக்கிடக்கை இதுவாகவே (வாலிவதம் என்பதாகவே) இருக்கின்றது. இக்குறிப்புகளை ஆங்காங்குச் சிந்தித்து வருகின்றனன் இளவல். ஆனால், அண்ணலோடு கலந்து உரையாட இடமில்லை. அந்த உள்ளத்துணர்ச்சிகளெல்லாம் இடங் கிடைத்த இப்பொழுது

வெளி வருகின்றன. மேலும் சிறிதும் மனம் ஆறாத செம்மல் 'அறமே உருவான உங்கள் உள்ளம் சற்றும் அறத்தோடு பொருந்தாத இந்தக் கொடும் போரைச் செய்து ஆவ தென்ன?' என்பவையெல்லாம் குறிப்பில் வர 'வீர' என முன்னவனைக் கூறி முடிக்கின்றான் இளையவன், கீழ்வரும் பாடலில்.

> ''ஆற்றாது பின்னும் பகர்வான் அறத்தாறு அழுங்கத்
> தேற்றாதவர் தங்களைத் தேறுதல் செவ்விது அன்றால்
> மாற்றான் எனத்தம் முன் உயிர் வவ்விய வந்துநின்றான்
> வேற்றார்கள் திறத்து இவன் தஞ்சம் என்வீர என்றான்''

ஆக, எவருமே இதுவரைத் தம் வாதங்களுக்குச் சாட்சியாகக் கொண்டு வராத பாத்திரமாகிய இலக்குவனையே இழுக்கின்றார், இராமன் குற்றவாளியே என்ற வாதத்திற்கு அடிப்படையாக!

ஈண்டு திரு மு.மு. இஸ்மாயீல் அவர்களின் கருத்துக்களை காண்போம்.

''ஆனால் வாலியினுடைய ஆணித்தரமான கேள்விகளுக்கு இராமனால் பதில் சொல்ல முடியவில்லை என்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்'' (110) என்றும், ''முன்னர்ப் 'பித்தாய விலங்கு'' என்று சொல்லி விட்டு, இப்போது இப்படிப் பேசும் பொழுது முன்னுக்குப் பின் முரணாகவே இராமன் பேசுகிறான். அடிப்படையில் ஒரு நியாயமற்ற செயலைச் செய்வதற்கு முனைந்து விட்டவனாகை யால் இராமன் இப்படியெல்லாம் பேச வேண்டியிருக்கிறது'' என்றும் (111) விளக்கியுள்ளார்.

இனி, திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் வாக்குகளைப் பார்ப்போம்.

''இங்கு இலக்குவன் இடைபுகுந்து விடை கூறியதாக இரு பாடல்கள் இடைச் செருகலாகவுள்ளன.

இது அத்துணைச் சிறந்த சமாதானம் ஆகாது. அன்றியும் தமையன் பேசும் போது தம்பி இடை மறித்துப் பேசுவது

பெருந்தன்மையாகாது. அடுத்து வரும் பாடலில் 'மன்னன் கட்டுரை மனத்துட் கொண்டான்' என்று வருவதனுல், மன்னன் என்று வருவதாலுல் மன்னன் என்ற சொல் இலக்குவனைக் குறிக்காது இராமனையே குறிக்கும். ஆதலினுல் இலக்குவன் கூறியதாக உள்ள இரு பாடல்கள் யாரோ ஒரு புலவன் பாடிச் சேர்த்தவையாகும்'' (288) என்கின்ருர்.

பாடல்கள் இடைச் செருகல்களா இல்லையா? என்பது ஒருபுறமிருக்க, 'மன்னன்' என்ற சொல் இராமனை மட்டும் எப்படிக் குறிக்கும்? ஆண்டியராய்க் காடேகி வந்துள்ள இருவருமே மன்னன் மக்கள் தாமே! மூத்தோன் என்ற முறைமையில் இருந்த மன்னன் என்ற உரிமை இராமனுக்குத்தான் போய்விட்டதே, கைகேயியின் வரத்தால்! பிறவியின் பெருமையால் இராமன் வாலிக்கு மன்னனுய்த் தோன்றினுன் என்போமானுல் அவனுடைய இளையவன்—இலக்குவன் அதே மன்னர் மன்னனுகிய தந்தைக்குப் பிறந்தவன்தானே; அவனை வாலி மன்னனுகக் காணக் கூடாதா?

ஆக, தமையன் தடுமாறும்பொழுது அவனுடைய தக்க குணநலன் கொண்டு காரணங்காட்டிச் சூழ்நிலையைச் சற்று சீர் செய்ய முயன்ற இலக்குவனின் சமாதானத்தைத் தகர்க்க சுவாமிகள் இவ்வளவு தடுமாற்றம் பெறத் தேவையில்லை!

மேலும் அவர், ''அதுபோல் இந்த நாடகத்துக்கு ஆசிரியர் இராமர். அவர்தான் இந்திரனை வாலியாக நடிக்க ஏற்பாடு செய்தார். நோக்கம் இராவண வதம். வந்த நோக்கத்தை விடுத்து, பகைவனுடன் உறவு கொண்டாடினுன். நாடகாசிரியரான ராமர் அவனை மறைந்திருந்தே தண்டித்தார்'' என எழுதுகின்ருர்.

திரு அவதாரப் படலக் காட்சியில் வரும் பாடல்கள் பின்வருமாறு :—

"என்னை ஆளுடைய ஐயன், கலுழன்மீது எழுந்துபோய
பின்னர், வானவரை நோக்கி, பிதாமகன் பேசுகின்றான்;
'முன்னரே எண்ணின் வேந்தன்யான்,—என முடுகினேன்:
மற்று,
அன்னவாறு எவரும் நீர்போய் அவதரித்திடுமின்
என்றான் 35/25

"தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான், எனது
கூறு
மருவலர்க்கு அசனி அன்ன வாலியும் மகனும் என்ன
35/26

ஆக துவக்கத்தில்,

"வான் உளோர் அனைவரும் வானரங்கள் ஆய்
கானினும், வரையினும், கடிதடத்தினும்,
சேனையோடு அவதரித்திடுமின் சென்று' என
ஆனனம் மலர்ந்தனன்—அருளின் ஆழியான்" 34/20

என மட்டும் அமைந்திருப்பதால், 'அவர்தான் இந்திரனை வாலியாக நடிக்க ஏற்பாடு செய்தார்' என்பது முழுமையான ஏற்பாடாகக் கொள்வதற்கு இல்லை. இந்திரன், இல்லையில்லை.இந்திரனின் கூறு ஒன்று தன்னிச்சையாக வாலியாக அவதரித்தது.

எவ்வாறாயினும், திருமாலாகிய இராமனும் இந்திரன் கூறாகிய வாலியும் ஒரே நாடகத்தில் நடிக்கும் சூழ்நிலை; அதனில் இராமன் முக்கிய நடிகன் மட்டுமல்லன், நாடக ஆசிரியனும், நடிப்பிப்பானும் (Director) ஆவான். எனவே, வாலி தன் வேடத்தை மறந்தான் என்று அவனிடமே எடுத்துக் கூறி நாடக மேடையினின்றும் அகற்றும் உரிமையும், அதிகாரமும் இராமனுக்கு உண்டு. அவ்வுரிமையையும் ஆணையையும் உபயோகித்தும் வாலி ஒப்பவில்லையானால் அவனைக் கண்டிக்கவும், தண்டிக்கவும் செய்யலாம்; அதற்காக நடிகனையே அழித்து ஒழித்துக் கட்ட வேண்டுமா? அதுவும் மறைந்திருந்து. எனவே இந்த நாடக நடிகர்கள் உதாரணத்தால் இராமனை அவனுடைய குற்றத்தினின்றும்

தப்புவிக்க முயல்வது இராமாயண நாடகத்தின் பக்தி மயக்கத்தில் இருப்பாரின் மனப்பாங்கையே எடுத்துக் காட்டும்!

இத்தோடு விட்டுவிடவில்லை திரு. வாரியார் சுவாமிகள்.

'நீ இந்திரன், நான் திருமால்; இலக்குவன் ஆதிசேடன்'

என்றெல்லாம் கூறக்கூடாது. ஆதிசேடனுடைய மகள் சுலோசனை. சுலோசனையின் கணவன் இந்திரஜித்து. உண்மையைக் கூறினால் இலக்குவன் மருமகனாகிய இந்திரஜித்திடம் போய் விடுவான்தானே. எனவே இராவண வதம் நிகழாமல் நிற்கும்'' என்று ஒரு சப்பைக் கட்டுக் காரணத்தையும் எழுதுகின்றார்! (291)

தமையனின்றித் தானில்லை என்ற தீவிர பிடிப்புடன் தாய் தந்தையரை, உற்றாரை, சுற்றத்தாரை, ஏன், மனைவியையும் கூட உதறித் தள்ளி விட்டு வந்து, அன்ன ஆகாரமின்றியும் கூடத் தன் அண்ணனுக்கே சதாகாலமும் தொண்டு செய்து வாழ்ந்து வரும் ஒரு நம்பியைப் பற்றி, எளிய உலகியல் பந்தபாச உணர்ச்சிக்கு ஆட்பட்டு தாங்கள் வந்த பெருங் காரியத்தையே கெடுத்திடுவான் என்று அவ்வளவு எளிமையாக எண்ணவும், எழுதவும் வேறு யாருக்குத்தான் தைரியம் வரும், வாரியார் சுவாமிகளைத் தவிர. இல்லை, இந்த பலவீனமான மனோதத்துவக் காரணத்தைக் கண் மூடித்தனமாக நம்பிட யாருக்குத் தலையசைப்பு ஏற்படும். இராம இலக்குவர் பிணைப்பின் இறுக்கமும், நெருக்கமும் புரிந்து கொள்ளாதவர்களைத் தவிர!

இதெல்லாம், பக்தர்களைப் பரவசப்படுத்தும் பெரும் பேச்சாளரிடையே அவர்களையும் அறியாமல் புகுந்து கொள்ளும் பிழையென விடுவோமாக!

இராமன் தருந்த விடை சொல்ல முடியாமையால், இலக்குவனைக் காட்டி விடுகிறான் என நாம் நினைத்தால் அது இராமனின் தோல்வியாகாமல் கம்பனின் தோல்வியாக முடியும், என்பார் இரத்தினஞ் செட்டியார். (68)

இராமன் தருந்த விடை சொல்ல முடியாதவன் என்பது அன்று; தன் பிழையை ஒப்பித்தான் விடையிறுக்க வேண்டி வரும், உத்தமன் என்பதாலே! அவன் அவ்வாறு தன் பிழையை ஒப்புக் கொள்ளும் வகையில் தன் கவிதையை வழங்காது இலக்குவனை இடையில் இழுத்து விட்டதே கம்பனின் வெற்றியாகும்! மேலும், தன் இச்செய்கையால், காலமெல்லாம் வாத, பிரதிவாதங்கள் நிகழச் செய்துள்ளானே அது அவனுடைய மாபெரும் வெற்றி! இதனையுணராமல், உணர்ந்தாலும் உள்ளுக்குள் மறைத்து வைத்துக் குற்றவாளி இராமனுக்கு வக்காலத்து வாங்குவான் வேண்டிக் கம்பரை வம்புக்கிழுத்து, ஏதோ அவருக்குப் பெருமை போகும் என்று வீணான பயமூட்டுவதெல்லாம் சரியன்று! "இவ்வாதத்தில் (வாலி-இராமன் வாதத்தில்) இராமனே தோற்றான். இவ்வாறு தோல்விக்கே கம்பரும் கிட்கிந்தா காண்டத்தின் முதலில் இருந்து வழிசெய்து வந்திருக்கிறார்" (83)

"வாலி கேள்விக்கு இராமன் பதில் சொல்ல முடியாமலும் இலக்குவன் பதில் பொருத்தமில்லாமலும் தோல்வி நிலையை இராமன் அடைய வேண்டும் என்றே கம்பர் பெருமான் இந்நிகழ்ச்சியை வான்மீகத்தினின்று சிறிது மாற்றியமைத்திருக்கிறார்" (92) என்றும்

"சாதாரண தயரதன் மைந்தன் அல்லன் இராமன்; அவ்வொரு தனிப்பரமனே அவன், என்ற மெய்ந்நிலையைத் தெளிவுப்படுத்தவே வாலிவதையின் நிகழ்ச்சியைக் கம்பர் இவ்வண்ணம் அமைத்துக் கொண்டார். ஏனைய காரணங்களால் கம்பர் கவிச்சக்கரவர்த்தியாக விளங்கலாம். ஆனால் வாலிவதையை இவ்வண்ணம் நிகழ்த்தித் தந்த நீர்மையால் ஓர் ஆன்மோபதேசத்தை வேறு எவரும் இதுவரை இம்முறையில் செய்திராத சிறப்புடன் செய்து வாழையடி வாழையாக வரும் மக்கள் தொகுதிக்கு இணையில்லாத குருநாதராய் விளங்குகின்றார். (93) என்றும் கூறுவார் பெ. இராமனுஜன் அவர்கள்.

## 6. முதல் சுற்றிலேயே இராமன் வாலியின் மீது அம்பு எய்யாதது ஏன்?

இராமனால் ஏவப்பட்ட சுக்கிரீவன் வாலியுடன் மோதுகின்றான். ஆனால், வாலியோ அவனைக் கொல்லாது விட்டால் போதும் என்று சுக்கிரீவன் திரும்பி ஓடி வரும் அளவிற்கு நையப்புடைக்கின்றான்.

''அன்ன தன்மையர், ஆற்றலின் அமர்புரி பொழுதின்,
வல்நெடுந் தடந்திரள் புயத்து அடுதிறல் வாலி,
சொன்ன தம்பியை, தும்பியை அரி தொலைத்தென்ன,
கொல் நகங்களின், கரங்களின் குலைந்து உகமலைந்தான்'!
(632/60)

''மலைந்தபோது இணைந்து, இரவிசேய், ஐயன்மாடு அணுகி,
உலைந்த சிந்தையோடு வணங்கினன், வணங்கிட, 'உள்ளம்
குலைந்திடேல்! உமை வேற்றுமை தெரிந்திலம், கொடிப் பூ
மிலைந்து செல்க! என விடுத்தனன்; எதிர்த்தனன் மீட்டும்'' 633/61

எனப் பாடுவார் கவிச்சக்கரவர்த்தி.

'நீங்கள் இருவரும் மோதி நின்றபோழ்து வாலிக்கும் நினக்கும் வேறுபாடு காண இயலவில்லை' என்று கூறியது சரிதானா?

மனித இராமன் எப்பொழுது இந்திரலோகம்சென்றான்? எப்படி? எங்கு ஐராவதத்தைக் கண்டான்?

''கொம்பு ஒத்தன நால் ஒளிர் கோள் வயிரக்
கம்பக் கரி நின்றது கண்டனமால்;
இம்பர், தலை மாதவர்பால், இவன் ஆம்
உம்பர்க்கு அரசு எய்தினன்' என்று உணரா'' 422/22

மேற்பாடலில் கூறியுள்ளபடி. முன்பின் தான் பார்த்திருக்க முடியாத தேவேந்திரனின் யானையை இனங் கண்டுகொண்டான் என்ருல் அவன் சாதாரண இராமன் அல்லன்; 'மால்' என்று நம்மால் புரிந்து கொள்ள முடியாதா? அவ்வாறு வந்துள்ள இராமவதாரனை திருமாலுக்குப் பல நாட்கள் பழகிய சுக்கிரீவனை இனம் கண்டுகொள்ள முடியாதா! முடிந்தது. ஆனால் வாலி— சுக்கிரீவன் போர்த் துவக்கத்திலேயே

'வள்ளற்கு. இளையான் புகர்வான்', இவன், தம்முன்
வாழ்நாள் கொள்ள,
கொடுங் கூற்றுவனைக் கொணர்ந்தான்; குரங்கின்
எள்ளற்கு போர் செய எண்ணினன் எனினும் இன்னல்
உள்ளத்தின் ஊன்ற, உணர்வு உற்றிலன் ஒன்றும்,'
என்ருன். (630/41)

"ஆற்ருது, பின்னும் பகர்வான்," அறத்தாறு அழுங்கத்
தேற்ருது செய்வார்களைத் தேறுதல் செவ்விது அன்ருல்;
மாற்ருன் எனத் தம்முனைக் கொல்லிய வந்து நின்ருன்,
வேற்ருர்கள் திறத்து இவன் தஞ்சம் என்? வீர!"
என்ருன். 630/42

"சுக்கிரீவன் செய்கின்ற முயற்சி தரும யுத்த முறைமைக்கு மாறென்பதை உள்ளத்திற் கொண்டு மனங் கலங்கியது பற்றி இலக்குவன் இவ்வாறு கூறினன்" என்பார் வை. மு. கோ. அவர்கள் (உகரு) அதற்கு இராமன்,

"......... இப்
பித்து ஆய விலங்கின் ஒழுக்கினைப் பேசல் ஆமோ?"
640/43

என்றெல்லாம் அப்போதைக்குச் சமாதானமாகப் பதில் உரைத்தான்.

"எதையும் பொறுக்கவல்ல இராமன் தன் எண்ணத்தில் எவரேனும் ஐயமோ, அவமதிப்போ கொள்ளச் சகியான்.

தன் திருவுளத்திற்கு மாமுகத் தன்னுடைய தம்பியே நடக்க விரும்பி விட்டானே என்ற சினம் சிறிது உள்ளூர இராம னுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும்'' என்பார் பெ. இராமா னுஜன் அவர்கள்.

''பெரும் தவற்றுக்காகச் சிறு தவற்றை ஏற்றுக் கொள்வது உயர்நிலையினின்று நழுவுவதன் முதல்படி. மேலும், இங்கு சுக்கிரீவனிடம் பயன்பெறக் கருதி அவன் நவையை, தம்பி தடுத்தும் கேளாது, இராமன் தன்நலம் கருதி ஏற்றான்'' என்பர் நா. வரதராஜுலு நாயுடு அவர்கள் 'பொய்யுரையாத புண்ணியன் என்ற நூலின் அறிமுகத்தில் (VII)

''நெல்லுக்கு உமியுண்டு. நீர்க்கு, நுரையுண்டு,
புல்லிதழ் பூவிற்கு முண்டு''

குற்றமில்லாதவர் உலகத்தில் அரியராதலால் அவரவரி டமுள்ள குற்றங்களைக் கவனியாமல் குணங்களை மாத்திரம் நாம் கிரகித்துக் கொள்ள வேண்டுமென்று பெருமாள் இளையபெருமாளுக்குச் சமாதானங் கூறியருளினர் என்ப தாம்'' என்பார் வை.மு.கோ. (உகா)

இதே நியாயத்தை வாலியின் பக்கல் காண்பதற்கு ஏன் தவறினான் இராமன்?

என்றாலும் (வாலி) அண்ணனைக் கொல்விக்கும் சூழ் நிலையை உண்டாக்கிய தம்பியைத் தண்டிக்கவும் நினைத் தான் இராமன். அவ்வாறு அவனைத் தண்டிக்க அங்கே யார் உளர்? அனுமனோ சுக்கிரீவனின் அருமை மந்திரி. வாலி ஒருவன்தான் அங்கிருந்த சுக்கிரீவனின் விரோதி. எனவே அவனைக் கொண்டே தண்டிக்க நிச்சயித்த இராமன் முதல் சுற்றிலேயே வாலியைக் கொல்லாது விட்டு சுக்கிரீவனை நையப்புடைக்கும் சூழ்நிலையை உண்டாக்கி விட்டான். இது, அவன் கையாண்ட மறைமுகத் தண்டனை முறை!

''பேராண்மை யென்பதறுகண் ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு' என்றபடி.

கண்ணோட்டமின்றிப் பகைவரை யழித்தல் தகுதியா யினும் அப்பகைவர்க்குப் போரில் துன்பம் நேர்ந்த இடத்து அவரை அழித்திடாமல் அன்போடு விடுதலே நல்கல் பராக் கிரமத்தையுடைய வீரரது யுத்த தருமமும் ஆகும். தன் தம்பியினிடத்தே மைந்தனிடத்திற்போல அன்பு செலுத்து தல் தந்தையொப்பவனான தமையனது கடமை, அவ்வாறாக அந்த நீதி நூற் கொள்கைக்கும் அறநூற் கொள்கைக்கும் மாறாக வாலி தன் தம்பியான சுக்கிரீவனை வலியழிந்த நிலையிற் சிறிதும் இரக்கமின்றிக் கொல்லத் துணிந்தனனா தலால், 'அதிகமான புண்ணிய பாபங்களுக்கு இம்மையி லேயே பயன் நுகரலாகும்' என்றபடி அத்தீவினை மிகுதியால் உடனே அழியலாயினன் என்பது தோன்றக் கூறினர். இப்படிப்பட்டவனை, 'இன்று போய்ப் போருக்கு நாளை வா' என்று கொடும் பகைஞனான இராவணனை முதல் நாட் போரில் அருள் செய்து விடுக்கும் இயல்புடையவனும் தம்பியவர் பக்கல் வரம்பில்லாத அன்புடையவனுமாகிய ஸ்ரீராமபிரான் கொல்லுதல் தகுதியேயென்பதும் இதில் விளங்குதல் காண்க. இவ்வகைப் பெருங் குற்றத்தைத் தன் கண்ணாற் காணுமளவும் பெருமான் அம்பு செலுத்தாமற் பொறுத்திருந்து அது கண்டபின்னரே அம்பு தொடுத்தன னென்பதும் கருதத்தக்கது'' (உ ந உ) என்றும்,

சுக்கிரீவனை வலியிழந்த நிலையில் வாலி வலிய எடுத்துத் தரையில் மோதிக் கொல்ல முயன்றமை, அவ்வாலியைக் கொல்லுமாறு இராமபிரான் அவன் மேல் அம்பு தொடுத் தற்குக் காரணமென்பது கீழ்க் கூறியதனால் விளங்கிற்று (உ கா சா)'' என்றும் வை. மு. கோ. அவர்கள் குறிப்புரை கள் எழுதுவார்.

வாலியைப் பொறுத்தவரையில் சுக்கிரீவனின் பாதி பலமும் அவனைப் பொருந்த, முதல் சுற்றிலேயே சுக்கிரீ வனைக் கொன்றிருக்க இயலும். ஆனாலும் நீதி சாஸ்திரக் கொள்கைக்கும் ஒப்ப அவனைத் திரும்ப ஓடவிட்டு விட்டான். ஆனல் இராமன் சொல்லிய மாலைசூட்டிச் செல்லும் உபா

யத்தை மேற்கொண்டு உடனடியாக மறுபடியும் சுக்ரிவன் சண்டைக்குக் சென்றதால்தானே வாலிக்குச் சினம் தாங் காமல் சுக்ரிவனை இரு கைகளாலும் தூக்கினன் எறிதற்கு.

இந்த நிலையில் சகோதரனின் சண்டையின் இடையில் புகுந்தவன் இராமன். அந்த இராமனே சுக்கிரிவனைத் தம்பி யாக ஏற்றுக் கொண்டவன். அப்படியானல் வாலியும் இராமனுக்குச் சகோதரன் ஆகும் முறையைப் பெற்று விடு கின்றான், அன்றோ? எனவே தனக்கும் தன் சகோதர முறை வாலிக்கும் மறைமுகமாகத் தானே சண்டையை தோற்று வித்துக் கொண்ட இராமன் தான் மேற்குறிப்பிட்ட நீதிக்குப் புறம்பாக முதல் நாளில் போரிலேயே இரக்கமின்றிக் கொன்ற குற்றவாளியாகின்றான். அதிலும் தந்தையாய், தெய்வமாய், அறமூர்த்தியாய் நம்பித் தன் மனைவி தாரை யைத் திட்டிவிட்டு வந்த மைந்தன் போன்ற வாலியைக் கொன்றனனே இராமன்!

சுக்கிரிவனை வலியிழந்த நிலையில் வாலி கொல்லத் துணிந் தான்,அதனால்தான் இராமன் வாலியின்மேல் அம்பெய்தான் என்கின்றார். அந்த அளவிற்கு வாலி துணியவில்லை யென்றால் வலியிழந்த நிலையிலேயே வாலியை அல்லவா கொன்றிருப்பான் சுக்கிரிவன். அதுவுமன்றி இரு கைகள் தூக்கிய நிலை தோன்றவில்லையென்றால் இராமன் அம்பெய் யும் வாய்ப்பே இருந்திராது. இலக்கான மார்பு வெளிப் படத் தோன்றாதே! தான் இரண்டாம் சுற்றில் வாலியை வீழ்த்துவதாகச் சொல்லியனுப்பியதும் நிறைவேறியிராது. ஆக, வாலியின் மேல் குற்றமில்லை. குற்றம்போல் காட்டி இராமன் குற்றம் செய்து விட்டான், நிராயுத பாணியான வாலியின் மேல் வாளியை எய்து!

ை

'எனவே. இவ்விடத்தில் இலக்குவன் பொய் சொல் கிறான், என்றால் அது கம்பர் காவியத்திற்கே இழுக்காகும்' என்பார் இரத்தினம் செட்டியார் (69)

'பொய்' எனப் புகல்வார் யார்? 'உண்மையன்று, என்பதே சரி!

''பொய்மையும் வாய்மை இடத்த, புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்'' (திரு–30/2)

'இலக்குவன் பாட்டை இடைச்செருகல் என்று தள்ளி ஞல் ஞானம் பெறுவதற்குரிய பாட்டில்லாமல் கதைத் தொடர்பு அறுந்து காட்டும் எனவும் எழுதுவார் அவர் (69)

இலக்குவன் சொல்லால் வாலிக்கு ஞானம் வந்தது என்பது தவறு. அவன் சிறியன சிந்தியாதானாக நின்று, இராமன் தவறு செய்யமாட்டான் என்று அப்பொழுதும் நம்பி, இராமனே நோக்கிய நோக்கால், இராமன் யாரென உணர்ந்த உணர்விஞலேயே ஞானம் பெற்ருன்.

ஈண்டு திரு. எஸ். இராமகிருஷ்ணன் அவர்களின் நோக் குரைகளேக் காண்போம்.

''எனினும், 'நேரும் அன்று, மறைந்திருந்து நிராயுதன் மார்பில் ஏன் எய்தாய்?' என்று வாலி நேர்முகமாகக் கேட்டிருந்தும் அதற்கு இராமன் விளக்கம் தரவில்லே. வாலி செய்த பிழையை மட்டும் விளக்கிக் கூறினுன். இந்த நேரான கேள்விக்குச் சீரான விடை தராமல், பெரும்பாலும் வேருென்று விரித்தலாய் உள்ளது.'' (101)

''இந்த முரணேச் சுட்டிச் சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி சத்தியம் வளேந்து கொடுக்குமோ?என்று இராமனேக் கேட்டு, அவனே வாயிழக்கச் செய்யும் வாய்ப்பு இளையவனுக்குக் கிட்டியது'(108)

''புனேந்துரை புகன்று அண்ணனேக் காக்க விரைகின் ருன்'' (109)

''இது பேதையின் வாதமாகும். தஞ்சம் புகுந்தவ னுக்குத் தண்ணளி காட்டுவது ஒன்று: அவனது பேச்சை நம்பி, அவனது சத்துருவைக் கொல்வதாக வாக்குறுதி அளிப்பது இன்னென்று. முந்தைய செயலேச் செய்வது

வீரனுக்குப் பெருமை. பிந்தைய செயலைச் செய்வது நீதிக்கு இழுக்கு. இரண்டையும் சேர்த்துக் குழப்பிப் போலிச் சமாதானம் பகர்கின்றான் இளையவன்.'' (109)

''அவன் (இலக்குவன்) வாலி வதையை நியாயம் எனக் கருதியவனும் அல்லன்: வாலியை வதை செய்வது அநீதி என்று இவனே அண்ணனிடம் கழறினன் என்பதை நாம் அறிவோம்'' (110)

என்றெல்லாம் ஐயம் திரிபற எழுதியுள்ளமை சிந்திக்கத் தக்கது.

'':இலக்குவனுடைய இந்தச் சமாதானம் ஏற்றுக் கொள்ளக் கூடியதன்று என்பதை விளக்கத் தேவையில்லை', என்று திட்டவட்டமாக திரு. மு. மு. இஸ்மாயீல் அவர்களும் எழுதியுள்ளார் (110)

''சுக்கிரீவன் முதலாயினோர் எவ்வளவோ சொல்லியும் உணராமல் போனாய்' என்பதை வேண்டுமானால் வாலியின் குற்றங்களில் ஒன்றாக இராமன் கூறலாம். இது எவ்வாறாயினும் வாலியைக் கொன்ற செய்கைக்கு இராமன் கூறிய இவை காரணம் ஆகலாமேயன்றி கொன்ற வகைக்குக் காரணம் ஆகாது'' (75) என்பார் பெ. இராமானுஜன் அவர்கள்.

## 7 வாலியின் மனமாற்றம்

''மனம் திறம்பல், 'வலியம்' என மனம்
புறம் திரும்ப எளியவர்ப் பொங்குதல்'' 639/108

என்றும்,

''தருமம் இன்னது எனும் தகைத் தன்மையும்
இருமையும் தெரிந்து, எண்ணலை (எண்ண வேண்டும்)''

என்றும், 639/109

''ஏதிலாரும், எளியர் என்றால் அவர்
தீது தீர்ப்பது என சிந்தைக் கருத்து அரோ'' 639/110
என்றும், தனக்கு இராமன் கூறிய நீதிமொழிகளை

''முன்னே செவியுறு கேள்விச் செல்வன்'' 642/126

ஆகிய வாலி நினைந்து பார்த்தான்.

''இராமனை எண்ணும்பொழுது நான் எளியவனே!

அப்படியிருக்க என்னை அவன் சினந்து அம்பெய்தது மறம் திறம்பல் ஆகுமே!' என்றும்

''மும்மைசால் உலகுக்கு எல்லாம் மூலமந்திரமாய் முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும்பதமாய், தானே
இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தாய், நிற்கும்
செம்மை சேர் நாமத்தினை யுடைய இராமன்''
635/79

தருமத்தின் இருமையும் தெரிந்து எண்ணிப் பாராதவனாய் என்னை வீழ்த்தியது ஆகுமே!' என்றும், 'அயலவனேயானாலும், குணத்தால் என்னை எளியவன் என்றே கொண்டாலும், என் குறைகளை—பிழைகளை—திருத்தித் தீர்க்காமல் கொல்ல முற்பட்டு விட்டானே!' என்றும் தன் மனத்தே ஆழச் சிந்தித்துப் பார்த்தான், வாலி!

''உழைத்த வல்இரு வினைக்கு ஊறு காண்கிலாது
அழைத்து அயர் உலகினுக்கு அறத்தின் ஆறுஎலாம்
இழைத்தவன், இயல்புஅல இப்படிச் செய்யுமோ?''
(628/31)

என்றும்,

''இருமையும் நோக்குறும் இயல்பினாற்கு இது
பெருமையோ? இங்கு இதில் பெறுவது என்கொலோ?
அருமையின் நின்று, உயிர் அளிக்கும் ஆறுடைத்
தருமமே தவிர்க்குமோ தன்னைத்தான் அரோ?'' 628/32

என்றும், தான் முன்னமேயே இராமனைப் பற்றி ஏற்றிருந்த, அழிக்க முடியாத நம்பிக்கைகள் அவன் கண்முன் தோன்றின!

சிறியன சிந்தியாதானுகிய அவன் பெருந்தன்மையோடு,
''அறத்திறன் அழியச் செய்யான்' (642/125)
புவியுடை அண்ணல்'' என நெஞ்சத்தைத் தேற்றிக்
கொண்டான்.

''தன்னை முற்றிலும் மறந்துவிட்ட வாலி மறவாதிருந்தது இராமனைத்தான்'' என்றும் (73) ''உடலில் இராம பாணமும் உள்ளத்தில் இராமநாமமும் தைக்கப் பெற்ற வாலி மெய்யறிவு பெற்று 'என்மீது அம்பு எய்தவன் கடவுள்' என்றே உறுதியாக நம்பினன்; கும்பிட்டான், நம்பிக்கை வினைகாவண்ணம் பொய் வேடம் நீக்கி மெய்நிலையைக் காட்டித் தந்தான் அவ்வொரு தனிப் பரமன்'' (106) என்று கூறுவார் பெ. இராமானுஜன் அவர்கள்.

இந்தத் தேற்றமும் தெளிவும் உண்டான சாந்த நிலையில் தன் எதிரில் நிற்பவன் அவனுக்கு இராமனகப் படவில்லை. 'புவியுடை அண்ணலாய்த்' தோன்றினன்! ஆம்! பூமாதேவியை உடைய திருமாலாய்த் தோன்றினன். (இலக்குமி தான் சீதையாகி அசோக வனத்தில் சிறைப்பட்டிருந்தாளே) அதனுலே மனமார,

''யாவரும் எவையும் ஆய்; இருதுவும் பயனும் ஆய்,
பூவும் நல்வெறியும் ஒத்து; ஒருவ அரும்பொதுமையாய்
ஆவதீ ஆவது என்று அறிவினர் அருளினர்;
தாஅரும்பதம் எனக்கு அருமையோ? தனிமையோய்!''
(642/131)

என்று ஏத்திப் போற்றினன்.

''மற்று இனிஉதவி உண்டோ?—வானினும் உயர்ந்த
மானக்
கொற்றவ!—நின்னை, என்னைக் கொல்லியகொணர்ந்து,
தொல்லைச்

சிற்றினக் குரங்கினேடும் தெரிவுஉறச் செய்த செய்கை
வெற்று அரசு எய்தி, எம்பி, வீட்டு அரசு எனக்கு
விட்டான்'' (643/133)

என்று திருமாலின் அருளால், தான் பெற்றபேற்றைப் பெரு
மிதத்தோடு பகர்ந்து நின்றான்!

இத்துணையும் இயல்பான முறையிலேயே பேசி நின்றான்,
'வாலி'யின் உருவில் தோன்றியுள்ள 'இந்திரன்'—(இந்திரன்
கூறு)

''தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான்', எனது
கூறு
மருவலர்க்கு அசனி அன்ன வாலியும் மகனும்'......
(35/26)

என்று கூறிய நினைவு இப்பொழுது வந்து விட்டது. அதனால்
தான், அம்பினில் 'இராமன்' என்னும் செம்மைசேர் நாமம்
கண்டதும் நெகிழ்ந்தான்; தன் எதிரே இராமனும் திருமால்
வந்து நின்றதும் தன்வயம் இழந்தான்.

'தான் யார்? இராமன் யார்?' என்று உணர்ந்து கொண்
டதனை, இராமனாய் நின்ற திருமாலை ஏத்திப் போற்றி
இறைஞ்சி நின்றதனாலே, இந்திரன் கூறு ஆகிய வாலி சொல்
லாமல் சொல்லிவிட்டான்! இனி,

''.........எந்தை! யாவதும் எண்ணல் தேற்றாக்
குரங்கு எனக்கருதி, நாயேன் கூறிய மனத்துக்
கொள்ளேல்'' (642/128)

என்ற கூற்றின் உட்பொருள் காண்போம்!

இராமனை, மனிதனாய், மன்னனாய்க் கண்டு கொண்ட
வனாக மட்டுமே இருந்திருந்தால் 'எந்தை' என விளித்
திருக்க மாட்டான்; அனைத்துயிர்க்கும் தந்தை நிலையினனான
திருமால் காட்சியாய் இராமன் மாறியதாலேயே 'எந்தை'
என்கிறான்!

தன்னை அப்பொழுதும் குரங்காகவே தொடர்ந்து கருதிக்கொண்டு இருந்தவனுனல், 'யாவதும் எண்ணல் தேற்ருக் குரங்கினன் கூறிய மனத்துக் கொள்ளேல்' என்றே சொல்லியிருப்பான். ஆனல், 'நாயேன்' எனத் தன்னை மற்ருெரு மிருகமாகக் குறிப்பிட்டுக் கொள்கின்ருன்! (நாய்—இழிவின் எல்லை என்பர்: நாய்-அடிமை நிலையில் சிறந்தது: நாவாய் வேட்டுவன் நாய் அடியேன்......')

திருமாலாகிய தலைவனுக்குத் துணை நிற்க வேண்டிய நாய் போன்றவன் (இந்திரன் கூருகிய) நான்; ஆனல் குரங்காய் (குரங்கு—அசையும் இயல்பு) நின்று என்னென்னவோ பேசிவிட்டேன்; இப்பொழுது நான் உண்மையில் வாலி என்னும் குரங்கு அல்லன். நீங்கள் கட்டளையிட்ட வண்ணம் இராவண வதத்திற்கெனத் தோன்றிய இந்திரனின் கூறே என்பதை உணர்ந்து கொண்டேன். ஆகவே, நான் பேசியதெல்லாம் குரங்குப் பேச்சே எனக் கொளல் வேண்டும்; இந்திரன் பேச்சாய் எண்ணி மனத்தில் கொள்ளாதீர்கள்'' என மற்ற பொருளாய்ப் பேசுகின்ருன்' அதனை வலியுறுத்தவே,

''ஏவுகூர் வாளியால் எய்து, நாய் அடியேனேன்
ஆவிபோம் வேலைவாய், அறிவு தந்து அருளினுய்;
மூவர் நீ; முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!
பாவம் நீ! தருமம்நீ! பகையும்நீ! உறவும்நீ!

என்று ஏத்துகின்ருன்!

ஒரு குரங்கிற்கு இவ்வளவு ஞானப் பார்வையும், தத்துவ நோக்கும் அந்த வேளையில் எப்படித் தோன்றியிருக்க முடியும்!

'ஞானிகளை எப்படிப் பார்க்க வேண்டும், மதிக்க வேண்டும் என்ற விளக்கத்தைத் தெளிவுபட வாலியின் மூலம் சொல்லுகிருர், கம்பர்' என்பார் டி.கே.சி. அவர்கள். (519)

''அறவழி பிழையாது நின்று செயற்கரிய சாதிக்கும் பெரியோரைத் தெய்வமாகக் கருதுவது மரபு. அவ்வாறே வாலியும் இராமனைத் தெய்வமாகப் போற்றுகிறான்'' எனத் திரு எஸ். இராமகிருஷ்ணன் அவர்கள் எழுதுகின்றார். (117) இது 'வாலிவதை' நியாயமானது என்று முடிவு கூறத் தாம் முன்னுக்குப் பின் முரணாகக் கொண்டுள்ள அடிப்படை!

''ஆனால் இராமன் தனித்திருந்து அம்பு தொடுப்பது 'என் சித்தம்' என்கிறான். என் செயலுக்குக் காரணம் என் சித்தம் அன்றி வேறு இல்லையெனக்கூற வல்லவன் யாவன் என உணர்ந்து கொண்டால் வாலி வதையின் இரகசியத்தை ஒரு சிறிது புரிந்து கொண்டவராவோம்'' என்பார் பெ. இராமானுஜன் அவர்கள் (6)

ஆகவே, வாலி பெற்ற மனமாற்றம் இயற்கை யானதே!

இந்தப் பாடலை ஆதாரமாகக் கொண்டு—''வாநியாகிய வாலி இப்பாடலில் இராமர் ''அறத்திறன் அழியச் செய் யான் என்று கூறுவதனால் இராமர் அறம் பிழைக்கவில்லை யென்பதை யறிக'' என (291) வாரியார் சுவாமிகள் முடிவு கட்டுவார்.

வாலி அவ்வாறு கூறியது அவனுடைய பெருந்தகைமை யைக் காட்டும். இதனால் இராமனின் மனித தர்மக் குற்றம் மாய்ந்து போகாது!

மேலும் அவர், ''அறிவு தந்தாய்'' என்ற சொல்லைச் சிந்தியுங்கள். 'அவன் இந்திரன் என்றும், வந்த வரவை மறந்து பகைவனுடன் உறவு செய்தது பிழையென்றும் உணரும் உணர்வைத் தந்தார் என்று கூறுகின்றான்'' என்கின்றார். (292) 'வாலி வதை' இராமன் என்னும் மனிதன் வாலி என்ற குரங்கை மறைந்திருந்து மாய்த்ததால் வந்த வாதமேயன்றி தேவர்களுக்குள் உண்டாய கருத்தின் கோளாறால் அன்று. அப்படியே கொண்டாலும் இந்திரன் கூறுகியவனிடத்தில் அவன் பிழையை எடுத்துரைத்துக்

கண்டித்து அவன் இனியும் அங்கு தங்காமல் மறைந்தொழிய லாம் என்று தண்டித்திருந்தால் திருமாலாகிய இராம னுக்குச் சாலாதோ? இந்திரக்கூறு மாய்க்கப்படத்தான் வேண்டுமோ?

1980 ஆம் ஆண்டு கோவைக் கம்பன் மலரில், 'தாரை— சொல்லின் செல்வி, என்ற தம் கட்டுரையில் திரு. நா. வரத ராஜுலு நாயுடு அவர்கள், "இராமனால் அரசநெறி அழிந்த தற்குத் தாரையும் வாலியும் இரங்குகின்றனர்" என எழுது கிறார்.

இனி, வாலி—திருமால் காட்சி பற்றிய புரிசையாரின் வாதத்தையும் சற்றே பார்ப்போம்!

"இங்கே, 'கண்ணுற்றான் வாலி நீலக் கார்முகில் கமலம் பூத்து மண்ணுற்று வரிவில் ஏந்தி வருவதே (7) போலும் மாலை' என்ற இந்தத் தொடரைக் கொண்டே திருமாலாய்த் தரிசனம் தந்தார் வாலிக்கு என்பார்களானால், நாமும் இராமன் ராவணனுக்கும் திருமாலாகக் காட்சித் தந்தான் எனக் கூறலாம்" என்று கூறுவார். அதற்கு ஆதாரமாய்க் சொல்வது போலே,

"தோரணத்த மணி வாயின் மிசைசூல்
நீரணைத்த முகிலாம் என நின்றான்
ஆரணத்தை, அரியை, மறைதேடும்
காரணத்தை, நிமிர்கண் கொடு கண்டான்" (1085/17)

என்ற பாடலைக் காட்டுகின்றார். மேலும் 'நிமிர்' என்ற பாடற் சொல்லிற்கு 'நிமிர்தல்' என்ற அடிப்படையில் 'உயர்தல்' என்ற பொருள் காட்டி இராவணனின் கண்களை அளக்கின்றார்!

'நிமிர்' என்பதற்கு 'நிமிர்ச்சி' என்ற அடிப்படையை அமைத்துக்கொண்டு பார்த்தலே இராவணன் காட்சிக்கு ஏற்புடைத்து, 'நிமிர்ச்சி' என்பது 'இறுமாப்பு' என்னும் பொருளதாகும். இப்பொருள் கொளலே இராவணனின் காவிய, பண்பு நலன்களுக்கேற்றதாகும். அவ்வாறு இறு

மாப்புடன் காணுங்கால் திருமால் காட்சி எப்படிக் கிடைக்கும்?

ஆக புரிசையாரின் இந்த ஒப்பிட்டு நோக்கின் அடிப் படை வாதம் பொருந்தாதது ஆகும்.

''த்வந்த யுத்தமாக இருவர் போர் செய்கையில் இடையே ஒருவர்மேல் தாம் அம்பு செலுத்துதலாகிய இந்த தகுதி இல்லாத செயலைப் புண்ணியப் பயனை நுகர்பவரும் விசேஷ ஞானம் உடையவர்களுமான தேவர்கள் உடன் பட்டுச் செய்திடாரென்பான்,'' அத்தேவர் இச் செயலுக்கு ஆவரோ' என்றான். தேவராஜகுமாரனை என் விஷயத்தில் தேவர்கள் இப்படிச் செய்யக் கடவரல்லர் என்ற கருத்தை யும் கொண்டதுமாம். நகை செய்தது, அத் தொழிலைக் குறித்த இகழ்ச்சி பற்றி. திரிமூர்த்திகளிலொருவர்க்குத் தனியே இவ்வகைத்திறம் இல்லையென்பதுபற்றி, 'ஒருவனே இறைவர் மூவரோடும் ஒப்பான் செயலாம்' என்றான். திரிமூர்த்திகட்கும் ஒப்பான ஒருவனே இது செய்ய வல்லவ னென்க. திரிமூர்த்திகளின் ஆற்றலையுமுடையவன் இராம பிரான் என்பதை இந்நூலில் மற்றும் பல இடங்களிலும் காணலாம்'' என எழுதுவார் வை.மு.கோ,(உ சா ரு)

## 8. இராமனைத் திருமாலாய்க் கண்டவர் முன்னர் உண்டோ!

இராமனை இவ்வாறு திருமாலாய்க் கண்ட காட்சியர் முன்னமும் இருந்துள்ளனர்.

வனத்தில் விராதன்; சீதையைக் கவர்ந்தான்; இராம இலக்குவர் போரிட்டனர்; அவனுடைய தோள்மேல் ஏறி வெட்டி வீழ்த்தினர், முடிவில் அவனைப் புதைத்ததும், அவன் தன் சாபம் நீங்கப் பெற்று விண்ணில் தோன்றினான்; இராமன், திருமால் காட்சியாய் நின்றான்! திருமாலே இராமனாய் நிற்கக் கண்டான்! அவனைத் துதித்துப் போற்றி

றான். அவன் துதிப் பாடல்கள் ஒவ்வொன்றும் இராமனே திருமால் என ஒலித்து நிற்கக் காண்கின்றோம்! அடுத்த காட்சி!

இந்திரன், சரபங்கனின் குடிலில் இருந்தான்; அங்கு வந்த இராமனைக் கண்டான்; கண்டதும் திருமால் தான் இராமனாய் வந்திருத்தலை உணர்ந்து கொண்டான். அதனைக் கம்பர்

''கண்டான், இமையோர் இறை-காசினியின்—
கண்தான், அருநான் மறையின் கனியை! என்பார்.
422/24

இதனை உறுதிப் படுத்துமாப்போலே இந்திரன் இராமனைத் துதிக்கும் பாடல்கள் திருமாலைச் சுட்டிக்காட்டி அமைந்துள்ளன.

சரபங்கனும் இராமனை, 'திருமகள் தலைவ! 'என விளிக்கக் காண்கின்றோம்.

மற்றொரு காட்சி!

ஆரண்யத்தில் கவந்தன் என்னும் அரக்கன் எதிர்ப் பட்டான்; இராம, இலக்குவரை விழுங்க முற்பட்டான்; அவர்கள்அவன் தோள்களை வெட்டி வீழ்த்தினர்; இராமனின் திருக்கைகள் அவன் மீது படவும் கவந்தன் தன்னுடைய கவந்தர்வ உருவைப் பெற்றான். தனு எனும் அவன் இராமனைத் திருமாலாய்க் கண்டான். போற்றித் துதித்தான் எனக் காண்கின்றோம்.

## 9. வாலி முன்னை நிலைஅடைந்தான்!

வாலிக்கு ஞானப் பார்வை அளித்து உருக் காட்டிய திருமால், உருமாறி மறுபடியும் இராமனாய் அங்கே நின்றான்! அவனும், தான் இந்திரன் கூறு என்ற நினைவு மாறி வாலி யெனும் குரங்கு ஆகினான்!

இது எப்படித் தெரிகின்றது? முன்னை நிலை அடைந்த தால்தான் இராமனிடம்'' வேண்டுதல் விடுக்கின்றான்!

''பூ இயல் நறவம் மாந்தி, புந்திவேறு உற்ற போழ்தில்
தீவினை இயற்று மேனும், எம்பிமேல்சீறி, என்மேல்
ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்'' என்றான்.

643/134

ஆம்; உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கு, எங்களது; எனவே, என் தம்பி மது அருந்தி, மனம் கெட்டு செய்யத் தகாததை செய்து விட்டாலும் அவனைச் சினந்து, (என்மேல் குறிப்பிட்ட குற்றம் ஒன்றையும் ஆய்ந்து அறியாமலேயே) என் மேல் ஏவிய கணையை—உயிர்குடிக்கும் வாளியை ஏவிட வேண்டா என்றான்!' குற்றத்தின் தன்மையை, உண்மை யைத் தெளிந்திடாத போழ்தே, உயிரினை எடுத்திடும் அளவிற்கான செய்கையைச் செய்த இராமன், குற்றம் புரிந்த உண்மையை உணர்ந்தால் சுக்ரீவனைக் கொல்லாது விடுவானா? என்று அஞ்சினான்; எனவே, கெஞ்சினான்!

இன்னமும், திருமால்-இந்திரன் கூறு என்ற காட்சியில் அவர்கள் நின்றிருந்தால், இராமன் செய்யப் போகும் செய் கைகள் பற்றி விமர்சிக்க வாலிக்கு ஏது உரிமை? ஏவுகூர் வாளியால் அறிவு அடைந்தவன் இன்னமும் வாதமுறைப் பேச்சு பேசுவானா?

தொடர்ந்து, அவன் பாச உணர்வுடன் பேசுகின்றான்:

''இன்னம் ஒன்று இருப்பது உண்டால்; எம்பியை, உம்பிமார்கள்
'தன்முனைக் கொல்வித்தான்' என்று இகழ்வரேல், தடுத்தி, தக்கோய்!'' 643/135

என்று தன் தம்பிமேல் இருந்த பாசத்தால் இராமனிடம் வேண்டினான்! கொன்றவனே இராமன்தானே; அதனால் தன் பிழையுணர்ந்து அந்த நிகழ்ச்சியைப் பெரிது படுத்தாமல் பார்த்துக் கொள்ள வேண்டியவனும் அவனே! அதனால்தான்

இந்த இடத்தில் இராமனைத் 'நந்நோய்' எனத் தக்கதோர் சொல்லால் விளிக்கின்றான்.

''பின்னர், சுக்கிரீவனுக்கு அறவுரைகள் பல பகர்ந்து, அவனை இராமனிடத்தில் அடைக்கலப் படுத்தினான்.

'வாலிக்கு சுக்கிரீவனிடத்தில் பூர்வமாக உள்ள அன்பும் பரிவும் உண்டாய்விட்டது. 'உரிமைத் தம்பி' என்பது சுக்ரீவனைக் குறிக்கின்றது.........வாலி, சுக்ரீவன், அங்கதன் இவர்களுக்கிடையே இருந்த குடும்ப உறவு அருமையாக வெளியாகிறது கவியில்' என்பார் டி. கே. சி. அவர்கள். (513)

அங்கதன் வந்தான்; தந்தையின் நிலைக்காக அழுது புலம்பினான்.

''ஆயன பலவும் பன்னி, அழுங்கினன் புழுங்கி, நோக்கி
நீ உறு மெழுகின் சிந்தை உருகினன் செங்கண்வாலி''
மகனைப் பார்த்து, 645/153
''பாலமை தவிர் நீ.........
'.மால் தரும் பிறவி நோய்க்கு மருந்து என வணங்கு
மைந்த!'' என்றான். 646/155

இங்கே, 'திருமால் காட்சியைத் தான் கண்டதை' உறுதிப் படுத்துகின்றான் வாலி என்பதைத் தெளிகின்றோம்.

பின்னர், இராமனிடம் அவனையும் கையடை ஆக்கினான்' வீடு பேறு உற்றான்.

அவன் அந்தச் சூழலில் பாச உணர்வோடு இராமனிடம் பேசினான் என்பது மட்டும் அன்று; இராமனை மனிதன் நிலையில் வைத்தே பேசுகின்றான்.

''நின்றபேர் உலகு எலாம் நெருக்கி நேரினும்,
வென்றி வெஞ்சிலை அலால். பிறிது வேண்டுமோ?
தன் துணை ஒருவரும், தன்னில் வேறு இலான்
புன் தொழில் குரங்கொடு புணரும் நட்பனோ? 629/34
என்று இராமனின் வீரம், வென்றி பற்றித் தாரையினிடம் பெருமையாய்ப் பேசினான்.

மறைந்திருந்து அம்பெய்தவன் இராமன் எனத் தெரிந்து வாதம் புரிகையில்,

''செயலைச் செற்ற பகை தெறுவான் தெரிந்து,
அயலைப் பற்றித் துணை அமைந்தாய் எனின்
புயலைப் பற்றும் அப்பொங்கு அரிபோக்கி, ஓர்
முயலைப் பற்றுவது என்ன முயற்சியோ?'' 637/94

என ஏளனம் ஒலிக்கக் கேட்டான். அதாவது

''கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன் '' 637/89

என்னும் நிலையினின்றும் இராமன் தாழ்ந்திருப்பதாய் உணர்ந்தான்!

இராமனைத் திருமாலாய்க் கண்ட காட்சியில்,

''புரம் எலாம் எரிசெய்தோன் முதலினோர் பொருஇலா
வரம் எலாம் உருவி, என் வசை இலா வலிமைசால்
உரம் எலாம் உருவி,...உயிர் எலாம் நுகரும் சரம்''...''
642/130

உடையவன் எனப் போற்றிப் புகழ்கின்றான்! 'பிறிது வேறு உளதொன்றும் இல்லை' எனக் குறிப்பிடுகின்றான். அதே பாடலில்!

அந்தக் காட்சி முடிந்ததும். இராமனைத் துணை வேண்டும் மனிதனுகக் கருதி,

''அனுமன் என்பவனை-ஆழிஐய! நின் செய்ய செங்கைத்
தனு என நினைதி; மற்று, என் தம்பி நின் தம்பி ஆக
நினைதி; ஓர் துணைவர் இன்னோர் துணைவர்இலை; நீ ஈண்டு, அவ்
வனிதையை நாடிக் கோடி-வானினும் உயர்ந்த தோளாய்!''

என்றெல்லாம் எடுத்துக் கூறினன்!

ஆக, வாலி பெற்ற இயற்கையான மனமாற்றம் தெய்வீக உணர்வினால் அமைந்தது என்றும், அக்காட்சி மாறியதும் அவன் உலகியல் உணர்வு திரும்ப வரப்பெற்றான் என்றும் தெளிகின்றோம்!

என்றாலும், இராமன் திருமாலே என்பதைத் தன் தம்பிக்கும், மைந்தன் அங்கதனுக்கும் எடுத்துக் கூறி, தக்க முறையில் நடந்து கொள்ள வேண்டுமென அறிவுரைகள் வழங்கினான்.

ஆனால், தான் கண்ட காட்சியைத் தாரைக்குப் புலப் படுத்தாமலேயே ஆவி பிரிந்தான். அதனால், தாரை தன் கணவனின் உடல் மீது வீழ்ந்து அழுத போழ்தும் இராமனைத் தெய்வமாய்க் கருதவுமில்லை; குறிப்பிடவுமில்லை. வாலியைப் போருக்குச் செல்ல வேண்டா என்று தடுத்த போழ்து,

''............அரச! ஆயவற்கு
இன் உயிர் நட்பு அமைத்து இராமன் என்பவன்
........... வந்தான்'' 628/30

எனக் குறிப்பிட்ட பாங்கிலேயே, அவன் இறந்த பின்னரும்,

''ஓயா வாலி ஒளித்து நின்று எய்வான்
ஏயா வந்தஇராமன் என்று உளான் 648/172

என்றே குறிப்பிட்டுக் கூறுகின்றாள்.
இப்பாடலில் வரும்,

''ஓயா வாலி ஒளித்து நின்று எய்வான்

ஈயாயோ அமுதேயும் ஈயாயோ'' என்ற வரிகளுக்குப் புரிசையாரின் விளக்கத்தைச் சற்றே ஆய்வோம்.

''அம்மாழ்கலில், 'வாழ்வு எலாம் ஈயாயோ,, வாலி உருமையோடு வாழ்ந்திருந்தான்; அந்த வாழ்க்கைக்கு உரியாளையும் விட்டுக் கொடுத்திருப்பான் எனக் கொள்ளலாம். ஆனால், இது உறுதியான உரையாகாது. ஓர் ஐய உரைதான்'' (25) எனக் குறிப்பிடுகின்றார்.

என்னே, ஆபாச ஐயம்!

''திருஞான சம்பந்தப் பெருமானுல், 'வாலியார்' எனக் குறிப்பிடப்பட்ட அளவிற்கு வாலி பெரியன்'' என முன்னம் முழு நம்பிக்கையோடு கண்டவர்கள் இந்த மாதிரியான ஓர் ஐயத்திற்கு இடந்தரவே ஏற்புடைத்தன்று. இந்த ஐயம் தோன்றின் வாலி உருமையை உடைமையாக்கிக் கொண்டான் என்பதை முந்துறுத்துவது போலாகின்றது. நடுவுநிலைப் பார்வை நீங்கி.

இது காறும் நாம் கண்ட காட்சிகளால்-உணர்வது என்ன?

'இராமன் திருமாலாய் மாறினுன்—வாலி இந்திரன் கூருய் உணர்ந்தான். இத்தக் காட்சியில் ஆண்டான் பால் அடியான் கொண்ட மதிப்பாலும், கடமையுணர்வாலும், பக்திப் பரவசத்தாலும், முன்னம் இராமன் என்னும் மனிதன்பால் கண்ட குற்றங்களெல்லாம் மறைந்தன. தனக்கு மோட்சம் கிட்டும் நன்மை விளைவிக்கக் கூடியவாய்த் தெளிவு தந்தன; எனவே, திருமாலை எதிர்த்து வாதிடும் தன்மையை இழந்தான் என்பதாகும்.

இந்தப் பகுதியை விளக்க வருபவர், 'பிறன் மனைவியைக் கெடுத்த பிற்பாடு அரச மரியாதை அளிப்பது தவறு. என்பார் இரத்தினஞ் செட்டியார் (88)

அப்படியானுல், அவன் வானுலகிற்கும் அப்பால் உலகம் எய்திடும் பேற்றை—மரியாதையை—இராமன் நல்கலாமா?

இதுவே போல், புரிசையாரின் ஒரு வாதமும் அமை கின்றது!

'ஒருவனைத் தம்பியின் மனைவியைக் கவர்ந்த கொடியன் என்று கொன்று வீழ்த்தினுன், இராமன் விழுந்தவன் எழுந்திருப்பதற்குள் அவனுக்குத் திருமாலாகக் காட்சி தந்தனன் என்றுல், அவ்வளவு கொடியவன் அதற்குள்

எப்படி மோட்சம் பெறக் கூடிய நல்லவனாகி விட்டனா? அவன் எழுந்து தன் குற்றத்தை உணர்ந்து வருந்தினனா? மன்னிப்புத் தான் கேட்டானா? அல்லது மோட்சமும் காட்டியும் அவ்வளவு மனிவாகி விட்டன என்று பொருளா?" என வினவுகின்றார் (8–9)

கவந்தனும், விராதனும் இராமனால் அடிபட்டவுடன் தங்கள் அட்டூழியங்களை மறந்து, இராமன் திருமாலாவான் என்பதை உணர்ந்து, நினைந்து நெக்குருகப் போற்றித் துதித்தார்கள் என மேலே விளக்கியுள்ளோம். அதே நோக்கில் பார்க்கும் பொழுது புரிசையாரின் வாதமும் அடிபட்டுப் போகின்றது.

மேலும், இதனால் இராமனுக்கு இந்திரனின் பூர்வவிருத் தாந்தம் தெரிந்திருக்கிறது: அனுமன் வாயிலாக அந்த இந்திரனே வாலியாகப் பிறந்திருக்கின்றான் என்பதையும் அறிந்து கொள்கிறான். பிறனில் விழைந்த வாலியின் உணர்வு இப்பிறப்பிலும் தொடர்ந்துள்ளதை இராமன் அறிந்து கொள்கிறான்' என்பார் இரத்தினஞ் செட்டியார். (89)

இப்படித்தான், சிறியன சிந்திக்கும் மக்களின் மனோநிலை; அதனால், இக்கருத்தையும் இராமன்பால் ஏற்றினான், அனுமன். அதனாலேயே, 'உருமையை வாலி கெடுத்தான் என்று மனித இராமனும் நம்பியதாக உருவாக்கி விட்டனர்.' அவ்வெண்ணத்தின் அடிப்படையிலேயே உருமை கதையை ஆபாசப் பார்வைக்குள்ளாக்கி, இராமன் வாலியைக் கொன்றது குற்றமன்று என வாதிட முற்பட்டு விட்டனர்.

## 10. வாலி திருந்த வாய்ப்பளிக்காதது ஏன்?

இராம—இராவண முதற்போர் மூண்டது. துவக்கத்தில் வானர சேனையும் அரக்கர் சேனையும் பொருதன. ஆயிரம் ஆயிரமாய் வானரங்கள் இருந்த சேனையும் நிலை

குலைந்தது. சுக்கிரீவன் சினந்து பொருதான்; 'அரக்கர் சேனையில் அழிவு நிரம்ப ஏற்பட்டது. வச்சிரமுட்டியெனும் அரக்கர் சேனைத் தலைவனைச் சுக்கிரீவன் அழித்தான். கீழை வாசலில் போர் நிகழ்ந்தது, அங்கே, அரக்கன் கும்பானுவும்-கரடி இடும்பனும், பிரகத்தனும், நீலனும் பொருதனர். தெற்கு வாயிலில் அங்கதனும் மேலை வாயிலில் அனுமனும் போரில் இறங்கினர். இவ்வாருக நான்கு திசைகளிலும் போர்க் காட்சி,

இதனையறிந்த இராவணன் தானே போருக்கு வந்தான். இராவணனுக்கும்—சுக்கிரீவனுக்கும் போர் நிகழ்ந்தது; சுக்கிரீவன் தளர்ந்திடவே, அனுமன் துணைக்கு வரலாயிற்று. இலக்குவனுக்கும், இராவணனுக்கும் கடும் போர் நிகழ்ந்தது! அங்கேயும் அனுமன் உதவி தேவைப்பட்டது. ஆனுல், அனுமனும் சற்றே அயர்ந்தான்: பின் ஒருவருக்கொருவர் வீரவுரை பகர்ந்து கொண்டனர்—ஒருவரையொருவர் மார்பினிலே குத்தி வலிமை காட்டினர்—அனுமன் சலித்துப் போனுன்! இப்படியாக, வானரரும் இலக்குவனும் மாறி மாறி இராவணனேடு சண்டையிட்டுச் சலித்தனர்!

இராம—இராவணர் நேரடிப் போர் மூண்டது. இறுதியில், இராவணன் மகுடம் இழந்து, நாணி நின்றுன். அந்தச் சூழ்நிலையில் இராமன் அவனைக் கொன்றிருக்கலாம். ஆனுல்.

''நின்றவன் நிலை நோக்கிய நெடுந்தகை, இவனைக்
கொன்றல் உன்னிலன், 'வெறுங்கை நின்றுன்' எனக்
கொள்ளா'' 1141/250

இராவணனுக்குப் பல அறிவுரைகள் கூறினுன்.

''இன்று போய்ப் போர்க்கு நாளை வா''

எனக் கூறி, இராவணன் மனம் திருந்துவதற்கு வாய்ப்பளித்தான்!

இராவணன் மனம் திருந்தாமையால், அவனுடைய உற்றுர் ஒவ்வொருவராகப் போருக்குச் சென்றனர். தம்பி

கும்பகர்ணன் மாய்ந்தான். மகன் அதிகாயன் அழிந்தான்: இந்திரச்சித்தின் நாகபாசத்தால் இலக்குவன், அனுமன் முதலியோர் பிணிக்கப்பட்டனர்: கருடனால் நாக பாசம் நீங்கியது. மாபெரும் பக்கனும், புகைக் கண்ணனும் போரிட்டழிந்தனர். மரக்கண்ணனும் மாய்ந்தான். குருதிக் கண்ணன், சிங்கன் வீழ்ந்தனர். மறுபடியும் இந்திரசித்து போர் புரிந்து, இறுதியில் வீழ்த்தப்பட்டான். இடையில் மகோதரன், அகம்பன் முதலியோர் அழிந்தனர். இந்திர சித்து இட்ட பிரம்மாத்திரத்தால் இராமனே உணர்விழந்து போனான்; மருந்து மலை வரவேண்டிய அவசியம் ஏற்பட்டது

இவ்வாறாகப் பல்லாயிரம் உயிர்களின் இழப்பும், நிலை குலைவும் ஏற்பட்ட பின் இராம—இராவணர் நேர்ப் போர் மறுபடியும் நிகழ்ந்தது. இறுதியில் இராவணன் இறந்து பட்டான்.

இத்துணைப் போர் வர்ணனைச் சுருக்கத்தை ஏன் இயம் பினேம்? தன் மனைவியையே கவர்ந்து சென்றவனை நேரடி யாகக் கொன்று விடாமல், முதற்போரில் நாணி நின்றவ னுக்குத் திருந்த வாய்ப்பை நல்கி, எதிரியின் பக்கலிலும் தன் பக்கலிலும் பல்லோர் மாண்ட பின், வேறு வழியின்றி இராமன் இராவணனைக் கொன்றான்.

இத்தகைய உதார குணம் படைத்த இராமன் வெறுங் கையோடு நின்ற வாலியை மட்டும் மறைந்திருந்து அவனுக்கு எதற்கும் எந்த விதமான வாய்ப்பும் கொடுக்காமல்— கொன்றது ஏன்?

''புரட்சி வீரர் வ. வே. சு. ஐயர் தாம் ஆங்கிலத்தில் எழுதிய கம்பராமாயணத் திறனாய்வு' என்ற நூலின் பதினோராம் அத்தியாயத்தில் வாலி, சுக்கிரீவர்களின் குணச் சித்திரங்களை ஆராயும்போது, தவப்பெண்ணான சபரி முன் கூட்டியே இராமலட்சுமணரிடம் சுக்கிரீவனைத் தோழமை கொண்டு காரியசித்தி பெறுமாறு கூறியதை நினைவூட்டு கிறார். இராமலட்சுமணர் சீதையைத் தேடி வரும்போது

இஃந்நிலையில் திறமையாக ஆட்சி செலுத்திக் கொண் டிருந்தவன் வாலி. 'நிரம்பினுன் ஒருவன் காத்த நிறை அரசு' என்று இராமனே மெச்சப் போகிருன் இந்த ஆட்சி யின் மாட்சிமையை......என்கிருர் வ.வே.சு.'' என்று எழுதுவார் பி. ஸ்ரீ. அவர்கள், 'பொய்யுரையாத புண்ணியன்' என்ற நூலில் 'வாலி நீ வாழியே' என்ற தலைப்பிலான தம் முன்னுரையில். (XV)

''இராமன் வாலியின் தன்மையைத் தூது வாயிலா கவோ அன்றி நேரிலோ அறிந்து அவன் இணங்காவிடில் தண்டித்தல் வேண்டும். இராமனோ அப்படிச் செய் தானல்லன். வாலியைக் கொன்றமைக்கு இராமன் கூறும் காரணங்களை நோக்கின்; 'வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்ற இராமனின் கோட்பாடு புலப்படும்'' என வித்துவான் கா. இராமசாமி திட்டவட்டமாக எழுதுகின்ருர். ((க,ஆ.136)

''குற்றவாளியை, அரசியல் முறைப்படி எந்த வகை யால் தண்டிக்கலாம் என்று ஆராய்ந்து அம்முறையைக் கடைப்பிடித்து இராமன் வாலியைக் கொன்ருன். இந்த நிகழ்ச்சியில் போருக்குரிய முறையைக் கொண்டு வராது, தண்ட நீதியையே பார்க்க வேண்டும்'' என்பார் திரு.கி.வா. ஜகந்நாதன் அவர்கள். (காரைக்குடி கம்பன் மணிமலர் 1982-59)

இராமனுக்கும் அரசியலுக்கும் சம்பந்தமே இல்லாத போழ்து, வாலியைத் தண்டிக்கும் உரிமை அவனுக்கு ஏது? அவன் கையாண்ட முறையும் தண்டமானதேயன்றி, தண்ட முறையன்று! வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் நடைபெற்றது போர் இல்லையா?

வாலியின் இருப்பிடம் சார்ந்து இராம இலக்குவர், சுக்கிரீவன், அனுமன் ஆகியோர் ஆலோசனை நடத்தினர். இராமன் தன் கருத்தை வெளியிட்டான்.

''அவ்விடத்து, இராமன், 'நீ அழைத்து, வாலிஆனது ஓர்
வெவ்விடத்தின் வந்து போர் விளைக்கும் எல்வை, வேறு
நின்று
எவ்விடத் துணிந்து அமைந்தது: என் கருத்துஇது'
என்றனன்'' (625/10)

அவ்வாறு இருவர்க்கும் போர் மூட்டிவிட்டு, இடையில் தான் அம்பெய்தது சுக்கிரீவனுக்கு இராமனின் போர்த் துணை ஆகாதோ?

ஆகவே, மேலே குறிப்பிடப்பட்ட சமாதானம் சற்றும் பொருந்தாது!

''இராமன் வாலியை அஞ்சி மறைந்து நின்று அம்பெய்தான் அல்லன். சுக்கிரீவனே வாலியை ஒறுத்தற்கு உரியவனாகலின் அவனை வாலியோடு பொரவிட்டுப் பார்த்து நின்றான். சுக்கிரீவனுக்கு ஆபத்து நேர்ந்த தருணத்தில் துணை புரிந்தான். தன் அம்பு இலக்குத் தவறாது என அறிந்த வில் வீரன் அறைகூவி அம்பெய்யின் தன் வல்லமையைப் புகழ்ந்து பேசுதலாகுமன்றோ? அதில் வீரமுமில்லை. ஆயுதமில்லாத வாலியை அறைகூவி அம்பெய்தல் வீரத்தின் பாற் படாது'' எனத் திரு. த. இராமநாதப்பிள்ளை எழுதுகிறார் (க.ஆ. 135)

கங்கைக் கரையினிலே,

''.........போர்க்குகன் எனும் நாமத்தான் (318/1)

... ... ... ... ... ... ...

காயும் வில்லினன், கல்திரள் தோளினன்.''

''.........அல் செறிந் தன்ன நிறத்தினன்,
நெடிய தாளை நெருங்கலின், நீர் முகில்
இடியினோடு எழுந்தாலன்ன ஈட்டினன்.'' (319/2)

பல்தொடுத்தன்ன பல்சூல் கவடியன்,
கல்தொடுத்தன்ன போலும் கழலினன்,
அல்தொடுத்தன்ன குஞ்சியன், ஆளியின்
நெல்தொடுத்து ஒத்து நெரிந்த புருவத்தான்'' (319/5)

''கண் அகன் தடமார்பு எனும் கல்லினன்
எண்ணெய் உண்ட இருள் புரைமேனியன்'' 319/6

''கச்சொடு ஆர்த்த கறைக் கதிர் வாளினன்
நச்சு அராவின் நடுக்குறு நோக்கினன்
பிச்சர் அன்ன பேச்சினன். இந்திரன்
வச்சிராயுதம் போலும் மருங்கினன்'' (319/7)

''ஊற்றமே மிக ஊனொடு மீன் நுகர்
நாற்றம் மேய நகை இல் முகத்தினன்
சீற்றம் இன்றியும் தீ எழ நோக்குவான்
கூற்றம் அஞ்சக் குமுறும் குரலினன்'' 319/8

அப்பப்ப! இந்த வர்ணனைகளைக் கேட்டாலே அந்த உருவம் நமக்குப் பயங்கரமாகத் தோற்றம் அளிக்கின்றதே! அத்தகைய உருவத்துக் குகன்—கங்கை இரு கரையுடையான்—நல்லவன்! இதனைக் காவியம் படித்த பின் நாம் உணர முடிகின்றது; உரைக்க முடிகின்றது.

ஆனால் அவனைக் கண்டதுமே அவன்,

''உள்ளம் தூயவன்; தாயின் நல்லான்''320/12

என்று உணர்ந்து கொண்டானே, இலக்குவன்! அதனை ஒப்பியவனும் இராமனும் அவனை உள்ளே வரவேற்றானே! பலே! அவர்களின் நோக்கின் நுண்மை!

கிட்கிந்தையில் ஒரு குரங்கு! அனுமன்!

மறைந்திருந்து இராம இலக்குவரைக் கண்டான். 'அவர்களே தருமம்' என்று துணிந்தான். எதிர் சென்று வரவேற்றான். 'நீ யார்?' எனக் கேட்டனர். பதிலிறுத்தான். அவ்வளவுதான் அவன் தோற்றமும், சொல் தேற்றமும் கொண்டு வரிசிலைக் குரிசில் மைந்தன் (இராமன்) அவனை விடச் சிறந்தவர் எவரும் இல்லையெனத் தெரிந்து கொண்டான்!

"மாணி ஆம் படிவம் அன்று, மற்று இவன் வடிவம்; மைந்த!
ஆணி இவ் உலகுக்கு எல்லாம் என்னலாம் ஆற்றற்கு ஏற்ற
சேண் உயர் பெருமை தன்னைச் சிக்கு அறத் தெளிந் தேன்; பின்னர்க்
காணுதி மெய்ம்மை 600/19

என்று தம்பிக்குக் கூறினன்!

குரங்கினத்து ஒருவன் குண மகிமையைப் பார்த்த அளவில் கண்டு கொள்ளும் அத்துணை நீட்சண்யப் பார்வை கொண்டவன் இராமன் என அறிந்து வியக்கின்றோம்!

இந்த, ஆழ் நோக்கை அவன் வாலியின்பால் செலுத்தி னனா?

"உழைத்தவல் இருவினைக்கு ஊறு காண்கிலாது
அழைத்து அயர் உலகினுக்கு அறத்தின் ஆறு எலாம்
இழைத்தவன் என்றும், 628/31

"இருமையும் நோக்குறும் இயல்பினன்,
அருமையின் நின்று, உயிர் அளிக்கும் ஆறுடைத்
தருமம்..." 628/32

என்றும்,

"நின்ற பேர் உலகு எலாம் நெருக்கி நேரினும்,
வென்றி வெஞ்சிலை அலால், பிறிது வேண்டாதான்
தன் துணை ஒருவரும், தன்னில் வேறு இலான்" 629/34

என்றும்,

"அருளின் ஆழியான்" 629/35

என்றும், இராமனைக் கள்ளமில்லா உள்ளத்தனாய் எண்ணி இருந்தானே அந்த வாலி!

'எவ்வளவு உன்னத நிலையில் ராமனை வைத்துப் பார்க் கிறான் வாலி' என்று டி.கே.சி. அவர்கள் வியப்பார்கள் (482)

அந்த வாலியை, இராமன் மறைந்திருந்து கண்ட போழ்து சுயசிந்தையோடு நோக்கியிருந்தால் வாலியின் பெருந் தன்மை தெரிந்திராதா?

ஆனால், அவன் வாலியை, ஆழ்ந்து நோக்கவில்லை! ஏன்?

சுக்கிரீவனோடு கொண்ட நட்பின் ஆரம்பத்திலேயே, இராமன் அவனை நோக்கி,

''உன் தனக்கு உரிய இன்பதுன்பங்கள் உள்ள, முன் நாள் சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன நின்றன, எனக்கு நிற்கும் நேர்'' 606/26

என்றும்,

''மற்று இனி உரைப்பது என்ன?
வானிடை, மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்;
தீயரே எனினும், உன்னோடு
உற்றவர் எனக்கு உற்றார்;
உன்கிளை எனது; உன் காதல்
சுற்றம் என் சுற்றம் நீ
என் இன் உயிர்த் துணைவன்'' 606/27

என்றும் உறுதிமொழிகள் கூறிவிட்டான்.

ஆகவே, சுக்கிரீவனோடு பொர வந்த வாலியைத்தான் கண்டு அவனுடைய நற்குணங்களைப் புரிந்துகொள்ள நேர்ந்து விட்டால், தான் கூறுரைத்த வண்ணம் நடந்து கொள்ள முடியாமற் போமே என்று அஞ்சினான் போலும்!

'மன்னிக்கத் தகாத அபராதம் ஏதும் சுக்கிரீவன் வாலிக்குச் செய்யவில்லை. அப்படியிருக்க வாலி தான் பெற்றிருந்த பலத்தைக் கொண்டு தம்பியைப் படாதபாடு படுத்திக் கொடுமை செய்து வந்தான். இதைச் சொல்லி முறையிட்ட சுக்கிரீவனுக்கு 'உன் பகைவனை ஒழித்து மனைவியையும், ராஜ்யத்தையும் நீ மறுபடி' அடையச்

செய்வேன், இது சத்தியம்' என்று உறுதியான பிரதிக்ஞை செய்து விட்டான். இதன் மேல் வேறு வழி இல்லை. வாலியை மறைந்து நின்று கொல்வது அவசியமாக ஏற்பட்டு விட்டது" என்று இராஜாஜி அவர்கள் குறிப்பிடுவார்கள்!

இங்கு திரு. எஸ். இராமகிருஷ்ணன் நோக்குரையைக் காண்போம்!

"ஆனால் இந்த வாக்குறுதியில் இராமன் அவசரப்பட்டுக் காரியம் செய்யும் குறையையும் காண்கிறோம் 'விண்ணிலாயினும் மண்ணிலாயினும் வேறு எங்காயினும் உன்னை வருத்தியவர் என்னை வருத்தியவராவார்' என்று கூறுவதில் பிழையில்லையென்றாலும் குறிப்பிட்ட சூழ்நிலையில் வாலியால் அல்லற்பட்டு ஆற்றாது அபயம் கோரும் சுக்ரீவனிடம் இவ்வாறு கூறுவது அர்த்தபுஷ்டியுள்ளதாக அமைந்து விடுகிறது. வாலியை எதிர்ப்பதற்கு உடன்பட்டு விட்டான் என்றே வானர வீரர்களுக்குத் தோன்றுகிறது. எனவே அவர்கள் ஆனந்த ஆரவாரம் செய்கின்றனர். காதலியை இழந்து கடுந்துயர் உற்றுக் கானகத்தில் திண்டாடும் இராமன், சீதையை மீட்கும் எண்ணமே சிந்தையில் நிறைந்திருப்பதால், நுணுகி எண்ணாமல், அண்ணன் தம்பி பகை வரலாற்றை விசாரித்து அறியாமல், அவசரப்பட்டு உணர்ச்சி வேகத்தில் பேசுகிறான்" (15) என்றெழுதுகின்றார்.

'உணர்ச்சி வசப்பட்டு எல்லை மீறிய சினப்பேச்சுக்கள் பேசுபவன் இராமனேயானாலும் புருஷோத்தமன் ஆக முடியுமா?' என்ற வினா எழத்தான் செய்கின்றது!

இதுவேபோல் திரு. மு. மு. இஸ்மாயீல் அவர்களும் இராமனின் குற்றங்களைக் குறிப்பிடுவதைச் சிந்திக்க வேண்டும்.

"வாலியை இராமன் கொல்வது என்று, செய்த முடிவு, சந்தர்ப்பங்கள் உருவாக்கிய முடிவேயாகும்"

என்கிறார். (111)

மேலும்,

''வாலியை மறைந்து நின்று கொல்கின்றவரையில் இராமன் வேறு எங்கும் வில்லறம் துறந்ததாகவோ, தீமை கள் புரிந்ததாகவோ இராமாயணத்தில் இல்லை' (117) என் கின்றார்.

'தாடகை வதமே' ஆசான் ஆணையினால் இராமன் மனச் சான்றுக்கு விரோதமாக வில்லறம் துறந்து செய்தது தானே!

''இராமனுடைய புகழுக்கு இந்த வாலிவதை மாசு ஊட்டுகிறது என்பதில் ஐயமில்லை'' எனவும் எழுதுகிறார். (111)

''நல்லோர்க்கு நலிவு செய்யுந் தீயோரை எவ்வகை உபாயத்தாலாவது அடக்க வேண்டுமென்னுஞ் சங்கற்ப முடையவனென்பதும், எவ்வாற்றாலும் வெற்றியையே பெறு பவனென்பதும், நல்லோர்க்கு நலிவு செய்பவரையே தனக்குப் பகையாகக் கொள்பவனென்பதும் விளங்க 'தெவ் அடக்கும் வென்றியான்' என்றார் (199)'' என்றும்,

''தன்னையடுத்துக் குறைவேண்டின ஓர் அந்தணனது குறையைத் தீர்த்தற் பொருட்டுக் குபேரன் மேற் போர் தொடங்கிய ரகுவினது குலத்தில் அவதரித்தவரான பெரு மாள் தம்மையடுத்தவனான சுக்கிரீவனது குறையை நீக்கும் பொருட்டு வாலிமேல் அம்பு தொடுத்தல் இயல்பே என்பது தோன்ற இங்கு அப்பெருமானை 'இராகவன்' என்ற திரு நாமத்தாற் குறித்தனரெனலாம். அடுத்தவரை எவ் வகையாலேனும் குறை தீர்த்துப் பாதுகாத்தலை விரதமாகக் கொண்ட குலத்தில் தோன்றியவரென இவ்விசேஷ்யம் ஒரு கருத்தையுட் கொண்டது ஆதலால் கருத்துடை அடை கொள் அணி' (உறக)'' என்றும் எழுதுவார் வை.மு.கோ. 'எவ்வகையாலேனும்' என்பதால் இராமன் வாலியின் வகையில் நேர்மையற்ற வழியைக் கடைப்பிடித்துவிட்டான் என்றுகிறது.

இவ்வாறு, அவசியமில்லாததைச் சொல்லி, பின் அதன் விளைவுகளுக்குட்பட்டு நடந்து கொள்ள வேண்டிய கட்டாய நிலை இராமனுக்கேயன்று! மூல மூர்த்தியே அவ்வாறு மாட்டிக் கொண்டவன்தானே!

முனிவர்களும், விண்ணவரும், சிவனும் கூடி அரியிடம் அரக்கர் தொல்லையை விவரித்தனர்:

''ஐஇரு தலையினன் அனுசர் ஆதியாம்
மெய்வலி அரக்கரால் விண்ணும் மண்ணுமே
செய்தவம் இழந்தன—திருவின் நாயக—
உய்திறம் இல்லை' என்று உயிர்ப்பு வீங்கினர் 34/17

''செங்கண் நாயக! இனி தீர்த்தல் இல்லையேல்
நுங்குவர் உலகை ஓர் நொடியில்'' என்றனர் 34/18

உடனே திருமால்,

''..............வருந்தல்; வஞ்சகர்
தம் தலை அறுத்து இடர் தணிப்பென் தாரணிக்கு 34/19

என்றான்!

அவ்வாறு சொன்னவன் உடனே என்ன செய்திருக்க வேண்டும்? தன் சக்கராயுதத்தை உபயோகித்து உடனடியாகச் சொன்ன சொல்லை நிறைவேற்றியிருக்க வேண்டியது தானே! அவன்,

''கடுத்த கராம் கதுவ, நிமிர்கை எடுத்து, மெய்கலங்கி
உடுத்த திசை அனைத்தினும் சென்று ஒலிகொள்ள, உறுதுயரால்
'அடுத்த பெருந்தனி மூலத்து அரும் பரமே! பரமே என்று
எடுத்து ஒரு வாரணம்அழைப்ப''...... 416/48

தன் சக்கராயுதத்தால் முதலையை அழித்து யானைக்குக் கதி மோட்சம் தந்தவன் தானே! யானையோ அவனைக் காணாமலேயே அழைத்தது. தன்னை நேரில் கண்டு வணங்கி நைந்துருகி வேண்டியவர்க்கும் அம்முறையிலேயே துணைபுரிந்திருந்

தால் தேவர்கள் பின்னும் பற்பல ஆண்டுகள் அதே சூழ்நிலை யில் அல்லற்பட்டிருந்திருக்க வேண்டியதில்லையே!

''வாலி மஹா சிவ பக்தனுதலாலும், நாள்தோறும் பல திசைகளிலும் சென்று மீள்பவனுதலாலும், தான் செல்லு மிடங்களில் ஆங்காங்குச் சிவபூசை செய்வானென்க'' என்பார் வை.மு. கோ.

'வாலியைப் பெருமாள் மறைந்து நின்று கொன்றது ஏன் தெரியுமா? அது சிவபெருமானுக்குச் சிறப்பு செய்வதற் காகத்தான். வாலி சிவனிடத்தில் வரம் பெற்றவன். அவன் தனக்கு எதிர் நிற்பவர் பலத்தில் பாதி தனக்கு வந்து விடும்படி வரம் பெற்றிருந்தான். பெருமாள் அந்த வரத்தையும் வாலியையும் சேர்த்துத் தமது பாணத் தால் ஒரே அடியாக அழித்து விடுவார். ஆனல், அப்படிச் செய்து விட்டால் சிவனுக்குப் பெருமை குறைந்து விடுமே என்ற கிருபையினுல்தான் மறைந்து நின்று வென்ருர் என்பார் சிலர். இவர்களை ஒன்று கேட்கலாம். இராவணன் வரம் பெற்றது பிரம்மனிடத்தில்தான். இராவணன் மானிடர்களைத் தவிர மற்றெல்லோரையும் வெல்ல வரம் பெற்றிருந்தான். அவனை வெல்ல மானிட வடிவெடுத்து வந்தனர், திருமால் என்பது தான் இராமாயணம். வாலிக்குச் சிவன் தந்த வரத்தை மாற்ற வல்ல திருமால் இராவணனுக்குப் பிரமன் தந்த வரத்தையும், மானிட வடிவு கொள்ளாமலேயே மாற்றி அழித்திருக்கலாமே. பிரமன் வரத்தைச் சிறப்பிக்கத்தான் இப்படி வந்தனரா?'' என்ற புரிசையாரின் வினு—நினைவு கூரத்தக்கது. (3)

திரு. எஸ் இராமகிருஷ்ணன் அவர்களின் நோக்குரை யும், ஈண்டு காணத்தக்கதே.

''ஆனல் நூலறிவும் நுண்ணறிவும் பெற்ற அனுமனே இங்குத் திகைத்து நிற்கின்ருன் போல் தோன்றுகிறது. வரம்பு இல்லா ஆற்றலும் வரபலமும் பெற்ற வாலியின் வலியை அழிப்பது எப்படி? அதுவும், அன்றே அழிப்பது

எப்படி? புரிய முடியாத புதிர்தான். இறுதியில் இராமன் தான் மார்க்கமொன்று சொல்கிறான்.'' (32)

''இராமன் 'வேறு நின்று' என்றதால் தனி இடத்தில் மறைந்து நின்று அம்பைச் செலுத்தத் தீர்மானித்தான் என்பது பெறப்படும். முன்போல் அவசரப்பட்டு ஆவேசப் பேச்சுப் பேசவில்லை. என்பதைச் சுட்டிக் காட்ட எண்ணி முன் போலத் துணிந்து அமைந்த கருத்து இது என்று இராமன் கூறுகிறான். சிந்தித்துச் சீர் தூக்கிப் பார்த்தபின் செய்த முடிவு என்று கூறுகிறானே அல்லாமல், இக்கருத்து கொண்டதற்குக் காரணம் யாதென்று தெரிவிக்கவில்லை'' (33) என எழுதுகின்றார்.

தயரதன் புதல்வனாய்த் தோன்றினான்; சிற்றன்னையின் சூழ்ச்சியால் முடிதுறந்தான். இதனைக் கண்டு இளையன் இலக்குவன் கொதித்தெழுந்தான்.

அப்பொழுதுதான், திருமாலாகிய தான் நேரடி நடவடிக் கையில் இறங்காது, சுற்றி வளைத்த வழியைக் கடைப் பிடிக்க முடிவெடுத்தது சரியன்று என்று உணர்ந்தான். மறைமுக மாகத் தம்பியினிடம், நடந்தவையெல்லாம் தன்னால் நேர்ந் தனவே'' என்று குறிப்பிட்டுரைத்தான்

''நதியின் பிழை அன்று நறும்புனல் இன்மை; அற்றே
பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று; மைந்த!
விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது!''
என்றான். 288/129

விதி! 'தலைவிதி' என்று பொருள் கொள்வதா? அவ்வாறு கொள்ள. இராமன் என்ன சாதாரண மக்களுள் ஒருவனா? அவன்.

''ஒரு பகல் உலகு எலாம் உதரத்துள் பொதிந்து
அருமறைக்கு உணர்வு அரும் அவனை, அஞ்சனக்
கருமுகில் கொழுந்து எழில்காட்டும் சோதி'' 48/103

யாயிற்றே! அவனன்றோ] அனைத்துயிர்களுக்கும் தலைவிதியை நிர்ணயிப்பவன்! அதனை அறிந்தன்றோ, விராதன்—இராமன் மெய்படலால் சாபம் நீங்கிய தும்புரு, அவனைப் போற்றி

"..............நீ விதித்த மன்னுயிர்கள்
உய்யத்தான் ஆகாதோ!" என்று துதித்தான். 417/58

"ஒப்பு இறையும் பெறல் அரிய ஒருவா! முன் உவந்து உறையும்,
அப்பு உறையுள் துறந்து, அடியேன் அருந்த வத்தால் அணுகுதலால்
இப்பிறவிக் கடல் கடந்தேன்; இனிப் பிறவேன்; இருவினையும்
துப்பு உறழும் நீர்த்த கூர்த் திருவடியால், துடைத்தாய் நீ" 417/60

என்று தன் வினைப்பயன்—விதிப்பயன் நீங்கியதைக் குறிப்பிட்டுப் பரவினான்.

ஆக, இராமன் 'விதி' என்று குறிப்பிட்டது, சாதாரண பொருளது அன்று. அது 'தான் மேற்கொள்ள ஏற்படுத்திக் கொண்ட வழி' என்ற பொருளையே ஏற்கும்!

எனவே, அவன் கொண்ட பொருள், தான் 'விதித்த வழி' என்று நின்று, அவ்வழியின் பிழையால் வந்த அரசு இழப்பிற்கு 'இலக்குவன் நோவது ஏன்?' என்று கேட்டான்.

தானும் ஓர் அவதாரன் என்பதைக் காலம் முழுதும் உணர்ந்து கொள்ளாத இலக்குவன் 'விதி' என்பதைச் சாதாரண பொருளிலேயே கொண்டு,

"விதிக்கும் விதியாகும் என்வில் தொழில் காண்டி"
288/130
என்று தொடர்ந்தான்!

ஆக, இராமன், தான் சொன்ன சொல்லை நிறைவேற்றுவான் வேண்டியே வாலியின்பால் தன் இயல்பான பரிவு உணர்ச்சியைக் காட்டவில்லை எனத் தெளிகின்றோம்!

இதனை, வாலி இராமனிடமே எடுத்துரைக்கின்றான்.

''...........எம்பியை, உம்பிமார்கள்
'தன் முனைக் கொல்வித்தான்' என்று இகழ்வரேல்
தடுத்தி, தக்கோய்! 643/135

(ஏனென்றால்) 'இவன் குறை முடிப்பது என்ற காரணத்தால்'

''முன் முனே மொழிந்தாய் (அதனால்
நீ என்னைக் கொன்றாய்) அன்றே!''

எனப் பட்டும் படாமலும், 'இராமன் தன்னைக் கொன்றது, தான் சொன்ன சொல் காக்கும் பொருட்டேயன்றி, நியாய முறையால் அன்று' என்பதனைக் குறிப்பிட்டு விட்டான்.

'அதர்மம் எதிர்பாராத இடத்திலிருந்து வரும் போது உடலையும் உள்ளத்தையும் நிலைகலங்கச் செய்து விடுகிறது. வாலியின் நிலை என்ன பரிதாப நிலை!' என்று டி.கே.சி. அவர்கள் ஒரு குறிப்புரை தருகின்றார். (495)

இராமன் செய்தது அதர்மமானது—பிழையானது—என்பதை எடுத்துக்காட்டி நிற்கின்றது.

இராமன் வாயாலேயே தம் குற்றத்தை வெளிப்படையாக ஒப்புக் கொள்வதாகத் தம் நோக்குரையை அமைத்துள்ளார் டி.கே.சி. அவர்கள்.

''அப்பா வாலியே! எனக்கு ஒன்றும் பேசத் தெரியவில்லை. நீ பேசியதில் யாதொரு குற்றமும் இல்லை. உனக்குப் பெரிய பாதகத்தையே செய்து விட்டேன். நீ சொன்னது முற்றிலும் உண்மை. என் குலத்துக்குத் தீராப் பழியை உண்டாக்கி விட்டேன். இப்போது உன்னையும் உன் உயரிய சீலத்தையும் தெரிந்து கொண்டேன். நீ உயிர் துறக்கும் தறுவாயில் இருக்கிறாய். செய்த தீங்கை அழிக்க வழி இல்லையே. என்னத்தை நான் செய்ய! நீ என்னை மன்னித்தருள வேண்டும்' என்று திக்கித் திக்கிச் சில வார்த்தைகள் ராமன் சொன்னான் .ராமனுடைய முகத்தில் ஒரே துன்பமும்

ஆற்ருமையும் நிறைந்து நிற்கின்றன'' என்றே படம் பிடித்துக் காட்டுகின்ருர் அவர். (509)

ஈண்டு திரு எஸ். இராமகிருஷ்ணன் அவர்களின் கருத்துக்களையும் காண்போம்.

''வாலி குற்றவாளி என்று பிரதிவாதியின் வாக்கு மூலம் கேளாமலே தீர்ப்பு அளித்தாலும், அவனிடமிருந்து முடியைப் பறிக்கும் தண்டனை அவசியமா? அதுவும் அவசியமே என்று கொண்டாலும், வாலி வதையும் இன்றியமையாத நீதியின் பாற்பட்டதொரு நடவடிக்கையா? கொடிய இராவணனிடம் கூட இராமன் இவ்வாறு பரிவின்றி நடந்து கொள்ள மாட்டான்'' (25)

''ஆராய்ச்சியின்றி அவசரப்பட்டு இராமன் வாக்களித்து விட்டான். வாலியிடம் அவன் தம்பியைக் கூட்டிச் சென்று, பகைத் தீயை அவித்துச் சோதர வாஞ்சை புத்துயிர் பெறச் செய்வதற்கு அரும்பாடுபடவேண்டியவன் தகவிலாத வாசகம் பேசி விட்டான்'' (26)

''சீதையை இழந்ததால் சிந்தனை கலங்கி ஆவேசத்தில் அவசர வாக்குக் கொடுத்து விட்டு முறை தவறிய செயலுக்குக் கருவியாக வேண்டிய நிலைமையில் இராமன் நிற்கிருன்'' (52)

''இரு வீரர்கள் போர் புரியும் போது இடையில் புகுந்து ஒருவனைத் தாக்குவதே தூய வீரத்துக்கு இழுக்கு. இராமனே கரந்திருந்து அம்பு தொடுக்கப் போகிருன். அவனது தூய நெஞ்சம் இதற்கு இலேசில் ஒருப்பட்டிருக்குமோ?'' (53)

இவ்வாறெல்லாம் எழுதி இராமனின் பிழையை வலியுறுத்துகின்ருர்.

எனவே, மேலே எடுத்தியம்பியவையெல்லாவற்றையும் ஆழ நோக்குங்கால், 'வாலி வதம்' ஒரு சார்புடை நடவடிக்கையாகிக் குற்றத்தின் பாற்படுகின்றது!

## 11. இராமனின் வேறு பிழைகள்!

இனி, 'இந்த மானுட இராமன் வேறு எந்தப் பிழைக ளாகிலும் செய்துள்ளானா?' என்பதையும் சற்றே ஆய்ந்து தெளிவோம்!

1. அரண்மனையில் அனைவருடனும் விளையாடிக் கொண்டிருந்தான், பால இராமன். அப்பக்கம் கூனி சென்றாள்: உண்டை ஒன்றை இராமன் அக்கூன் முதுகின் மேல் இட்டான்!

இது கருத்தாலும், செயலாலும் பிழையென்று எண்ணிப் பாராத செய்கையே. ஆனால் கூனியின் மனம் புண்பட்டது. அதன் விளைவாய்ப் பின்னாளில் நடக்கக் கூடாத நிகழ்ச்சிகள் நடந்தேறின.

இப்பிழையை இராமன் தான் வளர்ந்தபின்னே உணர்ந் தான்! சுக்கிரீவனுக்கு அறிவுரை வழங்கியபோது,

''சிறியர் என்று இகழ்ந்து நோவு
செய்வன செய்யல்; மற்று, இந்
நெறி இகழ்ந்து, யான் ஓர் தீமை
இழைத்தலால் உணர்ச்சி நீண்டு
குறியது ஆம்மேனி ஆய கூனியால்,
குவவுத் தோளாய்!
வெறியன, எய்தி நொய்தின்
வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்'' 651/12

என்று இராமனே இந்நிகழ்ச்சியைத் தீமையானது எனக் குறிப்பிட்டுப் பேசினான்.

''இராமன் கூனியின்மேல் உண்டைவிட்டது அவளு டைய கூன் போகவேண்டும்—நிமிர்ந்திட வேண்டும்—என்ற அருள் உள்ளத்தால் செய்த செய்கை எனத் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் 8-10-82ல் சேலத்தில் தம் பேச்சில் (சேலம் கோட்டை மாரியம்மன் கோவில் திருப் பணிக்காக நிதி திரட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருந்த சொற் பொழிவு நிகழ்ச்சியில்) குறிப்பிட்டார்கள்.

அதற்கு ஆதாரமாகக் காட்டிய பாடல்,

''எறிந்த போர் அரக்கர் ஆவி எண் இலா வெள்ளம்
எஞ்சப்
பறித்தபோது, என்னை அந்தப் பரிபவம் முதுகில் பற்றப்
பொறித்தபோது, அன்னான் அந்தக் கூனி கூன் போக
உண்டை
தெறித்தபோது ஒத்தது அன்றி, சினம் உண்மை
தெரிந்தது இல்லை'' 1144/17

என்ற இராவணனின் கூற்று ஆகும்.

'கூனி கூன் போக என்பதற்கு 'கூனியின் கூன் நிமிர்ந்திட' என்ற பொருள் கொண்டால் அஃது இராமனின் அருள் நோக்கு என்னலாம். அப்படியானால் அவன் அருள் சென்று அவளுடைய கூனை நிமிர்த்தவில்லையே! அதனால் அந் நோக்கு ஏற்புடைத்தன்று. 'கூனியினுடைய கூன்பகுதியில் விழும்படியாக உண்டையைச் செலுத்தினான்' என்று கொள்ளவே சீரிது. அதற்கேற்ப அது சென்ற மென்மையைத்தான் இராவணன் குறிப்பிடுகின்றான்.

இதனையே கூனியும் மனத்தகத்தே கொண்டாள் என்பதை,

''தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயில்மேல்
மண்டினாள்—வெகுளியின் மடித்த வாயினாள்
பண்டைநாள் இராகவன் பாணியில் உமிழ்
உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்';
(249/49

என்ற பாடல் விளக்கி நிற்கின்றது.

2. பஞ்சவடியில் இராமன் சீதையுடனும், இலக்குவனுடனும் இருந்தான். ஒரு நாள் இலக்குவன் பர்ணசாலையில் இல்லாத வேளை; சீதை பர்ணசாலையினுள் இருந்தாள்; இராமன் பர்ணசாலையின் வெளிப்புறத்தே அமர்ந்திருந்தான். சூர்ப்பணகை கோல வடிவம் கொண்டு வருகின்றாள்; யார் வருவது எனக் கண்ணால் காணுமலேயே,

''நூபுரமும், மேகலையும், நூலும் அறல் ஒதிப்
பூமுரலும் வண்டும், இவை பூசலிடும் ஓசை
தாம் உரை செய்கின்றது; ஒரு தையல் வரும் என்று,
கோமகனும் அத்திசை குறித்து எதிர் விழித்தான்''
445/34

''இரு கண்ணின் எதிர் கண்டான்'' 446/35

''ஆருழை அடங்கும்? அழகிற்கு அவதி உண்டோ?
நேரிழையர் யாவர் இவர் நேர்?'' 446/36

என வியந்திருந்தான்!

இறைவன் தந்த எழிலை ரசிக்கலாம்; (அதுவும் அந்த எழில் மிளிரும் இறைமைத் தன்மையை எண்ணி எண்ணி இறும்பூது எய்தலாம்) ஆனல், முறையின்றி அந்த எழிற் பொருளை ருசிக்க எண்ணுவதுதான் தவறு. இப்பாங்கில் இராமன் சூர்ப்பணகையின் எழிற்கோலத்தை ரசித்தது தவறு அன்று என்றே கொள்வோம்,

ஆனல், அவளுடன் உரையாடியிருந்தபோழ்து என்னென்ன கேள்விகளும், விளக்கங்களும் கேட்டு விளையாடினன்! தன் மனையாள் உள்ளிருக்கும் போழ்தே, தான் திருமணம் ஆகாதவன் போலே பல படப்பேசி, உறுதியற்ற உறுதிகளைக் கூறி, அவளுடைய பெண்மை உணர்வுகளை உசுப்பி விட்டானே!

''சீர்மை சிறப்போடு நீங்கும், பயனில
நீர்மை யுடையார் சொலின்'' (திரு. 20/5)

''பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார், மருள் தீர்ந்த
மாசறு காட்சி யவர்'' (திரு. 20/8)

என்றெல்லாம் தேவமுதற் பாவலர் தெளிவித்துள்ளரோ! மேலும்,

''ஒழுக்க முடையவர்க்கு ஒல்காவே, தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.'' (திரு. 14/9)

என்றும் எடுத்துரைத்துள்ளாரே!

எனவே, கருத்தால் பிழையிலன் என்ருலும், நல் ஒழுக்கினுன், சொல் வழுக்கினுன் என்பதை இந்நிகழ்ச்சி காட்டி நிற்கின்றது அன்ருே?

''இராமனின் கண்கள், மகளிர்க்கெல்லாம் நஞ்சு என்னின்ருன். பிறனில் நோக்காத கண்கள் என்பது குறிப்பு. பிறனில் நோக்காத பெருங் கொள்கையினனுகிய நீ பிறனில் விழைந்த வாலியை எவ்வாறு பொறுப்பாய்?' எனக் குறிப்பிடுவது போல் அனுமன் பேசுகின்ருன்'' என்பார் இரத்தினஞ் செட்டியார் (3)

''மஞ்செனத் திரண்ட!கோலமேனிய மகளிர்க்குஎல்லாம்
நஞ்செனத் தகையஆகி நளிர் இரும்பனிக்குந்தேம்பாக்
கஞ்ச மொத்தலர்ந்த செய்ய கண்ண'' 599/15

எனும் பாடலில், 'மகளிர்க்கு எல்லாம் நஞ்செனத் தகையவாகி' என்றதனுல், 'பிறனில் நோக்காத கண்கள் இராமனின் கண்கள் எனப் பொருள் கொள்கின்றனர்!

இராமனைக் காணும் பெண்டிர் அவனுடைய கண்களின் ஒளியால் ஈர்க்கப்பட்டு அவன் பால் ஆராக் காதலில் மூழ்கி, அவர்கள் உயிர் அவன்பால், சென்றிடச் செய்வதால் அவை நஞ்செனத் திகழ்ந்ததாகக் கொள்ளலே ஏற்றதாகும்!

இந்தப் பாங்கினுல் அன்ருே சூர்ப்பணகையும் தன் உள்ளத்தை இராமனிடத்துப் பறிகொடுத்தாள்!

அதனுல்தானே கவிச் சக்கரவர்த்தி,

''வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்,
தாக்கு அணங்கு அனையவள் தனத்தில் தைத்தவே''
(84/36)

என்ருர், சீதை-இராமன் காதற் காட்சியில். இதன் விளைவாய், அவளின் உயிரே போயது! அதன் பின்னும் தேடிக் காண முயன்ருள் எனுமாப்போலே,

''......மதியோடும் எல்லி நீங்கப்
பெற்று, உயிர் பின்னும் ஆசையால்...... (113/44)

... ... ... ... ... ...
.....மடந்தைக்கு அப்பால் உற்றது புகலலுற்ரும்.''

என்ருர்.

''......என் தளிர் நிறம் உண்ட கண்ணின்
உன்நிறம் காட்டினீர்; என் உயிர்தர உலோவினீரே!''
(114/46)

என்றும்,

''... ... ... ... வார்சிலைக்
கொண்டல் ஒன்று, இரண்டு கண்ணின்மொண்டு
கொண்டு என் ஆவியை
உண்டது உண்டு'' (114/48)

என்றும் சீதை புலம்புகின்ருள்!

இராமன் உலா வரும்பொழுது கண்ட மாதரெல்லாம், ''கண்ணினல் காதல் என்னும் பொருளேயே காண்கின்ரேம்''
என்று ஏங்கினர்! (163/4)

கவிச்சக்கரவர்த்தியோ,

''வீதிவாய்ச் செல்கின்ருன்போல் விழித்து இமையாது நின்ற
மாதரார் கண்களூடே வாவும் மான்தேரில் செல்வான்
யாதினும் உயர்ந்தோர், தன்னே 'யாவர்க்கும் கண்ணன்' என்றே.
ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்'' (168/6)

எனத்தான் கொண்ட பொருளே உணர்த்தி விட்டார்!

டி.கே.சி. அவர்கள் இந்தப் பாடல் வரிக்குப் பொருள் கூறுவதைப் பார்ப்போம்.

'மகளிர்க்கு எல்லாம் நஞ்சு எனத் தகையவாகி'
பெண்களுக்கு மிக்க காதல் நோயை உண்டாக்கும் படியாய்''

என்பார் அத்தோடு,

'உன் கண்ணைப் பார்த்தால் யாருக்குமே ஆசை உண்டாகும்.
பெண்கள் பார்த்தால் அவர்கள் என்ன பாடுபடுவார்கள் என்று சொல்லவா வேண்டும்?' என்று கூறி வியக்கின்றார். (429)

(3) இராமன் விசுவாமித்திரருடன் சென்றான்; தாடகை என்னும் பெண்ணைக் கொன்றான்; பெண் கொலை புரிந்த பழிக்கு ஆளானான்!

பின்னாளில், கூனி கைகேயினிடம்,

''ஆடவர் நகைஉற, ஆண்மை மாசுஉற,
தாடகை எனும் பெயர்த் தையலாள் பட,
கோடிய வரிசிலை இராமன் 259/58

என்று குறிப்பிட்டுக் குத்திக் காட்டினாளே, அதனால் அவனை இப் பழி உடையவன் என்று கூறவில்லை!

தன் மனச் சாட்சிக்கு மாறாக மாது அவளைக் கொன்றான் குருவின் வாசகம் கேட்டு, என்பதனால் அவன் பிழைபட்டோன் ஆகின்றான்.

''அரக்கியைக் கொல்வேன்''

என்று அவன் இறுதியில் சொல்லவில்லை,

''.........அறன் அல்லவும்
எய்தினால், அது செய்க!' என்று ஏவினால்,
மெய்ய, நின் உரைவேதம் எனக்கொடு
செய்கை அன்றோ! அறம் செய்யும் ஆறு'' 64/45

என்று குருவின் சொல்லுக்கல்லவோ கட்டுப்பட்டு அவளைக் கொன்றான்!

இப்பிழையைத் தானே உணர்ந்து கொண்டதனாலன்றோ, இலக்குவன் அயோமுகியாம் அரக்கியைக் கொல்லாது விடுத்ததற்கு அவனைப் புகழ்ந்து,

"தொல்இருள், தனைக் கொலத் தொடர்கின்றனையும்,
கொல்லலே; நாசியைக் கொய்து நீக்கினாய்;
வல்லை நீ; மனுமுதல் மரபினோய்! என
புல்லினன்—உவகையின் பொருமி விம்மினன்!"
568/91

குருவின் சொற்படி நடவாதவன் என்ற வேறோர் பழிக்கு அஞ்சி இப்பெண் கொலைப் பழிச் செயலுக்கு ஒப்பினானோ? எவ்வாறாயினும் பிழை பிழையே!

(4) சீதையை இராவணன் எடுத்தேகி விட்டான் இராம இலக்குவர் தேடி அலைந்தனர். வழியில் சடாயுவைக் கண்டனர், அவர் மூலம் நடந்தவெல்லாம் அறிந்தனர். இராமன் சீற்றம் கொண்டான், கொந்தளித்துப் பலவாறாக ஆர்ப்பரித்தான்.

"இக்கணம் ஒன்றில் நின்ற, ஏழினோடு ஏழு சான்ற
மிக்கன போன்று தோன்றும், உலகங்கள் வீயுமாறும்,
திக்குடை அண்ட கோளப் புறத்தவும் தீந்து, நீரின்
மொக்குளின் உடையுமாறும், காண் என முனியும்
552/119

சிந்தையால் பிழை செய்கிறான் இராமன் என்பதை உணர்ந்த சடாயு அவனையே இடித்துக் கூறலானான்!

"வம்பு இழை கொங்கை வஞ்சி வனத்திடைத்
தமியள் வைக,
கொம்பு இழை மானின் பின்போய், குலப்பழி
கூட்டிக் கொண்டீர்;
அம்பு இழை வரிவில் செங்கை ஐயன்மீர்! ஆயுங்காலை
உம்பிழை என்பது அல்லால், உலகம் செய்பிழையும்
உண்டோ?" 552/124

என்று எடுத்தியம்பி இராமன் பிழையின் பாற்பட்டதைத் தெளிவுறுத்துகின்றான், சடாயு!

(5) சிதை மீட்கப்பட்டு விட்டாள். வீடணன் அவளை இராமன்பால் அழைத்து வந்தான். அவள் அவனைத்தொழுது ஏக்கம் நீங்கி நின்றாள்.

இராமன் அவளை வாய்க்கு வந்தவாறு ஏசிப்பேசுகின்றான்.

''ஊண்திறம் உவந்தனை; ஒழுக்கம் பாழ்பட
மாண்டிலை; முறைதிறம்பு அரக்கன் மாநகர்
ஆண்டு உறைந்து அடங்கினை; அச்சம்' தீர்ந்து இவண்
மீண்டது என் நினைவு? 'எனை விரும்பும்' என்பதோ?''
1550/62

''பெண்மையும், பெருமையும், பிறப்பும், கற்பு எனும்
திண்மையும், ஒழுக்கமும், தெளிவும், சீர்மையும்,
உண்மையும், நீ எனும் ஒருத்தி தோன்றலால்,
வண்மைஇல் மன்னவன் புகழின், மாய்தலால்''
1550/66

''யாது யான் இயம்புவது? உணர்வை ஈடுஅறச்
சேதியா நின்றது, உன் ஒழுக்கச் செய்தியால்;
சாதியால்: அன்று எனின், தக்கது ஓர்நெறி
போதியால்'' 155/68

என்றெல்லாம் இராமன் வசை பாடினான்.

இத்துணையும் யாரைப் பார்த்துப் பேசினான்?

''கண்டனன், கற்பினுக்கு அணியைக் கண்களால்''
என்றும், 938/25

''உன்பெருந்தேவி என்னும் உரிமைக்கும், உன்னைப்
பெற்ற
''மன்பெரு மருகி என்னும் வாய்மைக்கும், மிதிலை
மன்னன்
தன் பெருந்தனையை என்னும் தகைமைக்கும், தலைமை
சான்றான் —
என் பெருந் தெய்வம் ஐயா!''

என்றும், இன்னமும் பலவாறாகவும் அனுமனால் (தன்னால், 'சொல்லின் செல்வன்' என்று பட்டம் சூட்டப்பட்டவனால்) புகழப்பட்ட, துதிக்கப்பட்ட, கற்பின் செல்வியாம் சீதையி டம்!

என்னே இவ்வுலகின் இயற்கை? சீதை பிரிந்திருந்த அதே பிரிவுக் காலம் முழுவதும் இராமன் தனித்திருந்தானே! அந்தக் காலத்தில் அவன் தன் கற்பு நிலை இழந்திருக்கக் கூடும் என்பதாக அவள் ஐயுற இயலாதா? தன் ஐயப்பாட்டினை வினாக்களாக அடுக்கியிருக்கமாட்டாளா? அவ்வாறு வினவி யிருந்தால், இராமன் என்ன செய்ய இயன்றிருக்கும்!— ஆணுக்கு ஒரு நீதி பெண்ணுக்கு ஒரு நீதி என்ற சாதாரண உலகியல் நியதியை எடுத்துக் காட்டி தப்பித்திருப்பானோ? இராமனோ, தன் கற்பின் செல்வியின் பால் இவ்வாறெல் லாம் கூறத் தகாத வார்த்தைகளையெல்லாம் கூறி, ஒரு சாதாரண—ஏன் அதற்கும் கீழான—நிலை மனிதனாய் நடந்து கொண்டதனால்தான் இவ்வுலகம் இந்த மனோ நிலையிலிருந்து இன்னமும் திருந்தவில்லை போலும்! பெண் கற்பைப் பேணு வார் ஆண் கற்பினை அகத்திலும் நினைத்துப் பார்ப்ப தில்லையே! நிற்க,

இவ்வாறெல்லாம் குற்றம் உடையவளாய்த் தான் கருதி யிருப்ப அவளை ஏன் மீட்டான் இராமன் என்பதற்கும் அவனே காரணம் கூறுகின்றான்!

''பிழை, என்னை மீட்பான் பொருட்டு இலங்கை எய்தி னேன்'' 1550/63

என்றான், தன் பிழை தானே உணர்ந்த நிலை இது!

சுடுமொழி பேசும் இராமனைக் கண்டு சீதை துயருற்றாள்; சாகத் துணிந்தாள்; இலக்குவன் அமைத்த தீயை அணுகி னாள்; அப்பொழுதும் இராமன் கல்மனத்தினனாய்இருந்தான்!

ஆக, இக்காட்சியில் இராமன் தன் சொல்லாலும், சிந்தையாலும், செயலாலும் பிழைபட்டு நிற்கக் காண்கின் றோம்!

மேலே குறிப்பிட்டவைகள் எல்லாம் சிறு பிள்ளைத் தனத்தாலும், வாலிபப் பருவநிலையாலும், தன் உடைமை இழப்பாலும், தன் மான உணர்வாலும் ஏற்பட்டவை என்றாலும் பிழை பிழையே! இராமன்பால் ஏற்பட்டவை என்றாலும் பிழை பிழையே!

ஈண்டு, ''அவதாரமானாலும் இராமன் இங்கேஇப்போது மனிதன்தான். மனிதன் மகாத்மா ஆவதற்கு முதல்நிலை தன் தவறு உணர்தல்தான். அதையே இராமனும் மானுட வேஷம் போட்டுக் கொண்டதால் செய்கிறான். 'யானைக்கும் அடிசறுக்கும்' என்பது போல், இராமனுக்கும் அடி சறுக்கி விடுகிறது. அதுவேதான் அவனைப் பரம்பொருளிலிருந்து மனிதனாக இனம் பிரித்துக் காட்டுகிறது'' என்ற பழ. பழநியப்பன் அவர்களின் கருத்துரை (30) நோக்கத்தக்கது. ஏற்புடைத்து.

அவர் மேலும், ''எதிரில் யார் நின்று போரிட்டாலும் பாதிபலம் தனக்கு வரவேண்டும் என்று பெற்ற வரத்தைத் தீய வழிக்குப் பயன்படுத்தியதாலேயே, வர துஷ்பிரயோகம் செய்தவனைத் தண்டிக்க நெறி துஷ்பிரயோகம் செய்ய வேண்டி நேரிட்டு விட்டது இராமனுக்கு'' (33) என எழுது கிறார். இஃது ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று. முரடனுக்கு முரடன் இம்முறையைக் கையாண்ட காட்சியா இது? வாலி தன் வர பலத்தைத் துஷ்பிரயோகம் எங்கே செய்தான்? அப்படிச் செய்யும் மனப்பாங்கிருந்தால் சுக்கிரீவனை முதல் சுற்றிலேயே நசுக்கிக் கொன்றிருக்கலாமே! வாலி பெற்ற இந்த வர பலத்தை, இவர் மட்டுமல்ல மற்றும் எத்தனையோ பெரியவர்கள் துஷ்பிரயோகம் செய்து வாலி மேல் குற்றம் சுமத்த முயல்கின்றார்கள்!

(பாதிபலம் வரும் படியான) ''வரம் பெற்றது தவறு அதன் துணையால் இரக்கமற்று நடந்ததும் குற்றம். அதற்கு மாறான வழியில் சென்றவது அவனைத் தண்டித்தால் தான் அறம் காக்க முடியும் என்ற நிலை இராமனுக்கு'' (52)

என்பார் பி. ஸ்ரீ. அப்படியானால் ஓர் அறத்தைக் காக்க மற்றோர் அறத்தைத் துறந்த குற்றத்திற்கு ஆளாகிறான் இராமன் என்று தானே ஆகின்றது!

அதுவே போல், வாலிவதைக் காட்சியிலும் இராமன் பிழை பட்டவனே! பல பிழைகளுக்கு ஆளாகியிருப்பவன் இப்பிழையைத் தனித்துச் செய்தவனாகப் படவில்லை. அதனால் அவன் பிழையற்றவன் என வாதிட முயல்வது வீண் பெருமையே!

''தான் பூண்ட மனித வேஷத்திற்கு ஏற்ற படி ஒழுகு பவனாதலால், தனது நிஜரூபமான–தெய்வத்தன்மையைப் பாராட்டாமல் 'புரிந்து நின்ற தீமைகள் திருமாறு நோற்பல் என்றான்'' என வை. மு. கோ. அவர்கள் எழுதுவார்.

## 12. இராமன் தன் நுனித்துணரும் தன்மையிலும் பிழைபட்டான்!

இராமன் செய்திகளை நுனித்துணர்வதில் வல்லவனே. என்றாலும் அவன் அத்தன்மையிலும் பல சூழல்களில் பிழை பட்டுள்ளான்.

1. மாரீசன் பொன் மானாய் வந்தான். சானகி அதனைக் கண்டு மயங்கினாள்.

''ஆணிப் பொனின் ஆகியது; ஆய கதிரால்
சேணில் சுடர்கின்றது; திண்செவி, கால்,
மாணிக்க மயத்து ஒருமான் உளதால்;
காணத் தகும் என்றனள்; கை தொழுவாள்!'' 518/49

அனைத்தும் அறிந்த இராமன் என்ன செய்தான்? கம்பரே கூறுவார்.

''இம்மான் இந்நிலத்தினில் இல்லை எனு
எம்மான் இதனைச் சிறிது எண்ணம் செயான்,

செம்மானவன் சொல்கொடு, தேமலரோன்
அம்மானும், அருத்தியன் ஆயினனால்'' 518/50

என்பார்.

ஏதோ, மனைவியின் மனப்போக்கில் ஒன்றி இராமன் இப்பிழை எண்ணம் கொண்டான் என்றே கொள்வோம்! இளையவன் எடுத்துக் கூறினனே,

''காயம், கனகம், மணிகால், செவி, வால்
பாயும் உருவோடு இது பண்பு அலவால்;
மாயம் எனல் அன்றி, மனம் கொளவே
ஏயும்? இது மெய் அல'' 518/52

என்று எடுத்துரைத்தானே! அப்பொழுதாவது இராமனின் நோக்கு திருந்தியதா?

''நில்லா உலகின் நிலை, நேர்மையினால்
வல்லாரும் உணர்ந்திலர்; மன் உயிர்தாம்
பல் ஆயிரகோடி பரந்துளவால்;
இல்லாத இல்லை—இளங்குமர!'' 518/53

என்று இராமன்தன் பேச்சின் போக்குதான் மாறியது! அதனால், அவன் தன் பிழைபட்ட பார்வையில் ஆழ்ந்து நின்றான்!

'காதல் மனைவியைத் திருப்தி செய்ய மாயமானைத் தேடிப்போனதின் பயனாக, ஒன்றன்பின் ஒன்றாகச் சிக்கலும், துக்கமும், தரும சங்கடங்களும் இராமனைத் தொடர்ந்து வந்தன' என்றே இராமனின் பிழையை இராஜாஜியவர்களும் எடுத்துரைப்பார்!

ஸ்ரீராம விண்ணகரமாம் கள்ளிப்பட்டி கம்பன் கழக 1983ம் ஆண்டு வெள்ளி விழா மலரில். திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் ''ஒருபோதும் மனைவியின் வார்த்தையைக் கேளாத வீரராகவர் மனைவியின் சொல்லைக் கேட்டு வில்லைத் தூக்கி மான்பின்னே சென்றார். வில்லையா தூக்கினார்? இல்லை பழிச் சொல்லைத் தூக்கினார்'' என எழுதுகின்றார்.

2. சீதையை இராவணன் தூக்கிச் சென்றான். வழியில் சடாயு போர் தொடுத்தான். தேர்த்தடம் பற்றித் தேடிச் சென்ற இராம இலக்குவர் தகர்க்கப்பட்டு வீழ்ந்து கிடந்த வீணைக் கொடியைக் கண்டு சடாயு போர் செய்தமையை அறிந்தனர். வில், சூலம், புட்டில் முதலியன வீழ்ந்து கிடந்ததைக் கண்டனர்.

''சடாயுவோடு பொருதவர் பலர்'' 548/90

என, இராமன் அனுமானித்துக் கூறினான். இலக்குவனோ,

''தருவின் நீளிய தோள்பல தலைபல என்றால்,
பொருது தாதையை இத்தனை நெறிக் கொடுபோனான்
ஒருவனே, அவன் இராவணன் ஆம்'' 546/91

என உணர்த்தினான்! ஆக, இராமன் இந்த அனுமானத்திலும் பிழையுற்றான்.

## 13. இராமன் ஒரு சாதாரண மனிதனா?

'இராமன் ஓர் எளிய மனிதனா, என்ன? இப்பிழைகளையெல்லாம் அவன்மேல் சுமத்தலாமா?' என்று கேட்கத் தோன்றலாம்!

இராமன், திருமாலின் அவதாரமோ, அனைத்திற்கும் அப்பாற்பட்டவனின் அவதாரமோ, அவன் சிற்சில சூழல்களில் மட்டும் தன்னைஓர் அவதாரன் என உணர்ந்து, மறந்தவன் போல் நடந்துகொண்டான்! பிற சமயங்களில் எல்லாம் அவன் ஒருசாதாரண மனிதனாகவே நடந்துகொண்டான். அவனின்பற்பல செய்கைகள் அதனை உறுதிப்படுத்தும்!

''இராமனைப் பொறுத்தவரை ஒரு பெரிய தரும சங்கடம் இங்கே. இராமன் தன்னை என்ன தான் அவதார புருஷன் என்று இனங்காட்டிக் கொள்ளவில்லை என்றாலும் மனிதன் என்ற முறையிலுமே உயர்ந்த

புருஷன்; உத்தமன்; தண்டக வனத்து முனிவர்கள் ஆசிபெற்றவன்; விராதன், கவந்தன், அகலியை ஆகி யோர்க்கு சாப விமோசனம் நல்கிய புனிதன்; சடாயு, சபரி, குகன், அனுமன் போன்றாரின் அன்பு நிறையப் பெற்றவன். ஆகவேதான் தவறிழைத்ததாக நேரிடையாக உலகறிய, அறிவித்து விடவும் முடியாது'' என்று பழ, பழநியப்பன் அவர்கள் எழுதுவார் (31) என்றாலும் தவறுகள் தவறுகள் தாமே!

## 14. இராமனுடைய உணர்ச்சிவசப்பட்ட வேறு பிழைகள்!

1. மிதிலையில் கன்னி மாடத்தில் நின்ற சீதையைக் கண்டான், இராமன். இரவு படுக்கைக்குச் சென்றவன் ஓர் எளிய மனிதன் போல், காதலுக்காளாகி, அக்கன்னியை நினைந்து நினைந்தே சோர்ந்திடலானான்!

> ''முனியும் தம்பியும் போய், முறையால் தமக்கு
> இனிய பள்ளிகள் எய்தியபின், இருட்
> கனியும் போல்பவன், கங்குலும் திங்களும்
> தனியும், தானும், அத்தையலும் ஆயினான்'' (99/139)

என்பார் கவிச்சக்கரவர்த்தி!

(2) மாரீசனும் மாய மானைக் கண்டனர். இலக்குவன் எடுத்துச் சொல்லியும் அது மாயமான் என்பதை ஒப்புக் கொள்ளவில்லை, இராமன். போகட்டும்; சீதை, இராமன் மானைப் பிடித்துத் தர விரும்பினாள்; அப்பொழுது இலக் குவன், தான் சென்று பற்றுவதாகக் கூறினான். உடனே, ஒரு சாதாரண மனைவியைப் போலே,

> ''ஆயிடை அன்னம் அன்னாள், அமுது உகுத்தனைய செய்ய
> வாயிடை, மழலை இன்சொல் கிளியினின் குழறி,மாழ்கி

நாயக! நீயே பற்றி நல்கலை போலும்' என்று
சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சீறிப் போனாள்''
520/67

'உனக்கென்ன? யார் பிடித்தால் என்ன? அந்த மான் தானே வேண்டும்!' என்று இராமன் சொல்லாமல், மனைவியின் சொல்லுக்குக் கட்டுப்பட்ட ஓர் எளிய மனிதன்போலே, இலக்குவனை நிறுத்தி விட்டுத் தானே மானின் பின்னால் ஓடினான்!

''போனவள் புலவி நோக்கி, புரவலன்! பொலன் கொள்தாராய்!
மான்இது நானே பற்றி, வல்லையின் வருவென், நன்றே
கான்இயல் மயில் அன்னாளைக் காத்தனை இருத்தி' என்று,
வேல்நெடு சரமும், வில்லும், வாங்கினன் விரைய ஆற்றான்'' (520/68)

எனப் படம் பிடித்துள்ளார், கவிச்சக்கரவர்த்தி!

(3) பரதன் வந்தான்; தந்தை இறப்பினை இராமனுக்குத் தெரியப்படுத்தினான். அவ்வளவுதான்!

''வானின் உம்பரான்'- (386/58)

ஆகிய இராமன்,

''கண்ணொடு மனம்சுழல் கறங்கு போல ஆய்
மண்ணிடை விழுந்தனன்.''

சற்றே தெளிந்தான். தந்தை இறப்பிற்காகப் பெரிதும் புலம்பினான்!

ஈன்ற தந்தையின் இழப்பினால் மனத்துயர் உறுவது பாசத்தின் அடிப்படையில் இயற்கையே! ஆனால், அளவின் மீறி உணர்ச்சி வசப்படுவதும், ஒப்பாரி வைத்துப் புலம்பி அழுவதும் ஒரு சாதாரண மனிதனுக்கும் குறைந்தவன் செயல்களே!

(4) கானகத்தில் நீர் தேடச் சென்ற இலக்குவன் அயோமுகி என்னும் அரக்கியால் தூக்கிச் செல்லப்பட்டான்; அதனால் இலக்குவன் வெகு நேரம் திரும்பி வரவில்லை. வியந்து, சற்றே பயந்து, தம்பியைத் தேட வேண்டிய இராமன்,

''தள்ளா வினையேன் தன் ஆர்உயிர் ஆய்,
உள்ளாய்! ஒருநீயும் ஒளித்தனையோ?
பிள்ளாய்! பெரியாய்! பிழை செய்தனையால்;
கொள்ளாது உலகு உன்னை; இதோ கொடிதே!''
(564/68)

''என்னைத் தரும் எந்தையை, என்னையரை,
பொன்னைப் பொருகின்ற பொலங்குழையாள்
தன்னை, பிரிவேன்; உளென் ஆவதுதான்
உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவோ?'' ((565/70)

என்றெல்லாம் புலம்பி அழ ஆரம்பித்து விட்டான். ஓர் எளிய மனிதனைப் போலானான்! அதுமட்டுமா! தம்பியைக் காணாது இறக்கவும் துணிந்து தற்கொலைக்கு ஆயத்தமாகி விட்டான், ஒரு கோழையைப் போலே!

(5) கானகத்தில் கவந்தன் கைக்குள் அகப்பட்டனர். இராம இலக்குவர், கவந்தன் இருந்த காட்சியைக் கண்டும், அவனுடைய வாயைப் பார்த்தும் ஐயுற்றுப் பலவாறு இருவரும் எண்ணியது சரி. ஆனால், 'பழி சுமந்து வாழேன்'' என்று இராமன் கூறி,

''ஈன்றவர் இடர்ப்பட, எம்பி துன்புற
சான்றவர் துயருற, பழிக்குச் சார்வுமாய்த்
தோன்றலின், என் உயிர் துறந்தபோது அலால்,
ஊன்றிய பெரும்படர் துடைக்க ஒண்ணுமோ?''
(572/23)

என்றெல்லாம் எளிய மனோ பாவனையில் அரற்றி நின்றான்!

(6) பம்பைப் பொய்கையின் தோற்றத்தையும், ஆங்கு நிகழ்ந்த செயல்களையும் கண்டான், இராமன்! தன் மனைவி யின் நினைவுகள் வருவது எவர்க்கும் இயற்கையே. ஆனால் தன்னுடனேயே திருமணம் ஆகியும், தனக்குத் தம்பியாய் அன்றித் தொண்டனாய் வந்திருக்கும் இலக்குவன், தன் மனைவியைத் துறந்து வந்திருத்தலையும் எண்ணிப்பாராது.

''பஞ்சு பூத்த விரல், பதுமம் பவளம் பூத்த அடியாள்;என்
நெஞ்சு பூத்த தாமரையின் நிலையம் பூத்தாள், திறம் பூத்த
மஞ்சு பூத்த மழை அனைய குழலாள், கண்போல் மணிக்குவளாய்!
நஞ்சு பூத்ததாம் அன்ன நகையால் என்னை நலிவாயோ?
595/31

என்றெல்லாம் வாய்விட்டு அரற்றிப் புலம்பினானே, அது அவனைத் துன்னும் சாதாரண மனித நிலைக்குக் கொண்டு வந்து விட்டது!

(7) சுக்கிரீவனோடு நட்புக் கொண்டாகி விட்டது. கார் காலம் வந்தது. இராமனுக்கு மறுபடியும் தன் மனைவி யின் மயக்கம் வந்து விட்டது! அது இயற்கை! உடனே, முகில் முதலியவற்றோடு புலம்பத் தொடங்கி விட்டான். அதுவும் இலக்குவன் தேறுதல் மொழிகள் எடுத்துரைத்துச் சாந்தப்படுத்த வேண்டியதாயிற்று என்றால், இராமன் சாதாரண மனித உணர்வுகளுக்கும் ஆளாகியிருந்தான் என்பதைக் காட்டுகின்றது.

''காலம் நீளிது, காரும் மாரியும்
வந்தது என்ற கவற்சியோ?
நீலமேனி அரக்கர் வீரம்
நினைந்து அழுங்கிய நீர்மையோ?
வாலிசேனை மடந்தை வைகு இடம்
நாடவாரல் இலாமையோ?
சாலும் நூல் உணர் கேள்வி வீர!—
தளர்ந்தது என்னை?—தவத்தினாய்?''
663/65

என்றெல்லாம் இளையவன் கேட்கும் அளவிற்கு எளியவன் ஆகி விட்டான், இராமன்!

(8) கூதிர் காலம் வந்தது; இராமன் மறுபடியும் விரக தாபத்தில் சாதாரண மனிதனுய் வெந்து புலம்புகின்ருன். இலக்குவன் மறுபடியும் தேறுதல் மொழிகள் செப்ப வேண்டியது ஆயிற்று!

(9) குறிப்பிட்ட கால எல்லையில் சுக்கிரீவன் தன் சேனையோடு இராமன் உதவிக்கு வரவில்லை. இராமனுக்கு அதனுல் சினம் மூள்வது இயல்பே!

ஆனுல், வாலி கேட்ட வரத்தையும் மறந்து,
''வெம்பு கண்டகர் விண் புகவேர் அறுத்து
இம்பர் நல்அறம் செய்ய எடுத்த விற்
கொம்பும் உண்டு; அருங்கூற்றமும் உண்டு; உங்கள்
அம்பும் உண்டு என்று சொல்லு, நம் ஆணையே'' 672[4

என்று பயமுறுத்திக் கூறியது ஒரு சாதாரண மனிதனின் சினத்தின் எல்லையைக் காட்டி நிற்கின்றது!

(10) போர்க்களத்தில் இந்திரசித்து நாகபாசம் ஏவினுன்; அஃது இலக்குவனைப் பிணித்தது. இதனைக் கண்டான் இராமன்; பெருந்துயர் கொண்டான்.

உடனே, வீடணனை,

''எடுத்தபோர், இலங்கை வேந்தன் மைந்தனேடு இளைய கோவுக்கு
அடுத்தது என்று, என்னை வல்லே அழைத்திலே, அரவின் பாசம்
தொடுத்தகை தலையினேடும் துணித்து, உயிர்குடிக்க! என்னைக்
கெடுத்தனை வீடணு! நீ'' 1283[226

என்று வைதான்.

'கெடுத்தனை' எனச் சொன்னவன், 'கேடு இலாதான்! எனக் கம்பர் அருமையாகக் குறிப்பிடுவார்! இந்தக் குறிப்பு

எதனைக் குறிக்கின்றது? இராமன் அவதார புருஷன் ஆன றைல் அவனுக்கு கேடு என்பது இல்லையென்றாலும், கேடுள்ள சாதாரண மனிதனைப் போல் இராமன் தன்னைப் பாவித்துக் கொண்டான் என்பதனை அன்றோ!

(11) மீண்டும் பிரம்மாத்திரத்தால் கட்டுண்டு கிடந்த இளவலைக் கண்டு புலம்பி நின்றான், வெகு எளியவனாய்; தேவர்கள் அவனுக்கு உண்மையை உணர்த்தித் தேறுதல் கூற வேண்டியதாயிற்று!

(12) (மாயா) சீதையை இந்திரசித்து வெட்டி வீழ்த்தி னான் என்ற செய்தியை அனுமன் இராமனிடம் கூறினான், முற்றுமுணர் மாலவனும் இராமன் சாதாரண மனிதன் போலே துயர் உற்றான். இதனை

> "சித்திர தன்மை உற்ற சேவகன் உணர்வு தீர்ந்தான்.
> மித்திரர் வதனம் நோக்கான், இளையவன்
> வினவப் பேசான்,
> பித்தரும் இறைபொருதபேர் அபிமானம் என்னும்
> சத்திரம் மார்பில் தைக்க, உயிர் இலன் என்னச்
> சாய்ந்தான்" 1385/58

என்று கம்பர் படம் பிடித்துக் காட்டுவார்!

(13) "செய்யுளில், உள்ளம் திடீர் என்று பொங்கிய காரணத்தால் தன்னை ஒருமைப்படுத்தி, 'எனக்கு' என்று சொல்லநேர்ந்தது ராமனுக்கு உள்ளத்தின் வேகம் கொஞ்சம் குறையவும் விஷயம் தெரிந்தவனாய் லக்ஷ்மணனையும் சேர்த்து, 'எம்மை' என்று சொல்லுகின்றான்" என்று குறிப் புரை எழுதுவார் டி. கே. சி. அவர்கள்,

> "என்ற அக்குரங்கு வேந்தை" 606/26
>
> "மற்றினி உரைப்பதென்னே" 606/27

என்ற பாடல்களுக்கு விளக்கம் கூறும்பொழுது (450)

இஃது இராமன் உணர்ச்சியின் பாற்பட்ட சாதாரண மனிதனாய் நின்றான் என்பதற்குச் சான்று!

''இராமன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத, உயர்ந்த வீரனே என்பது உண்மை. ஆனால், அவன் 'கூட்டொரு வரையும் வேண்டாதவன்' அல்லன்'' என்றும் (42) ''மனிதனால் முடியாத அற்புதத்தைச் சாதிக்கும் வல்லமை என்பது இராமனது இயல்பாக அமையவில்லை, மனிதரில் சிறந்தோனாகவே இராமன் உருப்பெற்றுக் காட்சி தருகிறான், செயல்படுகின்றான்'' என்றும் (43) திரு. எஸ். இராம கிருஷ்ணன் குறிப்பிடுகின்றார்.

இப்படியாகப் பற்பல காட்சிகள் இராமன் சாதாரண மனிதனைப்த்தான் வாழ்ந்தான் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன! சாதாரண மனித வாழ்வில் குற்றம் புரிதல் இயல்பே! இயல்பிற்கு மாறாக இராமன் பிழையே இல்லாதவன் என்று வாதிடத் தேவையே இல்லை!

''ஆனால் இப்படிச் சொல்லுகின்ற கம்பர், இராமன் அறந் தவறவில்லை என்பதை நிலைநாட்டாவிட்டால் தோற்றவனுவான் என்பதை நாம் மறந்து விடக்கூடாது'' என்பார் இரத்தினஞ் செட்டியார் (61)

அப்படியானால், காவிய நாயகன் என்ற பாங்கில் இராமனின் குற்றத்தை மறைக்க முயலும் கம்பரின் சொல் வன்மைக்கு நாம் இடம் கொடுத்து மனச் சாட்சிக்கு விரோதமான கருத்தை உருவாக்கிக் கொள்ள வேண்டுமா?

இனி, அமரர் மூதறிஞர் இராஜாஜியவர்களின் நோக்குரையைக் காண்போம்.

''சரியான யோசனை செய்யாமல் அவசரமாக பிரதிக்ஞை செய்துவிட்டபடியால் தவறுவதற்கில்லை என்கின்ற ஒரு வாதம்தான் ராமனுடைய குணங்களுக்கு இசைந்த பேச்சு. மற்றவையெல்லாம் பொருளற்ற வாதம். அது ராமனுடைய பெருமையைக் குறைக்கிறதேயொழியக் குற்றத்துக்த சமாதானம் ஆகாது'' என்று தெள்ளத் தெளிய எழுதிவிட்டார்;

''தன்னினும் சிறந்த இராம பக்தனே இல்லாத கோவிந்தராஜா அவர்களே, 'வாலி இராமனால் தவறான முறையில் கொல்லப்பட்டான்; அதற்குக் காரணம் சுக்ரீவனுக்குக் கொடுத்த வாக்குறுதி என்பார்'' என சாஸ்திரிகள் எழுதுவார். (147)

## 15. புதியதோர் நோக்கு!

வாலிவதை இராமன் முழு மனிதனாய் வளர்ந்தபின் ஏற்பட்டது. இத்த நிகழ்ச்சிக்கு இராமனின் இளம் பிராயத்தில் ஏற்பட்ட ஒரு மனக் கசப்பே காரணமாய் அமைந்திட்டது எனவும் காண முடிகின்றது.

வேள்வி முடித்தபின் விசுவாமித்திர முனிவருடன் தன் தம்பியும் உடன்வர இராமன் மிதிலை நோக்கிச் செல்கின்றான் ஆசாவின் ஆசையின் வண்ணம். மிதிலையின் மதிற்புறத்தே கல்லாய்க் கிடந்த அகலிகை, இராமனின் கால்துகள்பட்டு முன்னுருப் பெற்றுப் பெண்ணாய் எழுந்து நின்றாள்! இராமன் அவள் வரலாறு முழுவதையும் முனிவரிடம் கேட்டுணர்ந்தான்.

''தீதுஇலா உதவிசெய்த சேவடிக் கரிய செம்மல்,
''கோதுஇலாக் குணத்தான் சொன்ன பொருள் எலாம் மனத்தில் கொண்டு
மாதவன் அருள் உண்டாக வழிபடு; படர் உறாதே,
போது நீ அன்னை!' என்ன, பொன் அடி வணங்கிப் போனாள்'' (79/25)

என்று கம்பர் பாடுகின்றார்.

இப்பாடலில், 'சொன்ன பொருள் எலாம் மனத்தில் கொண்டு,' என்ற சொற் கோவை ஆழமான பொருள் பொதிந்தது. 'அன்னை அனையாட்கு' இந்த இழி செயல் ஏற்படக் காரணமானவன் இந்திரன் என்பது இராமனின் மனத்தில் ஆழப் பதிந்து விட்டது. எனவே அவனைத் தண்டிக்கவும் அப்பொழுதே முடிவு கட்டி விட்டான். இந்த முடிவை எவ்வாறு நாம் உணர முடிகின்றது?

நடந்தவற்றிற்கு ஆறுதல் கூறி ஒருவரை அவருடைய இருப்பிடத்தில் சேர்க்க அவ்வாறுதல் கூறுபவன் 'நடந்தது நடந்து விட்டது,' இதற்காக நீ இனிவருந்த வேண்டாம்; உன் மேல் சினங் கொண்டவரைத் தாழ்ந்து வணங்கி இணைந்து விடுவாயாக. அதற்கு உறுதுணையாக நானும் உன்னுடன் வருகிறேன்' என்று சொல்வதுதான் இயற்கை.

ஈண்டு, இராமன் உட்பட மூவரும் அகலிகையோடு சென்று அவளைக் கௌதமரிடம் சேர்க்கப் போகப் போகின்றார்கள். என்றாலும் இராமன், 'போது நீ அன்னை!" என்கின்றான். காரணம் இந்நிகழ்ச்சிக்கு அடிப்படைக் காரணனாய் நின்றவன் மேல் கொந்தளித்த கோபம், அவனை அங்கேயே கண்டு தண்டிக்க வேண்டும் என்ற ஆண்மை வீரம் உள் மனத்தில் ஆர்ப்பரித்ததனால் 'போவேம் யாம், அன்னை!' என்னாது 'போது நீ அன்னை!' என்றான்.

ஆகவே, இந்திரனை எங்கு காணினும்-ஒறுத்தல் வேண்டும் என்று இராமன் முடிவெடுத்து விட்டான்.

எனவே, சுக்கிரீவனின் அண்ணன் வாலி என்றதும், இராமனாகிய திருமால் அவனைத் தண்டிப்பது என்று தீர் மானித்து விட்டான். அதற்கேற்றாற் போல் வாலி வேடத் திருந்த இந்திரன் கூறு அதே கற்பழிப்புப் பிழை செய்து விட்டான் என்று அவன் முடிவெடுக்கும் சூழலை உண்டாக்கி விட்டான். 'ருமை' கதையை அனுமன் பக்குவமாக இடனும் காலமும் அறிந்து கூறி!

அப்படியானால், சுக்கிரீவன் நட்பிற்கு முன்னமேயே இராமன் இந்திரனைக் கண்டு விட்டானே, சரபங்கனின் குடிலில்! அப்பொழுதே தண்டித்திருக்கலாமே என்ற நியாயமான வாதம் எழுதுவது இயற்கையே.

இந்திரன் வந்திருத்தலை நேரிற் கண்டிலர் இராமன் முதலாய மூவரும். அஃது இரவு நேரம்.

"குரவம், குவி கோங்கு, அலர் கொம்பினொடும்,
இரவு, அங்கண், உறும் பொழுது எய்தினரால்" 419/2

அந்நேரத்தில் இந்திரன் ஆண்டு வர, சரபங்கன் அவனை வரவேற்று, 'வந்த காரியம் என்ன?' என வினவலுற்றான். அதற்குச் சரபங்க முனிவரைப் பிரம்மலோகத்திற்கு இந்திரன் அழைக்க, அவர் மறுக்க, இருவரும் சிறிது நேரம் உரையாடிக் கொண்டிருந்தனர். இறுதியாக முனிவர்,

> ''சிறுகாலை இலா, நிலையோ திரியா,
> குறுகா, நெடுகா, குணம் வேறுபடா,
> உறுகால் கிளர்பூதம் எலாம் உகினும்
> மறுகா, நெறி எய்துவென்-வான் உடையாய்!''

என்று சொல்லி முடித்தார். (421/20)

> ''என்று, இன்ன விளம்பிடும் எல்லையின்வாய்,
> வன் திண் சிலை வீரரும் வந்து அணுகா,
> ஒன்றும் கிளர் ஓதையினால் உணர்வார், (421/21)
> நின்று, 'என்னை கொல் இன்னது?' என நினைவார்
>
> ''கொம்பு ஒத்தன நால் ஒளிர் கோள் வயிரக்
> கம்பக் கரி நின்றது கண்டனமால்,
> இம்பர், தலைமாதவர்பால், இவன் ஆம்
> உம்பர்க்கு அரசு எய்தினன்' என்று உணரா'' (422/22)

என்று இந்திரன் வந்திருத்தலை இராமன் உய்த்து உணர்ந்ததாகக் கம்பர் தெரிவிக்கின்றார்.

இவ்வாறு உய்த்துணர்ந்ததும் இளையனும் இல்லாளும் கூட வர இராமன் அந்த இடத்திற்குச் சென்றானா? இந்திரன் மேல் அவனுக்கிருந்த ஆத்திரம் உந்த அவன் தனித்து அங்கு சென்றான்.

> ''மானே அனையாளொடு மைந்தனை அப்
> பூநேர் பொழிலின் புறமே நிறுவா,
> ஆன்ஏறு என, ஆள்அரி ஏறு இது என
> தானே அவ் அகன் பொழில் சாருதலும் (422/23)

என்னும் கம்பரின் பாடல் மூன்றும் அடியில் அமைந்த சொற்றொடர்கள்தாம் இராமனின் சினச்சிந்தையைத் தெரிவிக்கின்றன. சினத்தின் கொந்தளிப்பு இருந்தால்தான் ஒரு

முனிபுங்கவரின் ஆசிரமத்தில் நடக்கும்பொழுது—அதுவும் அவர் வேருெருவருடன் பேசிக் கொண்டிருக்கும் சூழலுக்கு நடந்து போகும்பொழுது—அந்த இரவு நேரப் பார்வையிலும், இராமனின் உருவத்தைக் கம்பர். 'ஆண் ஏருய், ஆள் அரி ஏருய்க் கண்டு' நமக்கு வர்ணித்துக் காட்டுகின்ருர்!

சென்ற வேகத்தில் இராமனுகிய திருமால் இந்திரனை என்ன செய்தான்? ஒன்றும் செய்யவில்லையே! ஏன்?

அகலிகை சாப விமோசன நிகழ்ச்சியை இந்திரனும் அதுவரை அறியாமல் இருந்திருக்க முடியாது. அதனுல் இராமனுகிய திருமாலின் மனேநிலை என்னவாக இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டான்; அஞ்சினுன்; சரணுகதி அடைபவனுய் இராமனைத் தொழுதேத்தத் துவங்கி விட்டான்.

''காணு, மனம் நொந்து கவன்றனனுல்,
ஆண் நாதனை, அந்தணர் நாயகனை,
நாள் நாளும் வணங்கிய நன்முடியால்,
தூண் ஆகிய தோள் கொடு அவன் தொழுவான்''
(422/25)

இப்பாடலின் இரண்டாம் அடியில் வரும் சொற்ருெடர்கள் இந்திரன், இராமனின் மனநிலையைப் புரிந்து கொண்டான் என்பதை வெளிப்படுத்தி நிற்கின்றன.

''ஆண்நாதனை''—தலைவன் என்று காட்ட 'நாதனை' என்றலே சாலும். ஆனுல் 'ஆண்' என்ற அடைமொழியை ஏன் இட்டார்? இந்திரன் தன் காம உணர்ச்சியால் அகலிகையிடம் ''ஆண்மை'' அற்ற தன்மையனுய்க் கயமைத் தனம் புரிந்து அவளின் கற்பைக் கெடுத்ததை அவன் உள்ளுணர்வு எடுத்துக் காட்டி நின்றது என்பதைக் குறிக்க வந்த அடைமொழியே அஃது!

இனி, அகில உலக நாதனை இராமனை, 'அந்தணர் நாயகன்' எனக் குறிப்பிட்டதேனே?

''அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ் வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டு ஒழுகலான்''

என்பதன்றோ திருமறை. ஆக, அகலிகையினிடம் செந்தன்மை பூண்டு ஒழுகாத, அறமற்றவன் இந்திரன் என்பதனுல் இராமன் அவனை ஒறுக்க நியாயம் உளது என்று விளக்கவே அச்சொற்றொடர் ஏற்புடைத்தாய் ஈண்டு அமைந்தது என உணர்கின்றோம்!

அப்படிப்பட்ட 'ஆண் நாதன்,' 'அந்தணர் நாயகன்' மனோநிலையை உணர்ந்து கொண்ட இந்திரன், அந்தச் சினம் சற்றே தணியும் வண்ணம் இராமனை ஏத்தலுற்றான்!

''... ... ... ... ... ... ... ... காப்பானைக் காணு,
அவசம் ஆய், சிந்தை அழிந்து, அயலே நின்றான்
அறியாதவன்போல,அறிந்தஎலாம் சொல்வான்'' 422/26

என்பார் கம்பர். அப்படி ஏத்திப் போற்றி இராமனைச் சற்றே சாந்தப்படுத்தியவற்றுள்

''... ... ... ... ... ... ... ... ... ... ...பகையால்
அலைப்புண்டு அடிமேல் அடிபோற்ற, அந்நாள்
ஈந்தவரம் உதவ எய்தினையே! எந்தாய்!'' (422/27)

என்பதும் ஒன்று.

''ஐயனே, என் பிழை அறிந்து என்மேல் சினங் கொண்டு என்னை ஒறுக்கும் மனோநிலையில் தாங்கள் இருப்பதை உணர்கின்றேன். ஆனுல், தாங்கள் இத்தரையில் வந்துள்ளது அன்று தேவர்களுக்கு அளித்த வரத்தின்படி இராவண வதத்திற்காக அன்றோ? இப்பொழுதே அகலிகையின் காரணமான என் பிழைக்காய் என்னை ஒறுத்தீர்களானுல் தங்கள் மனோநிலையில் மாறுதல் ஏற்பட்டு விடப் போகின்றது?'' என்று மறைமுகமாகச் சொல்லும் பொருள் காட்டி அவ்வாறு புகன்றான்!

அப்பாடலில் மட்டுமன்று. பின்வரும் பாடல்களிலேயும் இராமனை, 'எந்தாய்', 'எந்தாய்' எனக்கூறி இராமனின் மனத்தை இளகச் செய்கின்றான்!

இனி அடுத்த பாடலிலே,

''தேவா! இங்கு இவ்வோ நின் தொன்று நிலை என்றால்,
சிலை ஏந்தி வந்து, எம்மைச் சேவடிகள் நோவ,

காவாது ஒழியின், பழி பெரிதோ? அன்றே;
கருங்கடலில் கண்வளராய்! கைம்மாறும்
உண்டோ?'' 423/28

எனச் செப்புகின்றான்.

அதாவது, நான் மேலே குறிப்பிட்ட வண்ணம் நீ உன் மனம் மாறி, இராவண வதம் செய்யாது விட்டிடின் கருங் கடலில் துயில்வதை விட்டு எழுந்து வில்லேந்தி வந்தும், தேவர்களைக் காவாத பழி பெரிதாய் உன்னை சாரும்! அதனால், என்மேல் இருக்கும் சினம் தணிந்து அச்சினத்தினை இராவண வதத்தில் கூட்டிக் கொள்வாயாக' என சினத்தின் திசையைத் திருப்புகிறான்!

அடுத்த பாடலின் இறுதி அடியாக

''அவுணர்கள்தாம் நின் அடிமை அல்லாமை உண்டோ?''
எனக் கேட்கின்றான். 423/29

அதாவது அவுணர்கள் என்றதால் 'நான் எப்பொழுதும் நின் அடிமைதானே. என் விஷயத்தை எப்பொழுதாவது நீ பார்த்துக் கொள்ளலாம். இப்பொழுது வந்த காரியம் முடியட்டும்' என்று தன் விஷயத்தை ஆறப் போடுகின்றான். மேலும்,

''............நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி; அயலாரைக் காய்தி;
நிலை இல்லாத் தீவினையும் நீதந்தது அன்றே,'' 423/30

என்கின்றான்.

அதாவது 'நின் செய்கையால் நன்மை ஏற்பட வேண்டும் என்று காத்து நிற்பவர்க்கெல்லாம் முதலில் ஏற்றது செய்க; பின் என் போன்று பிழை செய்த அயலவரைச் சினந்து தக்கது செய்க. ஆனால், அப்பிழைகளை இழைக்கச் செய்பவனும் நீயே அன்றோ?' என 'நன்றே செய்வாய், பிழை செய்வாய், நானோ இதற்கு நாயகனே?' என்ற பாங்கில் ஒரு வினாவை விடுத்துத் தன் பிழைக்குத்தானே முழுப் பொறுப்பாளியல்லன் என்று வேதாந்தம் பேசித் தப்பிக்க அடிகோலுகின்றான்!

இவ்வாறெல்லாம் பலவாருய் மறைபொருள் விளங்கப் பேசிச் சென்ருன் இந்திரன்.

''இன்னன பல நினைந்து, ஏத்தினன் இயம்பா,
துன்னுதல் இடை உளது என நனி துணிவான்,
தன் நிகர் முனிவனை, 'தர விடை' என்று,
பொன் ஒளிர் நெடு முடிப் புரந்தரன் போனன்'' 424/32

இவ்வாறு இந்திரன் இராமனிடம்கூட விடைபெருமல் 'விட்டால் போதும்' என அகன்று விட்டான். குற்றமுள்ள நெஞ்சம் குறுகுறுக்கும் அல்லவா? அந்த நிலையில் சரண் அடைந்தான் இந்திரன், இராமனைத் துதிப்பான் போலவே! இந்த இப்பிறவியில் இராமன் சரணுகத வத்சலன் ஆயிற்றே! அத்தத்துவத்தை மீறி இந்திரனைத் தண்டிக்க முடியுமா அந் நிலையில்! அஃதன்றியும் அவர்கள், சந்தித்துக் கொண்டது இருவரையும் விருந்தினராக ஏற்றுள்ள முனியுங்கவரான சரபங்கன் குடிலில்; அவரோ, பிரம்மலோகமும் வேண்டா என்று, கற்பகாலம் பல அருந்தவமிருந்து, இராம தரி சனம் கிட்டியதும் எரிபுக்கு,

''அந்தம் இல் உயர்பதம் அடைதலை முயல்வார்''

ஆக அந்த இடத்தில் இந்திரனைத் தண்டித்தலும் தகாது என்று பொறுத்துக் கொண்டான் இராமன்.

இந்திரன் செய்த இந்த சமயோசிதச் செய்கையால் 'வாலி' இந்திரன் கூறு என்றறிந்ததும் இராமன் எச்சரிக்கை கொண்டுவிட்டான். வாலியின் முன் சென்ருல், மறுபடி யும் இந்திரனின் கூறு சரணுகதித் தத்துவத்தில் தன்னை ஆட் படுத்திக் கொண்டு விட்டால், தான் உற்ற எண்ணம் கை விடப்படவேண்டும்; அது குற்றவாளியை தண்டிக்காத பிழைக்குத் தன்னை ஆளாக்கி விடும் என்று கருதி மறைந்து நின்று அம்பு எய்தான்.

அதுவும் தன்னை நட்பாகக் கொண்டு தன் அண்ணனுகிய வாலியை எதிரியாகக் கொண்டும் போர் செய்து நின்று சுக்கிரீவன் இருந்த சூழலில், என்ருலும், வாலி தேவர் தலைவன் இந்திரனின் கூறு ஆயிற்றே; அதனுல் அவன் புரிந்த

வாதங்களின்போது இராமன்தான் திருமாலே எனக் காட்சி தந்து அவனை வானுலகிற்கும் அப்பால் உலகிற்குச் செலுத்தி உய்வித்தான் எனக் காண்கின்றோம்!

இராமனின் அந்தரங்கக் காரணத்தை அறிந்திராத இலக்குவன் வாயால் மறைந்திருந்து அம் பெய்த காரணமாய்;

''முன்பு, நின்தம்பி வந்து சரண்புக, 'முறை இலோயைத்
தென்புலத்து உய்ப்பென் என்று செப்பினன், செருவில், நீயும்
அன்பினை உயிருக்கு ஆகி, அடைக்கலம் யானும்' என்றி
என்பது கருதி, அண்ணல், மறைந்து நின்று எய்தது'
என்றான்.''

எனப் பாட வைக்கின்றார் கவிச் சக்கரவர்த்தி!

இஃது இராமன் வாலி (யாகிய இந்திரன் கூறு) தன்னை அடைக்கலம் அடைதற்கு இடம்—கொடுத்திடல் ஆகாது என்று கொண்டிருந்த முடிவிற்கு ஏற்றாற்போல் அமைந்திருக்கக் கண்டு வியக்கின்றோம்!

வாலிவதைக் காட்சி பற்றிய விளக்கங்களை எழுதும் பொழுது அகலிகை இந்திரன் கதை பற்றிக் குறிப்பிட்டுள்ளவர் பி. ஸ்ரீ. ஒருவரே (53) அவரும்கூட, ''இராமவதாரத்தில் முதன்முதலில் அகலிகைக்கு அருள் செய்தபோது அவளை வஞ்சித்துக் கெடுத்தவன் இந்திரன் என்று கேட்டறிந்தான்· இந்திரன் (வாலி) இப்போதும் ருமையைத் தவறான முறையில் அனுவதித்தது அவன் சினத்தை மிகுவித்தது'' என்று மட்டும் எழுதுகின்றார். பிற்பகுதிக்கு ஆதாரமில்லை. அகலிகை நிகழ்ச்சிக்காகத் தான் இத்தண்டனை என்பது தெளிவு பெறவில்லை.

## 16. இராமன் தன் தவற்றைத் தானே உணர்ந்தானா?

இராமன் உத்தமன் ஆயிற்றே! உத்தமர்கள் தம் தவற்றை ஒரு நிலையில் இன்றேனும் வேறு ஒரு நிலையில் மனச்

சான்றுக்கு விரோதமின்றி உணர்ந்திடவே செய்வர்; அவ்வாறு தவறு நிகழ்ந்ததற்காக வருந்தவும் செய்வர்.

இராமன் தாடகை வதத்தில் மட்டும் வில்லறம் துறந்தான் என்பதன்று. அதுவாறைலும். ஆசானின் ஆணைக்கு அடங்கிய நிலையில் பிழைபட்டான். ஆனால் வாலிவதையில்! தன் மனமறிந்தே வில்லறம் துறந்ததாக, அவனே கூறுவதாகக் கம்பர் பாடியுள்ளார். சுக்கிரீவனிடம் இராமன்.

''இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை
இழந்தும் போரின்
வில் அறம் துறந்தும்; வாழ்வேற்கு இன்னன
மேன்மை இல்லாச்
சில் அறம்; புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு
நல் அறம் தொடர்ந்த அன்பின், நவை அற
நோற்பன் நாளும்'' 653/23

என்றே தன் வில்லறம் துறந்த செய்கையை ஒப்புக்கொள் கின்றான்.

தன் பிழையை உணர்ந்து அதற்காகத் தக்கவனிடம் மன்னிப்பும் கோருகிறான். யார் அந்தத் தக்கவன்? சுக்ரீவனா? அனுமனா? இல்லையே; இவர்கள் இருவரும் சேர்ந்து சாற்றிய குற்றங்கள் தானே வாலிவதை எனும் குற்றத்தைச் செய்ய இராமனைத் தூண்டின!

பின் யாரோ? அங்கதனே அந்தத் தக்கோன்! எப்படி? அவன் வீணில் தன் தந்தையை இழந்து நிற்கின்றான் என்பது ஒன்று மானுட நோக்கில். தெய்வீக நோக்கில் அங்கதனும், இறந்துபட்ட வாலியும் இந்திரனின் இருகூறுகளேயாவர் என்பதுவும் ஆகும்!

ஆகவே இராமன் அங்கதனிடம்

''பொன் உடைவாளை நீட்டி, நீ இது பொறுத்தி'' (646[:59)

என்று கேட்டுக் கொள்கின்றான்!

'அறத்தை நிலைநாட்ட வந்த அண்ணல் வாலிக்குத் தவறிழைத்து விடுகின்றான். தான் செய்த தவற்றை

உணர்ந்து அந்தத் தீங்கால் பெரிதும் பாதிப்பிற்கு உள்ளாகி, தந்தையை இழந்து விட்ட அங்கதனிடம் தன் செயலுக்கு, தவற்றுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகின்றான். அங்க தனிடம் உடைவாளை நீட்டி, 'நான் செய்த இச்செயலை நீ பொறுத்துக் கொள்' என்கின்றான். அதனால்தான் மனித வடிவிலிருந்தாலும், அறம் தலை நிறுத்த வந்த பரம்பொருள் ஆகையால், அப்பரம் பொருளும் தான் செய்த தீங்கிற்கு வருந்தும் உயர்ந்த பான்மையைக் கண்டே உலகம் ஏழும் ஏத்தின'' என்று திரு. பழ. பழநியப்பன் இதனைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார். (26)

அத்தோடு, 'வாலியின் நல்லாட்சியை நியாயமாகவோ, முறைப்படியோ சுக்ரீவன் பெறவில்லை. வன்முறையாலேயே பெற்றான் என்றும் சொல்லாமல் சொல்லி விடுகிறான். ஆக இங்கும்இராமன் குற்றமற்ற வாலியை முறையற்ற வழியில் கொன்றதாகவே ஒப்புக் கொள்கிறான்'' என்றும் எழுது கின்றார். (29)

ஆம், இராமன் வாயால்

''நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை, மற்று ஓர் தலைமகன் வலிதின் கொண்டால்,
அரும்புல நலனும் தீங்கும்'' 653/29

என வந்த பாடல் இராமன் தன் அவச் செயலை உணர்த்தியே நிற்கின்றதன்றோ?

'புதருக்குள் நின்ற இராமன் வாலியின் மார்பிலிருந்து குருதி கொட்டுவதைப் பார்த்தான். சுக்ரீவன் மூர்ச்சித்து விழுவதையும் பார்த்தான். தன்னைப் பற்றி வாலி சொல்லு கிற வார்த்தைகளும் காதில் விழுந்தன. 'அடடா! என்ன காரியத்தைச் செய்து விட்டோம்!'' என்று மனம் நொந்த வனாய்ப் புதரை விட்டு வெளியே வந்து புலம்பிக் கொண் டிருக்கிற வாலியை நோக்கி நடந்து போகிறான்' என்று மூல நூற்பாவில் இல்லாத ஒரு மனோபாவனைக் காட்சியைத் திரு டி.கே.சி. அவர்கள் காட்டுவார்! (497)

அது மட்டும் அன்று.

'ராமனது நீலமயமான திருமேனியில் வாலி ஈடுபடு கின்றான் என்பது தெரிகிறது. காரணம் ராமனது திவ்ய குணங்களில் முன்னமேயே ஈடுபட்டிருந்தது மட்டுமன்று; ராமனது முகத்தில் பரிவும் துன்பமும் ததும்பியிருந்ததை வாலி பார்த்துக் கொண்டதுதான்' எனக் குறிப்புரையும் எழுதி ராமனின் குற்ற மனோ நிலையை அவன் முகத்தில் படம் பிடித்துக் காட்டுவார், அவர். (498)

வட ஆர்காடு மாவட்டம், திருப்பத்தூர் கம்பன் விழா ஆறும் ஆண்டு மலரில் (1982) திரு பொ. சண்முகவேல் அவர்கள்,

''இராமன் திருமாலின் அவதாரமென சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ, வால்மீகி, ஆழ்வார், கம்பர் ஆகி யோரும் கருதுகிறார்கள். இவ்வாறு பலரும் கருதுகின்ற தெய்வத் தன்மை பொருந்திய இராமன் தான் செய்வது இன்னதென்று தவறென்று அறிந்தே செய்கின்றான்'' என்று எழுதுகின்றார். ஆனால் முடிவுரையாக,

''இவையனைத்தையும் நோக்குங்கால் நல்லவனாகிய குரக்கினத் தலைவனாகிய வாலியை—இராமன் மறைந்திருந்து அம்பெய்து கொன்றது விதியின் விளையாட்டே; இராமனின் விளையாட்டல்ல; எல்லாம் விதியின் விளையாட்டே!'' என எழுதுகின்றார்.

இந்த முடிவுரை ஏனோ? இராமனின் குற்றத்தை மறைக்கவா? இராமன் திருமாலின் அவதாரம் என்பதில் தனக்கு நம்பிக்கை இல்லை எனக் காட்டவா? விதிக்கும் விதி செய்யவல்ல இலக்குவனின் அண்ணன் இராமனுக்கு வாலியைக் கொல்லும் வலிமை இல்லை எனத் தான் ஐயப் படுவதாலா?பாவம்! இந்த ஆசிரியர் உண்மையை உணர்த்தி எழுதி விட்டு, தன் முடிவுரையால் இத்துணை கேள்விகட்கும் ஆளாகிட நேர்ந்தது அவர் 'விதி' போலும்!

1983ம் ஆண்டு கோவைக் கம்பன் மலரில் 'கம்பனின் நாடக முத்தாய்ப்பு' என்ற தம் கட்டுரையில் அருட்பா

அரசு எஸ். ஆர். தங்கவேலு அவர்கள், "இராமபிரானது பரத்துவத்தை எங்கெங்கு பேச வேண்டுமோ அங்கெல்லாம் பேசுகின்றான். அவனைச் சத்தியப் பொருளாக, நித்தியப் பொருளாக, பரமபத நாதனாக, பரிபூர்ணனாக முதலிலிருந்தே வெளிப்படையாகவே காட்டுகின்றான். வான்மீகம் இராமனை ஒரு நல்ல அரசனாகக் காட்டுகின்றது. ஆனால் கம்பன் இராமனை ஒரு பெருந் தெய்வமாகவே காட்டுகின்றான் தனது ஒப்பற்ற இராம காதையிலே" என்று திட்டவட்டமாக எழுதுகிறார்.

## 17. தீர்ப்பு

இதுகாறும் கண்ட முடிவுகள் : தயரதனுக்கோ, அவன் சந்ததியினருக்கோ கிட்கிந்தையின் மேல் ஆட்சி உரிமை இல்லை! தந்தை சொல் காக்க வனம் சென்ற இராமனுக்கு அரசுரிமை இல்லை. தவிர, அவன் தவ வாழ்வு மேற்கொள்ள வேண்டியவன்; அதனால் வாலியைத் தண்டிக்கும் அதிகாரமும் இல்லாதவன் ஆகிறான். வாலியின் மேல் சுமத்தப்பட்ட முதற் குற்றம் உளவியல் தத்துவத்தின்படி திருந்தக் கூடியதே. இரண்டாம் குற்றம் அறிவுசால் அமைச்சன் அனுமனால் கற்பனையாய் உருவாக்கப் பெற்றதே. மறைந்திருந்து அம்பெய்ய இராமனுக்கு அடிப்படை அவசியமே இல்லை. தான் திருந்த வாலிக்கு வாய்ப்பே அளிக்கப்படவில்லை. மானிட இராமன் வேறு பல பிழைகளுக்கும் ஆளாகியவனே. சிற்சில சமயங்களில் மட்டும், தான் அவதாரன் என்பதை உணர்ந்து மறைந்த இராமன், ஓர் எளிய மனிதனாகவே வாழ்ந்தான்! எளிய மனிதன் பால் குற்றங்கள் தோன்றுவது இயல்பே. இராமன் தன் அனுமான நோக்குகளிலும் பிழை புரிந்துள்ளான். வாலி இராமன் உரையாடலின் பிற்பகுதியில் ஏற்பட்ட வாலியின் மனமாற்றம், அவன் இராமனைத் திருமாலாய்க் கண்டு, தான் இந்திரனின் கூறு என்பதை உணர்ந்த நிலையில்தான் ஏற்பட்டது. அக்காட்சி அவன் தன் அகக்காட்சியினின்றும் மறையவும், அவன் பழைய வாலி நிலையை எய்தி இராமனிடம் பேசினான்

என்பன. இவற்றைத் தக்க "ஆதாரங்களுடனும்" காரண காரியங்களுடனும், அற நூலாகிய திருக்குறளின் தெளிவுரைகளுடனும், (வாலிவதை சரியென்பாரின் கூற்றுகளுக்குத் தக்க மாற்றுக்களுடனும்) விளக்கினோம்.

ஆக, நாம் இராமனை இரண்டு நிலைகளில் வைத்து ஆய்வோம்.

இலக்கிய உணர்வோடு இராமாயணத்தைப் பண்பட்ட மனத்து மனிதராய் நின்று காண்போம், காவிய நாயகனை இராமனைத் தயரத குமாரனை ஒரு மானுடனாகவே கொள்ள வேண்டும். அம்மானிட இராமனுக்கு குரக்கினக்கோ வாலியைக் கொல்ல எந்தவிதமான எல்லையும், அதிகாரமும். உரிமையும் இல்லை என்பதை மேலே குறிப்பிட்ட நோக்குரைக் கோவை விளக்கி நிற்கின்றது. எனவே இராமனின் 'வாலிவதை' குற்றத்தின் பாற் பட்டதே!

மற்றொரு நோக்கில் இராமனைத் திருமாலாயும் வாலியை இந்திரனின் கூறாகவும் காண்போம். தேவலோக வியவகாரத்தை இங்கு இப்பூவுலகில் மேற்கொண்டது நியாய ஸ்தல எல்லைக்குட்படாத ஒன்று என்பதால் பிழையுடைத்து.

'அகலிகை' என்னும் இப்பூவுலக மாதின் அடிப்படையால் இந்த நியாயம் எழுந்தது என்று உறுதியாகக் கொண்டாலும் அஃது பகிரங்கமாக மேற்கொள்ளப்படவில்லை.

எனவே, இதற்கும் தேவலோகமே ஏற்ற நீதிமன்ற இரகசிய எல்லையாகும்.

இந்திரன் இராவணனுடன் கூட்டுச் சேர்ந்த காரணத்தால் இராமன் அவனைத் தண்டிக்க வேண்டியதாயிற்று என்றால் அவர்களுடைய தோழமையை வெட்டி விட்டிருக்கலாம். அதற்காக வாலி நேரடியாக இராமனால் மறைவிலிருந்து அம்பெய்து கொல்லப்பட வேண்டிய அவசியம் இல்லை.

'வாலி உருமை' இணைப்புக் கதையை இராமனாகிய திருமால் நம்பவில்லையென்று விளக்கப்பட்ட நிலையில்

அகலிகையின் கற்பைக் கெடுத்ததற்காக இந்திரன் தண்டிக்கப்பட வேண்டியவன் ஆகின்றான், என்று கொண்டால் இந்திரனின் ஒரு கூறாகிய வாலியெனும் குரங்கைக் கொன்று விட்டது முழு தண்டனைக்குட்படாத பிழையேற்கின்றது. அதிலும் வாலியைக் கொல்வதுபோல் அம்பெய்துவிட்டு அவனுக்குத் தன் அருட்காட்சி தந்து வானுக்கும் அப்பால் உலகிற்குச் செலுத்தி உய்வித்தது திருமால் மனித குலத்தை திருப்திப்படுத்த நடத்திய ஒரு நாடகமேயன்றி, தேவர் தலைவனைத் தண்டித்ததாக அமையாது. எனவே, அந்த வகையிலும் திருமாலின் செய்கை ஒருபாற்கோடிய செயலாய் அமைந்து விட்டது.

''சடாயு, கஜேந்திரன் போன்றவர் நற்குண நற்செயல்களால் அடைந்த உயர்பதத்தைத் தவறு செய்த வாலிக்குத் தண்டனை மூலம் தந்து உயர்த்திவிட்டான் ஸ்ரீராமன். வாலி மோட்சம் அடைந்தான்'' என்பார் பி.ஸ்ரீ.(52) மோட்சம் அடையச் செய்வது இராமனின் தண்டனையென்றால் அஞ்சாது அனைவரும் அருவையான பிழைகள் செய்யத் தயங்கமாட்டார்களே!

மனிதனாய்ப் பிறந்த எவருமே பிழை செய்யாது வாழ இயலாது. சிறு பிழைகள் பெரியோரால் பொருட்படுத்தப் பட மாட்டா. மனச் சூன்றுக்குக் கட்டுப்பட்டுத்தான் செய்த பெரும் பிழைகளுக்காக ஒருவன் உணர்ந்து வருந்துவானேயானால் அவன் உண்மையில் மானுடனாய்--மகாத்மா காந்தியைப் போன்று மா மனிதனாய்—விளங்குவான்.

என்றாலும் கொலைக் குற்றத்திற்கு ஆட்பட்டவன் தண்டனை இன்றித் தப்ப முடியாது—தப்பக் கூடாது. எனவே, மூலமூர்த்தியே ஆனாலும் இப் பூமியின் மேல் நின்று செய்யும் காரியம் பிழைகள் கூடியவையாய் அமைந்து விட்டன எனத் தெளிகின்றோம்; ஆக அவ்வகையிலும் இராமனின் வாலிவதை பெரும் பிழையுடைத்தே!

ஆக, இராமன் குற்றவாளியே எனத் தீர்ப்பளிக்கப் படுகின்றது!

## 18. தண்டனை

'மானுடம் வென்றதம்மா' என்று கவிச் சக்கரவர்த்தி போற்றிப் புகழும் அளவிற்கு உத்தமனாய் வாழ்ந்து வழி காட்டியவனாய் இருந்தாலும் தான் எடுத்துக்கொண்ட மானிட வேடத்திற்கு ஏற்ப இராமன் சில சாதாரண பிழைகளுக்காளாகி, வாலிவதையில் குற்றவாளியே என்ற தீர்ப்புக்கும் ஆளாகி விட்டதால் அவனே அதனை உணர்ந்து வருந்திப் பேசிய நிலையில் அவனுக்கு ஆயுள் தண்டனை மட்டும் விதிக்கப்படுகின்றது.

ஆம், அவனை இவ்வுலகினின்றும் யாம் நீக்கிட, அதனையே ஆதாரமாய்க் கொண்டு, அவன் திரும்பச் சென்று பாற்கடலிடையே பணப் பணிப் பாயல் கொள்ளாமல் ஒவ்வொரு மனிதனின் நெஞ்சக் கன கற்சிறையில் இருந்து கொண்டு தன் அனுபவ நிகழ்ச்சிகளை அப்போதைக்கு அப் போது நினைவுபடுத்திப் பிறவிப் பிணியைப் போக்கும் மானுட தர்மத்தில் செலுத்தி, குற்றம் புரிவாரின் மனச் சாட்சியைக் கிளறிவிட்டு அவர்களைத் திருத்தி அவர்களின் ஆயுள் முடியும் பொழுது அவ்வான்மாக்களைத் தன் உடன் ஐக்கியப்படுத்திக் கொண்டு வெளியேறித் தன் இருக்கை சேர்வானாக.

தண்டனை புதிதன்று. முன்னம் விளக்கியது போலே வாலியைக் கொல்வது போல நடித்து வான் உலகிற்கும் அப் பால் உலகம் உய்வித்த இராமனின் (திருமால் அவதாரத் தின்) செயலைப் பின்பற்றியே யாமும் தண்டனையை வழங்கி யுள்ளோம்.

எல்லாம் வல்ல எம்பெருமான்—தானும் தண்டனைக்கு உள்ளானவன் போலே நின்று, உயிர்களுக்கெல்லாம் தண்ணளி காட்டி உய்விக்கட்டும்.

ஓம்: ராம்! ராம்! ராம்...



## ஆசிரியரைப் பற்றி

பி. சி. சிதாபதி—'குறளடிமை' சேலம் மாவட்டம் சங்ககிரி துர்கத்தில் (25-4-1926) பிறந்தவர். தந்தை யார் காலம் சென்ற கிருஷ்ணசாமி நாயுடு அவர்களும், தாயார் திருமதி. அங்கம்மா அவர்களும் பள்ளி ஆசிரியர் கள்.

இவர் சேலம் சந்திப்பில் தென்பிராந்திய இரயில் வேயின் நிர்மாணப் பிரிவின் பொறியியல் வல்லுனர் அலு வலக மேற்பார்வையாளராக (Office Supdt, Executive Engineers Office, S. Rly., Construction, Salem Jn.) பணி யாற்றி வருகின்றார்.

கடந்த சுமார் பதினைந்து ஆண்டுகளாக காரைக்குடி கம்பன் விழா உட்படப் பல்வேறு தமிழ் விழாக்களில் பங்கேற்று வருகின்றார். இவருடைய ஆய்வுக் கட்டுரை கள் அவ்வப் போழ்து பல்வேறு விழா மலர்களில் இடம் பெற்றுள்ளன.

இவருடைய திருக்குறள் தொண்டினைப் பாராட்டி ஆனந்த விகடனில் சுமார் பத்து ஆண்டுகளின் முன் 'சைக்கிளில் திருக்குறள்' என்ற தலைப்பில் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளார்.

பிற காண்டங்களையும் இதே நோக்கில் அலசிப் பார்த்துச் சுவை கண்டு விண்டிடும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டுள்ளார்.

---

அபிராமி பப்ளிகேஷன்ஸ்
307, லிங்கி செட்டி தெரு,
சென்னை—600 001